## உங்கள் குழந்தைகளுக்கு

# இருமல், ஜலதோஷம் இருந்தால்





# ஸிரோலின் 'ரோஷ்'

## கொடுத்து பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள்

இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற இந்தியாவின் குடும்ப மருந்து

உங்கள் குழந்தைகளுக்கு இருமல் அல்லது ஜலதோஷ மிருந்தால் அசட்டையாய் இருக்காதீர்கள்—ஸிரோலின் கொடுத்து அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள். அதன் இனிய ருசியை உங்கள் குழந்தைகள் பெரிதும் விரும்புவார்கள். ஸிரோலின் உங்களுக்கும் மிகச் சிறந்தது! அது உங்கள் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல், இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது, கபம் மற்றும் சளியைப் போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது.




**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

சுபகிருது, கார்த்திகை 10

# கல்கி

நவம்பர் 25உ 1962

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# புகை விடு தூது!

காரியத்துடன் ஒருவரை அவரது அலுவலகத்தில் காண நேரும் போது, உங்கள் வரவை அறிவிக்கப் பெரியதொரு புகைப்படலம் எழுப்பிக் காட்டவோ, வந்ததற்கு அறிகுறியாக கணக்கற்ற சிகரெட்டுத் துணுக்குகளையும் தீக்குச்சிகளையும் சிதறவிட்டுச் செல்லவோ தேவையே இல்லை.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம் - இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

*பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 17

# ஏமாறாதீர்கள்!

பிரதம மந்திரி ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் தமது எழுபத்திமூன்றாவது பிறந்த தினத்தன்று நிகழ்த்திய உரை பல விதங்களில் மக்கள் நெஞ்சைத் தொட்டது. வயதோடு அவரது பொறுப்புக்களும் அதிகமாகி வருகின்றன. சீன அபாயத்தால் இன்று பிரதமர் அவர்கள் தோளில் சார்ந்துள்ள பெரும் பளுவைத் திறம்பட வகிக்க முதல் தேவை நிதானமான, சமநிலை பிறழாத குணமாகும். சாதாரணமாக நேரு அவர்கள் எளிதில் உணர்ச்சி வசப்பட்டு, படபடப்புடன் நடந்துகொள்வார் என்பது நாடறிந்த விஷயம். அப்படிப்பட்டவர் தமது பிறந்த தினத்தன்று நிதானமாகவும், சமநிலையில் நிற்கும் மனத்தோடும் பிரச்னைகளை ஆற அமர விவாதித்திருப்பது முக்கியமாக மக்கள் உள்ளத்தில் பதிந்தது.

துடிப்புடன் செயலாற்ற வேண்டிய தருணமாயினும், அமைதியுடன் சிந்தனை செய்ய வேண்டிய சமயம் இது. சமயத்தின் தேவைக்கேற்பப் பிரதமர் நடந்து கொள்ளுவார் என்ற நம்பிக்கை சிறிது காலமாகவே ஏற்பட்டு வருகிறது. 'கனவுலகில் இருந்தோம்' என்று பிரதமரே ஒப்புக் கொண்டார். தமது பேரபிமானத்துக்கு உகந்த ஸ்ரீ கிருஷ்ண மேனனைப் பதவி நீக்கம் செய்தார். தற்போது சாந்தமாகவும், தெளிவாகவும் அவர் பேசியுள்ளது இந்த நம்பிக்கையை வளர்த்திருக்கிறது.

எனினும் ஒரே ஓர் இனத்தில் மட்டும் பிரதமரவர்களின் பழைய கனவு இன்னமும் கலையவில்லையோ என எண்ணத் தோன்றுகிறது. பெருத்த ராணுவ பலம் பொருந்திய சீனாவை நாம் முறியடிப்பதற்குப் பேருபகாரம் புரிந்து வரும் மேல்நாடுகளைப் பற்றி அவரது கொள்கை முற்றிலும் சீராகவில்லை என்பது அவரது பேச்சிலிருந்து வெளியாகிறது. 'நம்மிடம் அன்பினால் மட்டும் அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய நாடுகள் நமக்கு உதவி செய்யவில்லை; கம்யூனிஸம் பரவக்கூடாது என்ற சுய அக்கறையும் அவைகளுக்குண்டு' என்கிற உண்மையை இந்தச் சமயத்தில் நேருஜி சொல்லியிருக்க வேண்டியதில்லை. கம்யூனிஸ்ட் வல்லரசான ருஷியா தனது பழைய ஒப்பந்தங்களுக்கிணங்க நமக்குத் தளவாடங்கள் வழங்கும் எனக் கூறி அதனை அதிகமாகப் பாராட்டியிருக்கிறார். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் ராஜாஜி கூறியதுபோல அமெரிக்காவின் உதவி என்ற பாலில் நீரை ஊற்றி அதனை நீர்க்கச் செய்தும், ருஷியாவின் உதவி என்ற பாலைத் திரட்டுப்பாலாக இறுகச் செய்தும் பேசியிருக்கிறார் நேரு அவர்கள். ராஜதந்திரப்படி இரண்டுமே அநுசிதமாகும்.

ருஷியா, சீனா இரண்டுமே கம்யூனிஸ்ட் நாடுகள். பூமண்டலம் முழுவதையும் கம்யூனிஸ மயமாக்கிவிட வேண்டும் என்பது இரண்டுக்கும் பொது இலட்சியமாகும். இந்த இலட்சியத்தை அடைவதற்காக அவை வகுத்துக் கொண்டுள்ள சித்தாந்தங்களில் சில மாறுபாடுகள் இருப்பதாக இப்போது வதந்தி. இந்தப் பேதத்தைப் பெரிதாக எண்ணி, ஒரு கம்யூனிஸ நாட்டின் துராக்கிரகத்திலிருந்து நம்மைக் காக்க இன்னொரு கம்யூனிஸ நாடு உதவும், அல்லது அவர்கள் பிரிந்து போவார்கள் என நினைப்பது வடிகட்டின அசட்டுத்தனமாகும். 1904-ம் ஆண்டில் ருஷியாவுக்கும் ஜப்பானுக்குமிடையே போர் மூண்டபோது தடஸ்தமாக நின்ற சில தேசங்கள் ருஷ்யாவுக்கு உதவிய ஆயுதங்கள் எப்படிப் பயனற்றுப் போயின என்பதை ராஜாஜி சுட்டிக் காட்டினார். எனவே நேருஜி ருஷிய உதவிபற்றித் தற்போது

ஏமாந்து போனல் பின்னர் பல விபரீத விளைவுகள் ஏற்படக்கூடும் என எச்சரிக்கிறோம்.

மேல்நாடுகளின் உள் நோக்கங்களைப் பற்றித் தற்போது பேசுவது ராஜ நீதிக்கு உற்றதல்ல. நாம் அவர்களுக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறோம் என்பதைத் தயங்காது கூறி அவர்கள் மேலும் உதவுமாறு செய்வதே புத்திசாலித்தனம். மேலும் நெருக்கமாக மேல்நாடுகளுடன் நாம் இணைய வேண்டிய தருணத்தில் பேச வேண்டிய பேச்சல்ல பிரதமருடையது. இவ்விஷயத்தில் அவர் தம்மைக் கனவிலிருந்து தட்டி எழுப்பிக் கொள்ள வேண்டியது மிகமிக அவசியமாகும்.

ராஜதந்திரக் குறைவுடன் நடைபெற்று வரும் இன்னொரு விஷயத்தையும் இங்கு வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். 'யார் நண்பர்கள், யார் விரோதிகள் என்றே இந்நாள் வரை பிரதமருக்குத் தெரியாதிருந்தது' என்று நமது அந்நியத் தொடர்புகளைப் பற்றிப் பேசுகையில் ராஜாஜி ஒரு சமயம் குறிப்பிட்டார். நமது தமிழக அரசாங்கத்துக்கும் உள் நாட்டிலேயே தம் நண்பர் யார், விரோதி யார் என்று இன்னமும் தெரியவில்லை. கம்யூனிஸச் சார்புள்ளவர் என்று சந்தேகிக்கப்பட்ட மேனன் அவர்களைப் பிரதமர் விலக்கிய பின்னும், அசல் கம்யூனிஸ்டுக் கட்சி ஒத்துழைப்புடன் தமிழகத்தில் ''பாதுகாப்பு''க் குழு அமைத்திருப்பது அபாயகரமாகும்.

இவ்வி பார்லிமெண்ட்டில் முன்னணி எதிர்க் கட்சி கம்யூனிஸ்ட் கட்சி. ஆன போதிலும் மத்திய காப்புச் சபையில் கம்யூனிஸ்ட் கட்சியினர் இல்லை. இந்தியாவில் அநேக மாகாணங்களில் இவர்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றனர். மைசூரிலும் சென்னையிலும் மட்டுமே என்ன காரணமோ கம்யூனிஸ்ட்டுகளைச் சேர்த்துக்கொள்ள? சென்னை சட்டசபையில் இரண்டு கம்யூனிஸ்ட்காரர்கள் தான் இருக்கின்றனர். மற்ற கட்சியினர் ஒன்று சேர்ந்து பலமாக ஆட்சேபித்திருந்தால் கம்யூனிஸ்ட் கட்சியினரை அப்புறப்படுத்தி யிருக்கக் கூடும். பாதுகாப்புச் சபைக்குள் புகுவதே ஒரு பதவி என்று எண்ணிச் சிலர் அவசரப் பட்டதால் தவறு ஏற்பட்டு விட்டது.




நமது பி. டி. ஐ. செய்தி ஸ்தாபனத்துக்குக் கூடக் கிடைக்காத உள்நாட்டுச் செய்தியை பீகிங் ரேடியோ முழங்க வசதியாக இங்கிருந்து அந்நாட்டுக்குச் சூட்சுமக் கால்வாய்கள் இருக்கும்போது கம்யூனிஸ்ட் கட்சியினரைக் காப்புக் குழுவில் சேர்த்துக் கொள்வது மிகவும் அநுசிதம்.

'நமக்காக மட்டும் மேல் நாடுகள் உதவவில்லை; கம்யூனிஸத்தைத் தடுப்பதில் அவர்களுக்கு அக்கறை உண்டு' என்று பிரதமர் கூறியதில் பேருண்மை உண்டு. ஏனெனில் சீனு எல்லைப்புறச் சண்டையுடன் நிற்குமோ, இதனை மகா யுத்தமாக மூட்டி விடுமோ என்பதைச் சொல்வதற்கில்லை. யுத்தம் என்று நேரிட்டால் இது வெறும் நாடு பிடிக்கும் யுத்தம் மட்டும் அல்ல; ஜனநாயகத்தை வெல்லக் கம்யூனிஸம் தொடுத்த கொள்கைப் போராகவே ஆகும்.

எனவேதான் நமது எதிரி எந்த அரசியல் கட்சியைச் சேர்ந்தவனே அதே கட்சியைச் சேர்ந்த உள்நாட்டினரை தேசப் பாதுகாப்பு விஷயங்களில் சேர்த்துக் கொள்வது ஐயத்துக்கிடமாகிறது.

இப்போது இந்திய கம்யூனிஸ்டுக் கட்சி அரசியலிலிருந்தே விலகிக்கொள்ள வேண்டும் என்று ராஜாஜி ஆலோசனை சொல்லி யிருக்கிறார். தங்களுடைய கொள்கைகளுக்கும் நடவடிக்கைகளுக்கும் உலக கம்யூனிஸ்டு நாடுகளின் போக்கையே முன்னோடியாகக் கொண்டு செயலாற்றுவதே இந்திய கம்யூனிஸ்டுகளின் கொள்கை. ருஷ்யக் கொள்கையைப் பின்பற்றுபவர்கள் என்றும், சீனக் கொள்கைகளை ஆதரிப்பவர்கள் என்றும்; நடு நிலைமை வகிப்பவர்கள் என்றும் கட்சிக்குள்ளேயே நெடுங் காலமாக விவாதங்கள் இருந்து வந்தன.

இந்நிலையில் கம்யூனிஸக் கொள்கையைத் தழுவுபவர்களை எப்படித் தேச நலனுக்குகந்த பணிகளில் நம்பிப் பங்கு கொடுக்க இயலும்?

எனினும் தமிழக அரசாங்கமோ இந்த உண்மைகளை எடுத்துக் கூறிய

## ஊர் வம்பு










சாவன் பிரவேசப் பரீட்சையில் தேறிவிட்டார்




ருஷ்யா முன்பு வாக்குத் தந்ததுபோல ஆயுதம் அனுப்ப இணங்கியிருப்பதற்கு நேருஜி நன்றி கூறுகிறார்.

சுதந்திரக் கட்சியை ஒதுக்கி விட்டு, கம்யூனிஸ அங்கத்தினருடன் குழு அமைத்து விட்டது. அதோடு நில்லாமல் இந்தியாவுக்கு நேரிட்டுள்ள ஆபத்தை மறந்து, காங்கிரஸ் கட்சிக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டுவிட்டதாக எண்ணி, சீனாவிடம் காட்டவேண்டிய கோபத்தைச் சுதந்திரக் கட்சியின் மீதும், முக்கியமாக அதன் தலைவர் ராஜாஜி மீதும் கக்கி வருகிறது.

நாட்டில் கூட்டு சர்க்கார் ஏற்படாத இன்று, எதிர்க் கட்சிகள் அரசாங்கத்தின் குறைகளை எடுத்துக் காட்ட வேண்டியது கடமை.

சீனாவின் ஆக்கிரமிப்பை எதிர்ப்பதைப் போலவே ஜனநாயகத்தைக் காப்பதும் ஒரு கடமையாகும். ராஜாஜியின் யோசனைகளைக் கேட்டு உணர்வது அரசாங்கத்திற்கு நன்மையாகும். நேருஜியைக் காட்டிலும் நம்முடைய தமிழக அரசாங்கத்தார் தம்மை அதிக புத்திசாலிகளாக நினைத்துக் கொள்வது மடமையாகும் ;- அது பயங்கரமான ஏமாற்றத்தில் முடிய ஏதுவாகும்.

# ராஜ்யப் பாதுகாப்புக் குழு

தமிழ்நாட்டு அரசாங்கம் நிறுவியுள்ள பாதுகாப்புக் குழுவில் சேரச் சுதந்திரக் கட்சி மறுத்து விட்டதல்லவா? எதனால் இம்முடிவு எடுக்க நேரிட்டது என்பதை மக்கள் அறிவதற்காகத் தமிழக நிதி மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்களுக்கும் சுதந்திரக் கட்சியின் தமிழகத் தலைவர் ஸ்ரீ சா. கணேசன் அவர்களுக்குமிடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்தை இங்கு பிரசுரிக்கிறோம்:

## மந்திரிக்கு சா. கணேசன் கடிதம்

நவம்பர் 9, 1962

அன்புள்ள ஐயா,

தாங்கள் என்னுடன் தொலை பேசியில் சம்பாஷித்ததற்குத் தொடர்பாக, பாதுகாப்பு முயற்சி குறித்த எந்த ஒரு குழுவிலும் சேருவது பற்றிச் சுதந்திரக் கட்சியின் நிலைமையையும், எனது நிலைமையையும் தெளிவுபடுத்துவதற்காக இதனை எழுதுகிறேன்.

இந்திய சர்க்கார் உசிதமறிந்து பிறப்பித்துள்ள அவசர நிலையில் வழக்கமான நடைமுறைக்கு மாறுபட்ட செயல்களும், கொள்கைகளும் அவசியமாகின்றன.

கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களுக்கிடையே நிலவுவதாகக் கூறப்படும் வேறுபாடுகள் உண்மையெனக் கொண்டு நாம் வழி காண முடியாது. எனவே நமது பாதுகாப்பு முயற்சிகளில் அந்தக் கட்சியையோ அதன் அங்கத்தினர்களையோ நம்முடன் சேர்த்துக் கொள்ளக் கூடாது. அவ்வாறு சேர்த்துக் கொண்டால் பொது மக்கள் மனத்தில் குழப்பம் உண்டாகும். அது பயங்கரமான அபாயங்களுக்கு இட்டுச் செல்லும்.

எனவே, பாதுகாப்பு முயற்சிகள் சம்பந்தமாகக் குழுக்கள் அமைக்கும்போது சட்ட சபைகளிலுள்ள கம்யூனிஸ்ட் அங்கத்தினர்களை விலக்குவதாகத் தாங்கள் முடிவு செய்தாலொழிய நான் அக் குழுக்களில் சேர இயலாது; என் கட்சியின் அங்கத்தினர் யாரையும் அக் குழுக்களில் சேரப் பிரேரிக்கவும் இயலாது என்பதை என் சார்பிலும் கட்சியின் சார்பிலும் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

இதற்கு உட்பட்டு நானும் எனது கட்சியும் இன்றைய காப்பு முயற்சிகளில் எங்களால் இயன்றதவ்வளவையும் எவ்வகையிலும் செய்து ஒத்துழைக்கச் சித்தமாக இருக்கிறோம்.

ஏனைய ராஜ்யங்களில் இதே போன்ற நிலையில் உள்ள மற்றவர்கள் செய்த முடிவுக்கு ஒவ்வியதே இது என நம்புகிறேன்.

தாங்கள் இவ்விஷயத்தில் முடிவு கண்டு எனக்கு அநுமதி அளிக்கும் வரையில், இதனை நான் பத்திரிகைகளுக்கு வெளியிடமாட்டேன்.

சா. கணேசன்

## சா. கணேசனுக்கு மந்திரி கடிதம்

நவம்பர் 14, 1962

அன்புள்ள ஸ்ரீ கணேசன்,

பாதுகாப்பு முயற்சிகள் குறித்துக் குழுக்கள் நிறுவும்போது சட்ட சபைகளிலுள்ள கம்யூனிஸ்ட் அங்கத்தினர்களை விலக்குவதாகச் சர்க்கார் முடிவு செய்தாலொழியத் தாங்கள் அத்தகையதொரு குழுவில் சேர இயலாதென்றும் அதற்குத் தங்கள் கட்சியின் எந்த அங்கத்தினரையும் பிரேரிக்க முடியாதென்றும் தெரிவிக்கும் தங்களது கடிதம் நவம்பர் 9-ந் தேதி கிடைத்தது.

2. இன்று ஏற்பட்டுள்ளது போன்ற பயங்கரமான நெருக்கடியின்போது எல்லா அரசியல் பேதங்களையும் தள்ளி விட்டு, தங்களது சேவையை அளிக்க முன்வருபவர்களுக்கெல்லாம் தேசிய நோக்கத்துக்காக உழைக்க ஒரு வாய்ப்பளிக்க வேண்டும் என்ற ஒரே கருத்துத்தான் நாங்கள் தற்போது செய்திருக்கும் விதத்தில் குழு நிறுவத் தமிழ் நாட்டு அரசாங்கத்தை ஊக்கியுள்ளது. எனவே நமது பாதுகாப்பு முயற்சியிலிருந்து சட்டசபையில் உள்ள எந்தக் கோஷ்டியையும் விலக்குவதில்லையென்று நாங்கள் முடிவு செய்திருக்கிறோம்.

3. குழுவிலிருந்து ஒதுங்கி நிற்பதாகத் தாங்கள் தீர்மானித்திருப்பது எனக்கும், முதன் மந்திரிக்கும் பெருத்த வருத்தம் அளித்திருக்கிறது. தங்களது கட்சி தனது நிலையை மீண்டும் பரிசீலித்துப் பார்த்துக் குழுவில் சேர எப்போதேனும் விரும்பினால், அப்போது அதன் பிரதிநிதியைக் குழுவில் மெத்த மகிழ்ச்சியுடன் இணைத்துக் கொள்வோம்.

4. தப்பபிப்பிராயம் ஏற்படக்கூடிய சாத்தியக் கூறுகளைத் தவிர்ப்பதற்காகவும்பொது மக்கள் விஷயத்தை அறிந்திருக்க வேண்டுமென்ற எண்ணத்துடனும் நமது கடிதப் போக்குவரத்தை நான் பத்திரிகைகளுக்கு வெளியிடுகிறேன்.

எம். பக்தவத்ஸலம்

## மந்திரிக்கு சா. கணேசன் பதில்

நவம்பர் 15, 1962

அன்புள்ள ஐயா,

1962, நவம்பர் 14-ந் தேதியிட்ட தங்கள் கடிதம் கிடைத்தது. மற்ற ராஜ்ய அரசாங்கங்களும் முதன் மந்திரிகளும் முன்னெச்சரிக்கையுடன் காட்டிய உதாரணத்தைத் தங்கள் அரசாங்கம் பின்பற்றாமல், சர்வதேசக் கம்யூனிஸ்ட் இயக்கத்துடன் தொடர்பு கொண்டுள்ள ஸ்ரீ எம். கலியாணசுந்தரம் போன்ற ஒரு நெடுநாளைய கம்யூனிஸ்ட் அங்கத்தினரை — தனது கட்சி விசுவாசத்தை நிரூபித்தவரை — (காப்புக் குழுவில்) சேர்த்துக் கொண்டது வருந்தத் தக்கதாகும். எங்கள் கருத்தை மாற்றிக்கொண்டால் எமது கட்சிக்கு அளிக்கத் தாங்கள் ஓர் இடம் வைத்திருப்பதற்காக நான் நன்றி செலுத்துகிறேன். விவகாரங்கள் எப்படி முன்னேறுகின்றன என்பதை நாங்கள் கவனித்துவருவோம்.

சா. கணேசன்

மும்மூர்த்தியும் ஒன்ருக இசைந்த ஞானக்கடவுள் தத்தாத்ரேயருக்குச் செங்காலிபுரத்தில் தத்தகுடீரம் என்ற கோவிலெடுத்துக் கடந்த பதின்மூன்ருண்டுகளாகத் தத்த ஜயந்தி கொண்டாடப்பட்டு வருகிறது. இவ்வாண்டு டிசம்பர் 1-ந் தேதியிலிருந்து 11-ந் தேதி வரை இந்த உற்சவம் நடைபெறுகிறது. இவ்விழாவின் முக்கிய அம்சங்கள் லட்சார்ச்சனையும், யஜுர்வேத சம்ஹிதா பாராயணமும், ஹோமமும், சகஸ்ர கலசாபிஷேகமுமாகும். இவற்ருேடு செங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர், போலகம் பிரம்மஸ்ரீ ராமா சாஸ்திரிகள் முதலிய பல பெரியோர்களின் உபந்நியாசங்களும், இசைக் கச்சேரிகளும் நடைபெறும்.

லயன்ஸ் கிளப்பின் ஆதரவில் நடைபெறும் வித்தியா மந்திர் பள்ளியின் நிதிக்காக இம்மாதம் 4-ந் தேதி யன்று புது தில்லியில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் உதவிக் கச்சேரி நடைபெற்றது. ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் தலைமை வகித்த இக்கச்சேரி மூலம் ஒரு லட்சம் ரூபாய் வசூலாயிற்று. (1) ரசிகர் குழு (2) கிளப் நிர்வாகத்தினருடன் சதாசிவம் தம்பதி (3) 8-ந் தேதி யன்று வானெலி நிலயத்தில் தேசியப் பாதுகாப்பு நிதிக்காகக் கச்சேரி நிகழ்த்திய ஸ்ரீமதி எம். எஸ். அளித்த இருபது சவரன் எடையுள்ள பொன் நகைகளை ஸ்ரீ சதாசிவம் மந்திரி ஸ்ரீ கோபால் ரெட்டியிடம் வழங்குகிருர். (4) இந்தக் கச்சேரிக்கு வந்திருந்த காஷ்மீர் மன்னரை இசைவாணிக்கு வலப்புறம் காண்கிருேம். (5) வானெலி நிலயக் கச்சேரியில் ரசிகர் கூட்டம்.



# என்ன சேதி?

## கொடி விஷயம்

**கா**ங்கிரஸ்காரர்கள், மற்றக் கட்சியினரைத் தங்கள் கட்சிக் கொடிகளைப் பறக்க விட வேண்டாமென்றும் தேசக் கொடிக்கே பிராதான்யமளிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த நியாயமான கோரிக்கையை வரவேற்கிறோம். இப்போது மற்றக் கட்சிக்காரர்கள் செய்யும் பெருந்தன்மையான நடவடிக்கையை மதித்து, காங்கிரஸ்காரர்கள், தேசக் கொடி போலிருக்கும் தங்கள் கொடியை எதிர்காலத்தில் முற்றும் மாற்றிவிடப் போவதாக வாக்களித்தால் மிக நன்றாக இருக்கும். தேசக்கொடி, காங்கிரஸ் கொடி போலிருப்பதால் மற்றக் கட்சிக்காரர்கள் தேசக்கொடியைப் பார்க்கும் போதெல்லாம் சற்றுச் சலனம் அடைகிறார்கள். தேசக் கொடிக்கு உரிய கௌரவம் அளிக்கத் தயங்குகிறார்கள். நாட்டின் ஐக்கியத்திலும், சுதந்திரத்திலும், தேசக் கொடியின் கௌரவத்திலும் பூரண நம்பிக்கை கொண்ட காங்கிரஸ்காரர்கள், நாட்டுக் கொடியின் கௌரவத்தை உயர்த்தும் வகையில் நடந்து கொள்வார்களாக!

## தொழில் பிரமுகர் மறைவு

**த**மிழகத்தின் முக்கியமான தொழிற்சாலைகளில் ஒன்றான மேட்டூர் கெமிக்கல் ரசாயனத் தொழிற்சாலையின் நிர்வாக டைரக்டரும், புகழ்பெற்ற சேஷசாயி பிரதர்ஸ் கம்பெனியின் கூட்டுதாரருமான திரு கே. கே. ராமனின் மறைவு தொழில் உலகுக்கு ஒரு பெருத்த நஷ்டம். இருபத்தைந்து ஆண்டுகளாக இந்தத் தொழிற்சாலையின் வளர்ச்சியில் இடையறாமல் கவனம் செலுத்தி அதை ஒரு மாபெரும் ஸ்தாபனமாக வளரச் செய்து, இப்போதுள்ள



நிலைமைக்கு அதைக் கொண்டுவரத் திரு ராமனுடைய முயற்சியும் சிரத்தையும் தான் காரணமாக இருந்தன. மேல் நாடுகளுக்குச் சென்று தொழில் அநுபவங்களைப் பெற்று மேலும் இந்தத் தொழிற்சாலையின் அபிவிருத்திக்குப் பல திட்டங்களைப் போட்டுக் கொடுத்தார். சமீப காலங்களில் அவர் உடல் நலம் குன்றியிருந்தும் தொழில் பெருக்கத்தில் ஆர்வம் குறையாது உழைத்து வந்தார். அவரது மறைவுக்குப் பெரிதும் வருந்துகிறோம்.

இம்மாதம் ஐந்தாம் தேதி ராஷ்டிரபதி பவனத்தில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஒரு சிறிய கச்சேரி செய்தார். ராஷ்டிரபதி, டி. டி. கே., ஸ்ரீ சி. சுப்பிரமணியம் முதலிய பல பிரமுகர்கள் இன்னிசையை நுகர்ந்தனர். கச்சேரி நிகழ்வதையும், ரசிகர்களையும், ராஷ்டிரபதியின் மருமகள் ஸ்ரீமதி கோபாலுடன் ஸ்ரீமதி எம். எஸ். உரையாடுவதையும் காணலாம்.

# ஆதிமறைக்கு ஒரு பெருவிழா

**பா**ரத நாட்டின் பாரம்பரியச் செல்வங்களில் தலையாய சொத்தாக மதித்துத் தலை வணங்கிப் பின்பற்ற வேண்டியன வேதங்களாகும். பிறவி எடுத்த ஒவ்வொருவனும் தனக்கும், தன் குடும்பத்தினருக்கும், முன்னையருக்கும், சமூகத்துக்கும், மிருகங்கள் முதலிய சகல ஜீவராசிகளுக்கும், தேவதைகளுக்கும், செய்ய வேண்டிய கடமைகளை விதித்து, உயிர்க்குலம் முழுவதும் இம்மையிலும் மறுமையிலும் — சமூக ரீதியிலும், சமய ரீதியிலும் — பெருவாழ்வு எய்தப் பாதை வகுப்பது நான்மறைகளேயாகும். யாக யக்ஞாதிகளின் வழியே கர்ம மார்க்கத்தைக் கூறுவதுடன் ஞான மார்க்கத்துக்கு வழிகாட்டியாக இருப்பவையும் வேதங்கள் தாம். வேதங்கள் வெறும் நீதி நூல்களாக மட்டுமின்றி நமது பூர்விகப் பெருமக்களின் காவிய உள்ளத்தையும் விளக்கும் கலைச் செல்வங்களாகும்.

இந்து மதத்தின் எல்லாப் பிரிவினருக்கும் வேதமே பிரமாண நூலானபடியால்தான் எம்மொழியில் எந்நூலை உயர்வாகக் கூறும் போதும் அதனை வேதத்துக்குச் சமானமானது என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. வேதமே ராமாயணமாயிற்று; வேத நாயகன் ராமபிரானுடன் என்கிறோம். மகாபாரதம் ஐந்தாவது வேதம் என்கிறோம். 'ஆரியம் வேதமுடைத்து: தமிழ் திருவள்ளுவனார் ஓதுகுறட்பாவுடைத்து' என்கிறோம். திருவாய்மொழியைத் திராவிட வேதம் என்கிறோம். தேவாரத்தைத் தமிழ் மறை என்கிறோம்.

இப்படித் தன்னோடு ஒப்பிடுவதால் பிறநூல்களுக்கும் பெருமை தரும் வேதம் எழுதாக் கிளவியாக, மறை என்ற பெயருக்கு ஏற்ப மிகவும் பாதுகாப்பான முறையில், வாய் மொழியாகவே ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக ஒரு பிதுரார்ஜிதச் சொத்தாக வாழ்ந்து வந்திருக்கிறது. தந்தை தேடி வைத்த சொத்தை மகன் முறையாகப் பேணாது தேய விடுவது போல் சில நூற்றாண்டுகளுக்கு முன்பிலிருந்து வேத அப்பியாசத்தை நாம் வெகுவாகத் தேய விட்டிருக்கிறோம். பல்கிப் பெருகி வனாந்தரமாகத் தழைத்திருந்த வேதங்களைப் பகுத்து, ஒவ்வொரு வேதத்தையும் ஒவ்வொரு ரிஷியிடம் அளித்தார் வியாஸ பகவான். மேலும் வேதங்களை ஆயிரத்து நூற்று முப்பத்தொரு சாகைகளாகப் பிரித்தருளினார் வியாஸ மகரிஷி. அவ்வளவு சாகைகளில் தற்போது ஒன்பதே பிரிவுகள்தாம் பிரசாரத்தில் உள்ளன வென்றால் நமது ஆன்மிக தனத்தில் எவ்வளவு இழந்திருக்கிறோம் என்பது புரியும். இந்த ஒரு சில சாகைகளை முறைப்படி அத்தியயனம் செய்தவர்களின் எண்ணிக்கையும் கடந்த சில தலைமுறைகளாக க்ஷீணித்துக்கொண்டே வந்திருக்கிறது.



வேதமாதாவின் திரு அருளாலும், வேத வியாஸரின் அநுக்கிரகத்தாலும் சுப சூசகங்கள் நாட்டில் தோன்றத் தொடங்கியுள்ளன. இவ்வாறு மீண்டும் வேத நெறியோங்க ஆக்கமும், ஊக்கமும், ஆன்மீக பலமும் அளிப்பவர்களில் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகளை முதன்மையாகக் குறிப்பிட்டு அஞ்சலி செலுத்த வேண்டும். ஸ்ரீ சுவாமிகளின் நல்லாசியுடன் நடைபெற்று வரும் ஸ்தாபனங்களில் வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையும் ஒன்றாகும். இருபதாண்டுகளாக நடைபெற்று வரும் இந்தச் சபை சென்ற அக்டோபர் மாதம் பன்னிரண்டாம் தேதியிலிருந்து பதினைலாம் தேதிவரை புது தில்லியில் நடத்திய அகில பாரத வேத சாகா வித்தியார்த்திகள் சம்மேளனம் வேதப் பெரு விழாவாகவே அமைந்து விட்டது.



மறைநெறியைக் காத்துத் தரப்போகும் இளம் பயிர்கள்.

அரசியல் குழப்பம் எவ்வளவோ சூழ்ந்திருந்த போதிலும் பாரதத்தின் தலைநகராகிய தில்லியில் எட்வர்ட் சதுக்கத்தில் (Edward Square) இதிகாச கால இந்திரப் பிரஸ்தத்தின் ஆன்ம ஒளி மீண்டும் வீசலாயிற்று. பொருளாதார உயர் அதிகாரி டாக்டர் பி. எஸ். லோகநாதன் அவர்களின் தலைமை விழாக் குழுவினருக்குக் கிடைத்தது நல்லதிருஷ்டமாகும். வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையுடன் உடலும் உயிருமாக இணைந்துள்ள ஸ்ரீ எஸ். அண்ணாதுரைஐயங்கார் அவர்களை நிர்வாகக் காரியதரிசியாகவும் ஸ்ரீ ராமேஷ்வர் தாகுர், ரஸிக் விஹாரி ஜோஷி, கிரிதரலால் கோஸ்வாமி, டாக்டர் பார்க்கவா ஆகிய பிரமுகர்களை இதர அங்கத்தினர்களாகவும் கொண்ட குழுவின் நன் முயற்சியால் நாட்டின் பல பாகங்களிலும் நடைமுறையிலுள்ள வேதசாகைகளின் பிரதிநிதிகள் தில்லியில் ஏராளமாகக் கூடினர். வேத விற்பன்னர்களும், வேதம் போதிக்கும் ஆசாரியர்களுமாக நூறு பேரும், வேதம் பயிலும் மாணவர்கள் ஐம்பத்தியொருவரும் இந்தியாவின் பல ராஜ்யங்களிலிருந்து வந்திருந்து விழாவில் கலந்து கொண்டனர். குஜராத், ஒரிஸ்ஸா ராஜ்யங்களிலிருந்து அதர்வ வேதப் பிரதிநிதிகளும், மத்தியப் பிரதேசத்திலிருந்தும் காசியிலிருந்தும் யஜுர் வேதத்தினரும், மகாராஷ்டிரத்திலிருந்து ரிக்வேதிகளும், தென்னிந்தியாவின் பல பகுதிகளிலிருந்து சாம, யஜுர், ரிக் வேதப் பிரதிநிதிகளும் பங்கு பற்றினர். இதுபோல அகில இந்திய ரீதியில் வேதத்துக்காக ஒரு மகாநாடு நடைபெற்றது நமது சமய சரித்திரத்தில் விசேஷமானதொருசம்பவமாகும். பிரதிநிதிகளுக்குப் பிர்லா மந்திரத்தில் சகல வசதிகளும் செய்து தரப்பட்டன. இந்த வேதோற்சவத்தில் கலந்து கொண்டவர்களில் டாக்டர் மண்டன மிச்ரா, கல்கத்தா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சாஸ்திர ரத்னாகர பட்டாபிராம சாஸ்திரிகள், துர்க்கா மோஹன் பட்டாச்சாரியா, தர்ப்பங்கா பல்கலைக் கழகத் துணைவேந்தர் உமேஷ் மிச்ரா, கபூர்த்தலா பரமேஷ்வரானந்த சாஸ்திரி, பாட்னாவைச் சேர்ந்த ஜகந்நாத மிச்ரா, காசிப் பேராசிரியர் கே. வி. பட்டாச்சாரியா, ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதி அய்யர், டாக்டர் வே. ராகவன் ஆகியோர் குறிப்பிடப் பட வேண்டியவர்கள்.



பி. எஸ். லோகநாதன்

அக்டோபர் பன்னிரண்டாம் தேதி காலையில் பிர்லா மந்திரிலிருந்து எட்வர்ட் சதுக்கத்தில் அமைக்கப்பட்டிருந்த சம்மேளனப் பந்தலுக்கு வேத வியாஸரின் திருஉருவப் படம் ஊர்வலமாக எடுத்து வரப்பட்டது. வழி நெடுக வேத கோஷம் தான். புதுதில்லியில் 'எண்ணில் மறை ஒலி பெருகிய' புண்ணிய காலமாகத் திகழ்ந்தன விழா நடைபெற்ற மூன்று நாட்களும். விக்நேசுவர பூஜையுடன் விழா தொடங்கியது.

குன்றக்குடி வேத அத்யயன பாடசாலையிலிருந்தும், காஞ்சிபுரம், மன்னார்குடி, கங்காதரபுரம், நாவல்பாக்கம் போன்ற இடங்களிலிருந்தும் வந்து கலந்துகொண்ட இளம் வித்தியார்த்திகளின் வேதப் புலமையும் தூய்மையும் கருத்தை வெகுவாகக் கவர்ந்திழுத்தன. பால் மணம் மாறாத அத்தனை பச்சிளம் பாலகர்கள், முதலும் முடிவுமற்ற பல நீண்ட வேத சாகைகளை மனனம் செய்து சாஸ்திர வழுவின்றிப் பயின்று வரும் சாதனை பாராட்டப்பட வேண்டியது தல்லவா? இளம் சிறார்களின் இனிய வேத



டி. எல். வேங்கடராமய்யரும், எல். எஸ். பார்த்தசாரதி அய்யரும்; 'வர்ணக் கிரமம்' நடக்கிறது; காமகோடி பீட ஆஸ்தான வித்வான் ராமஸ்வாமி சாஸ்திரிகளிடமிருந்து மந்திரி ஸ்ரீ மாலி பிரசாதத்தைப் பெறுகிறார்.

கானத்தைக் கேட்டு மகிழ்ந்த பாராயண மன்றக் காரியதரிசி ஸ்ரீ சத்தியநாராயண சின்ஹா அவர்கள் உடனே நூற்றியொரு ரூபாய் சம்பாவனை செய்தது குறிப்பிடத் தக்கது.

கோகர்ணத்தைச் சேர்ந்த குலபதி பிரம்மரிஷி தைவராத சர்மா அவர்கள், வேத அத்யயனப் பயிற்சிக்கு ஊக்கம் அளிக்குமாறு அங்கு கூடியிருந்த பெருமக்களைக் கேட்டுக்கொண்டார். 'கான்வெண்ட்' பள்ளிகளில் தம் குழந்தைகள் படிப்பதைப் பெருமையாகக் கருதும் அதே உணர்ச்சியோடு வேதப் பயிற்சி அளிப்பதற்கும் பெற்றோர்கள் முன் வர வேண்டும் என்ற கருத்தை எல்லோர் மனத்திலும் பதிய வைத்தார். மாலையில் மத்திய அரசாங்க அமைச்சர் டாக்டர் ஸ்ரீமாலி அவர்கள் முறைப்படி சம்மேளனத்தைத் தொடக்கி வைத்தார். அமைச்சர் தம் உரையில், பாரதத்தின் பெருமைக்குச் சான்றுகளாக விளங்கும் வேத பாரம்பரியத்தை வளர்க்கும் பணியில் மக்கள் ஈடுபட வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார். வேத வளர்ச்சிக்குக் காமகோடி பீடாதிபதிகள் புரியும் பேருபகாரத்தையும், வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையின் பணியையும் சிலாகித்துப் பேசிய மந்திரி தட்சிண பாரதத்தில் சம்பிரதாயம் வழுவாது சாஸ்திரங்கள் காக்கப்பட்டு வருவதைப் பாராட்டினார். சம்ஸ்கிருத வளர்ச்சிக்கு இயன்ற அளவு சர்க்கார் சகாயம் கிடைக்கச் செய்ய முயல்வதாகக் கூறினார்.



அண்ணாதுரை ஐயங்கார்

உதவி உள்துறை அமைச்சர் ஸ்ரீ தத்தார் அவர்கள் ஸ்ரீமாலியைத் தொடர்ந்து பேசகையில் நமக்கு முன்னோர்கள் அருளிச் சென்றுள்ள வேத பொக்கிஷத்தைத் தக்கபடி பாதுகாத்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியதின் முக்கியத்துவத்தைச் சுட்டிக் காட்டினார். அன்று டாக்டர் பி. எஸ். லோகநாதன் நிகழ்த்திய வரவேற்புரையும், அகில பாரதீய சம்ஸ்கிருத சம்மேளனக் காரியதரிசி டாக்டர் மண்டன மிச்ராவின் பிரசங்கமும் சிறப்பாக அமைந்தன.

வாரணாசியைச் சேர்ந்த பேராசிரியர் ஸ்ரீ கே. வி. சட்டோபாத்யாயா அவர்கள் ''சம்மேளனத்தின் செயல்கள்'' என்ற தலைப்பின் கீழ் உரை நிகழ்த்திய பொழுது, ஆசாரிய ஸ்வாமிகளின் உளப்பாங்கிற்கிணங்க, நாடெங்கும் பல்வேறு பிரிவுகளில் பரவலாக வேத அத்யயனப் பயிற்சிப் பாடசாலைகளை நிறுவும் பணியின் அவசியத்தையும் அதற்கான வழி முறைகளையும் குறித்து விரிவாக எடுத்துரைத்தார். தர்ப்பங்கா பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் உமேஷ் மிச்ரா அவர்கள், ''வேதமும் — அதன் உப அங்கங்களும்'' என்ற தலைப்பில் அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்.

மறுநாள் முறைப்படி வேத பாராயணங்களுடன் தொடங்கிய நிகழ்ச்சிகளில், பாட்னா சர்வகலாசாலையைச் சேர்ந்த பேராசிரியர் ஜகதானந்த் ஜா அவர்களின் 'உப வேதங்கள்' குறித்த உரையும், மஹா மஹோபாத்யாய ஸ்ரீ பரமேஷ்வரானந்த சாஸ்திரி அவர்களின் 'வேதமும் அதன் ஆறங்கங்

களும்' பற்றிய சொற்பொழிவும் சிரமாக அமைந்தன.

பிற்பகல் அகில பாரத வேத பரிபாலன சம்மேளனத்தின் கன்வீனர்களான டாக்டர் துர்கா மோஹன் பட்டாச்சார்யா, மத்திய அரசாங்கத்தின் உள்துறை மந்திராலய உதவிக் காரியதரிசியான ஸ்ரீ எஸ். கே. சிங், டாக்டர் சட்டோபாத்யாயா, ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதி ஐயர், ஸ்ரீ வி. எஸ். ராமச்சந்திரன் ஐ. ஸி. எஸ்., ஸ்ரீ வி. ஆர். ஸ்வாமிநாதன், ஸ்ரீ அக்னி ஹோத்ரம் தாத்தாச்சாரிய ஸ்வாமி, டாக்டர் சர்மா முதலிய பேரறிஞர்கள் முறையே தங்களின் செயல் பிராந்தியங்களான வங்காளம் — ஒரிஸ்ஸா, குஜராத்—உத்தரப்பிரதேசம், பஞ்சாப், சென்னை, ஆந்திரப் பிரதேசம், கேரளம், மஹாராஷ்டிரம் ஆகிய இடங்களில் வேத தர்ம பரிபாலன சபையின் பணிகளைக் குறித்த அறிக்கைகளைச் சமர்ப்பித்தார்கள்.

அன்று வேதபரிபாலன சபையினரது ஆதரவில் இரண்டு நூல்கள் வெளியிடப்பட்டன. டாக்டர் வே. ராகவன் எழுதிய 'வேத சாகைகளின் இன்றைய நிலைமை' என்ற நூலை பரமேஷ்வரானந்த சாஸ்திரியும், ஸ்ரீ எல். எஸ். பார்த்தசாரதி ஐயர் அவர்கள் எழுதிய 'கிருஷ்ண யஜுர்வேத — தைத்திரிய சாகைபற்றிய ஒரு சில குறிப்புகள்' என்ற மற்றொரு நூலை டாக்டர் சர்மாவும் சபையினருக்கு அறிமுகம் செய்து வைத்து உரை நிகழ்த்தினார்கள். பயனுள்ள பல கட்டுரைகளைத் தாங்கி வந்த விழா மலர் ஸ்ரீ வி. எஸ். ராமச்சந்திரன் அவர்களால் வெளியிடப்பட்டது. இரவில், 'இசையும் — சாம வேதமும்' என்ற தலைப்பில் டாக்டர் வே. ராகவன் அவர்களால் ஓர் ஆராய்ச்சிக் குறிப்பேடு வாசிக்கப்பட்டது. சாம வேதமும் சப்த ஸ்வரமும் என்பது பற்றி வானொலியைச் சேர்ந்த சங்கீத கலாநிதி ஸ்ரீ டி. கே. ஜயராமய்யர் உரை ஆற்றினார்.

ஸ்ரீ பட்டாபிராம சாஸ்திரிகளும் காஞ்சி மடத்தின் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ ராமஸ்வாமி சாஸ்திரிகள், மன்னார்குடி வேத பாடசாலையைச் சேர்ந்த ஸ்ரீ தேசிகன், தில்லி ஸ்ரீ வைஷ்ணவ வைதிக சமாஜத்தைச் சேர்ந்த ஸ்ரீ வேதாந்தம், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கனபாடிகள் ஆகியோரும் வேத நுணுக்கங்களைக் குறித்து விரிவுரையாற்றினர். வேத ஒலிகளின் சேர்க்கை, அவற்றின் பிறப்பிடம், அவை உருவாகும் முறை இவற்றை விளக்கும் வர்ணக் கிரமங்களை இவர்கள் விவரித்தது பாமரர்களையும் வெகுவாகக் களிப்பித்தது.

கடைசி நாளன்று, 'வேதங்களில் உலக நலம்' என்பது குறித்து அக்னிஹோத்திரம் தாத்தாசார்ய ஸ்வாமிகள் வெகு அழகாக எடுத்துரைத்து, நம்முடைய வேதங்களில் காணப்படும் பரந்த நோக்கத்தை நினைவூட்டினர். நமது சமயத்துக்குப் புறம்பான மதத்தினர்களிலும் பூரண நிலையை அடைந்த மனிதர்கள் உண்டு என்று மொழிந்த வியாஸ பகவானின் கருத்துக்களை எடுத்துக் கூறி ஐக்கிய உணர்வுக்கு வேதம் எவ்வளவு உதவுமென்பதை அவர் விளக்கினர்.

அன்று ஞாயிற்றுக் கிழமையாக அமைந்து விட்டிருந்ததனால் வேத வித்தியார்த்திகளின் பாராயணக்கூட்டங்களுக்கும், பேரறிஞர்களின் சொற்பொழிவுகளுக்கும் ஆஸ்திகர் கூட்டம் நிரம்பி வழிந்தது. அன்றுதான் மகாநாட்டுத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு, சம்மேளன நிகழ்ச்சிகள் முடிவடைந்தன.

மறைப்பயிற்சிக்கு வேண்டிய உற்சாகமளித்து வேத தீபம் மங்காது காக்கும் பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ள வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையினரது குறிக்கோள்கள் அனைத்தும் நிறைவேற ஏராளமான நிதியம் தேவை. இந்த மாபெரும் திட்டம் இனிது நிறைவேற வேத சிரஸில் பாதம் பதிக்கும் பரதேவதை அருள்புரிய வேண்டும். டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரவர்களைத் தலைவராகவும், கல்கி ஸ்ரீ சதாசிவம் அவர்களைக் காரியதரிசியாகவும், கலைமகள் ஸ்ரீ என். ராமரத்தினம் அவர்களைப் பொக்கிஷதாரராகவும் கொண்டு ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளின் ஆசியுடன் இயங்கும் வேத ரக்ஷண நிதிக்கு உதவுமாறு ஸ்ரீ அண்ணாதுரை அய்யங்கார் கேட்டுக் கொண்டார்.

21-10-62-ல் அமைச்சர் ஸ்ரீ வி. ஆர். பட்டாபிராமனால் தொடங்கி வைக்கப்பட்டதொரு சம்மேளன நிகழ்ச்சியும் ஒரு வார காலத்துக்கு, தில்லியின் உட்பிரிவுகளான கரோல்பாக், லோதி காலனி, மோதி பாக், வினயநகர் போன்ற பகுதிகளில் நடைபெற்றது.

வேத நெறி என்பது வடக்கிலிருந்து தெற்கே பரவியதாகத்தான் வரலாற்று வல்லுநர்கள் சொல்வார்கள். ஆனால் அந்த நெறி ஒரு சின்னஞ் சிறு பொறி அளவினதாய் நலிவுற்ற இன்று அதனை விசிறிப் பாரதத்தின் தலைநகரில் ஓர் அகலாக ஏற்றி வைத்த பெருமை தென்னகத்தையே சாரும்.

# நாட்டின் பாதுகாப்புக்கு

**உங்கள்**

# சேமிப்பு தேவை

புதிய

**10 ஆண்டு டிபென்ஸ் டெபாஸிட் சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்யுங்கள்**

வரி இல்லாத 4½ சத வீத வட்டி ஆண்டுதோறும் அளிக்கப்படும்

டெபாஸிட்டுகள் 50/ன் பெருக்கங்களாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது

டெபாஸிட் செய்யக்கூடிய அதிகபட்ச தொகை - தனி நபர் ரூ. 25,000/ இருவர் கூட்டாக ரூ. 50.000/-

சர்டிபிகேட்டுகளை வாங்குவதற்கான டெபாஸிட்டுகள் ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் எல்லா ஆபீஸ்கள் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் கிளைகள் மற்றும் அரசாங்க டிரெஷரி அலுவலை கவனிக்கும் அதன் துணை பாங்குகளிலும் டிரெஷரிகளிலும், உப டிரெஷரிகளிலும் ஏற்றுக் கொள்ளப்படும்.

**இந்தியாவின் பாதுகாப்பு சக்தியை பலப்படுத்துங்கள்**



## தேசீய சேமிப்பு நிறுவனம்

DA 62/555

# நந்தவனம்

சோமு

## 47. அழைப்பு!

"இன்று நாம் இந்தத் தாமிரவருணி ஆற்று மணலில் சந்தித்திருப்பதற்கும் சுடலையாண்டிக்கும் என்ன சம்பந்தம்? நாம் இங்கே சந்தித்ததற்குக் கூட அவர்தான் காரணம் என்று சொல்லுகிறீர்களே...!"

இவ்வாறு மண்டபத்து இளைஞனைக் கேட்டார் லாலா ராம்சிங். அந்தத் தம்பி சொன்னான்:

"ஐயா! சித்திரானந்தர் என்ற அந்தப் பெரியவர் நீண்ட நாட்கள் கழித்து மறுபடியும் கல்கத்தாவுக்கு வந்தார் என்று சொன்னேன் அல்லவா? அப்படி அவர் வந்ததால் செண்பக சுந்தரியின் வாழ்வில் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டது.

பல ஆண்டுகளாகக் கல்கத்தாவிலேயே வாழ்ந்து வந்த சுந்தரி, தனது வாழ்நாள் முழுவதையும் அந்த நகரத்திலேயே கழித்துவிட வேண்டும் என்றுதான் திட்டமிட்டிருந்தாள். அதோடு தனது அருமைக் குமாரனுக்குச் சென்னை நகரத்தைப் பற்றியும், தமிழ் நாட்டின் தென் கோடியிலேயுள்ள திருநெல்வேலி மாவட்டத்தைப் பற்றியும், சிங்கம் புத்தூர் வட்டாரத்தைக் குறித்தும், எவ்விதமான ஆவலும் ஏற்படக் கூடாது என்றும் அவள் ஆசைப்பட்டாள்! மறைந்த தனது தந்தையைப் பற்றியும், தன்னுடைய முன்னோர்களின் வாழ்க்கை வரலாறு பற்றியும், எவ்விதமான செய்தியும் தனது குமாரனுக்குத் தெரியக் கூடாது என்று மனமார எண்ணினாள் செண்பகசுந்தரி. இது காரணமாகச் சிவகாமிநாதன் என்ற அந்தப் புதல்வன் தனது தந்தையைப் பற்றியும் பாட்டனாரைப் பற்றியும் என்ன கேட்டாலும் ஏதோ தெளிவற்ற விடைகளைக் கூறிச் சமாளித்து வந்தாள் செண்பகசுந்தரி!

காலச் சக்கரம் சுழல்கிறது என்றும், காலப் பறவை சிறகடித்துப் பறக்கிறது என்றும், இன்னும் பல விதமாகவும், காலத்தின் போக்கை நம்முடைய அறிஞர்கள் வர்ணனை செய்கிறார்கள் அல்லவா? அந்த முறையில் சக்கரம் சுழன்றது, பறவையும் பறந்தது! சிவகாமிநாதனும் விவரம் தெரிகிற வயதைத் தாண்டி, இனிமேல் விவரங்களை ஆராய்ந்து பார்க்கிற இளைஞனாக வளர்ந்தான்! அவனுடைய ஓவியக் கலை அந்தக் கல்கத்தா நகரத்து மக்களின் கவனத்



தைக் கவர ஆரம்பித்தது. முக்கியமாக அந்த நகரத்துக் கலைப் பள்ளிகளிலே மிகவும் புகழ்பெற்ற ஒரு பள்ளியின் தலைமையாசிரியரைப் பெரிதும் கவர்ந்தன சிவகாமிநாதனுடைய ஓவியங்கள்!

இந்த ஒரு காரணத்தினால் செண்பக சுந்தரியின் வாழ்விலும் சிவகாமிநாதனின் வாழ்விலும் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட விருந்தது!

வட இந்தியாவில் காடு மூடிக் கிடந்த சில பகுதிகளிலே, புதை பொருள் ஆராய்ச்சியாளர் சிலர், பாழடைந்த

கோவில்களிலேயுள்ள வடநாட்டுச் சுவர் ஓவியங்களுக்கும், தென்னாட்டிலுள்ள பனைமலை, சித்தன்னவாசல் ஓவியங்களுக்கும், ஒரு நெருங்கிய இணைப்பு இருப்பதைக் கண்டார்கள். இந்த ஒருமைப்பாடு அவர்களை மிகவும் கவர்ந்தது. முக்கியமாகக் கல்கத்தா ஓவியப் பள்ளியின் தலைமையாசிரியரைப் பெரிதும் கவர்ந்தது இது! அவர் வயதுமுதிர்ந்த ஒரு கிழவர். தமது முதுமைப் பருவத்தில் தென்னாட்டுக்கு வந்து தங்கி இந்தத் தென்னாட்டு ஓவியங்களை ஒப்பிட்டு ஆராய்ந்து பார்ப்பதற்கு வேண்டிய உடல் வலிமை அவருக்கு இல்லை. எனவே அவர் சிவகாமிநாதனிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தார். தமிழ் நாட்டுக்குச் சென்று சில மாதங்கள் தங்கிப் பனைமலையிலுள்ள சுவர் ஓவியங்களையும், சித்தன்னவாசல் ஓவியங்களையும் பார்த்து ஆராய்ந்து, அவற்றைப் போலவே அதே வர்ணச் சேர்க்கைகளோடு படிவங்கள் எழுதிக் கொண்டு வரவேண்டும் என்று சிவகாமிநாதனிடம் சொன்னார் அந்த முதியவர். சிவகாமிநாதன் இந்தப் பணியைச் செய்வதாக ஒப்புக் கொண்டு வீட்டுக்கு வந்தான். தாயாரிடம் சொன்னான். அவ்வளவுதான்; தலையிலே இடி விழுந்தவள் போல் அப்படியே சாய்ந்து விட்டாள் செண்பகசுந்தரி.



''வந்ததா ஆபத்து'' என்றாள் சுந்தரி. மகனுக்கு அன்னையின் அதிர்ச்சி புரியவில்லை. ஆனாலும் அவளோடு வாதாடவில்லை.

''அம்மா! அந்தப் பேராசிரியர் இப்படி ஒரு யோசனை சொன்னார். உனக்கு இஷ்டமில்லையென்றால் நான் ஒப்புக் கொள்ளுவேனா? இதற்கு நீ ஏன் கலங்குகிறாய்?'' என்று ஆறுதல் சொன்னான் சிவகாமிநாதன்.

அன்று இரவு முழுவதும் சிவகாமிநாதன் படுக்கையில் படுத்துக்கொண்டே தீவிரமாக யோசனை செய்தான். முன்னைப்போல் சின்னக் குழந்தையில்லையே அவன்! எந்த விஷயத்தையும் நன்றாக ஆராய்ந்து பார்க்கக் கூடிய சக்தி இருந்தது அவனுக்கு. தனது குழந்தைப் பருவத்து நிகழ்ச்சிகளையெல்லாம் நினைவுபடுத்திப் பார்த்தான்.

சித்திரமே வரையக் கூடாது என்று தாயார் தன்னைத் தடுத்தது. அந்த நினைப்பையே மாக்கடிப்பதற்காகத் தனக்கு நாட்டியம் கற்பித்தது. பிறகு சித்திரானந்தர் வந்து 'அப்பாவுக்குப் பிள்ளை' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்துப் பிறகு வார்த்தைகளை மென்று விழுங்கியது. பிறகு சில ஆண்டுகள் கழித்து அவரிடமிருந்து கடிதம் வந்தது — எல்லா நிகழ்ச்சிகளையும் எண்ணிப் பார்த்தான் சிவகாமிநாதன்.

அவனுக்கு இப்பொழுது புரிந்தது. தனது தந்தை ஒரு பெரிய ஓவியக் கலைஞராக இருந்திருக்க வேண்டும்; அவருடைய வாழ்விலே சித்திரக்கலையி

ளுல் ஏதோ ஒரு பெரிய விபரீதம் நிகழ்ந்திருக்க வேண்டும்: தனது அருமை அன்னையையும் அவளுடைய மெல்லிய இதயத்தையும் தாக்கிச் சிதற அடித்த பெருந் துயரம் ஏதோ நிகழ்ந்திருக்க வேண்டும்; அதனுல்தான் மறந்தும் மறையாமல் நிற்கிற ஒரு பெரிய ஏக்கம் ஒரு மாபெரும் துக்கம் அன்னையின் உள்ளத்தை அனலாகச் சுடுகிறது!

இவ்வாறு எண்ணினுன் சிவகாமிநாதன். இந்த எண்ணம் அதிகரிக்க அதிகரிக்க அவனுடைய இதயத்தில் கட்டுக்கடங்காத பெரும் ஆவல் எழுந்தது. அந்த வரலாற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று! ஆனுல் அதை எப்படித் தெரிந்து கொள்வது? தன்னுடைய பிறப்பு, தனது தந்தையின் வரலாறு, தன்னுடைய அன்னையின் உள்ளத்திலே, ஆழத்திலே புதைந்து கிடக்கும் அந்தச் சோகக் கதை — இதையெல்லாம் அன்னையிடம் எப்படிக் கேட்பது...?

சிவகாமிநாதனுக்கு அந்த யோசனையைத் தாங்க முடியவில்லை. தமிழ் நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்று சொன்ன மாத்திரத்தில் அப்படியே அதிர்ச்சி அடைகிற அன்னையிடம் அந்தத் துன்பக் கதைகளையெல்லாம் எப்படிக் கேட்பது?

சிவகாமிநாதன் யோசித்தான். தனது அன்னையின் வாழ்விலே பொதிந்துள்ள அந்த வரலாறுகளையெல்லாம் நன்ருகத் தெரிந்துள்ளவர் வேறு யார் உண்டு? அன்னையைத் தவிர அந்தத் துயரக் கதையை அறிந்தவர் வேறு யார் இருக்க முடியும்?

சித்திரானந்தரின் தோற்றம் சிவகாமிநாதனின் கண் முன் நின்றது.

சித்திரானந்தர் — ஆம், நிச்சயம் அவருக்கு இந்த வரலாறுகள் எல்லாம் தெரியும்! அவரிடம் ஓரளவு உரிமையோடு இந்த நிகழ்ச்சிகளைக் கூறும்படி கேட்கலாம். ஆனுல் அவர் எங்கே இருக்கிருர்? இரண்டொரு நாட்களில் வருவதாகச் சொல்லிச் சென்றவர் பிறகு வரவில்லையே.

மறுநாள் சிவகாமிநாதன் ஓவியப் பேராசிரியரைச் சந்தித்தான். அவர் தன்னிடத்திலும் தனது ஓவியத் திறமையினிடத்திலும் வைத்துள்ள நம்பிக்கைக்கு நன்றி செலுத்தினுன்.

''ஐயா! தமிழ்நாட்டுக்குச் சென்று சில மாதங்கள் தங்கியிருந்து, அங்குள்ள சுவர் ஓவியங்களையெல்லாம் படிவம் செய்து வருவது, எனக்கும் மிகவும் உகப்பான ஒரு காரியந்தான். சந்தேகமில்லை. ஆனுல் இப்போது என் அன்னையின் உடல்நிலை சீராக இல்லை. அன்னையை இங்கே தனியாக விட்டு விட்டுச் சென்னைக்குச் செல்வது இயலாது. அவளுடைய நிலை இருந்தியதும் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுகிறேன். எனக்குச் சில மாதங்கள் தவணை கொடுங்கள்!'' என்று சொன்னுன் சிவகாமிநாதன். பேராசிரியர் கொடுத்த அந்தப் பொறுப்பைத் தட்டிக் கழிக்க அவன் விரும்பவில்லை. அதே சமயம் அன்னையின் விருப்பத்துக்கு மாருக எதுவும் செய்யவும் அவனுடைய மனம் இடம் தரவில்லை. உள்ளத்தின் அந்தரங்கத்திலோ தமிழ் நாட்டுக்குச் சென்று பண்மலை ஓவியங்களையும் சித்தன்ன வாசல் ஓவியங்களையும், காண வேண்டும் என்றும், அவற்றிலே உள்ள அற்புதமான கலை நுட்பங்களை ஆராய வேண்டும் என்றும், ஆசை துடி துடித்தது!

இப்படி யிருக்கும்போது ஒரு நாள் திடீரென்று கல்கத்தாவிலே சென்பக சுந்தரியின் வீட்டிலே வந்து தோன்றினுர் சித்திரானந்தர்! வேறு எங்கோ தங்கியிருந்து கொண்டு அந்த வீட்டுக்கு வரவில்லை சித்திரானந்தர். நேரே அங்கேயே வந்து தங்கினுர் அவர்!

முதலாவது தடவை அவர் வந்து போனதற்கும் இப்போது வருவதற்கும் இடையே பல ஆண்டுகள் ஓடி விட்டன அல்லவா? சிறுவன் இளைஞுகை மாறியிருந்தான். சாமியாரோ இப்போது கனிந்த பழமாக ஆகியிருந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் வியப்போடு பார்த்தார்கள்.

''தம்பி! நான் எதிர்பார்த்தபடியே வளர்ந்தோங்கி யிருக்கிருய் நீ! பெண் குழந்தையாக இல்லை, ஆண் மகஞக!'' என்ருர் சித்திரானந்தர்.

''நாட்டியம் ஆடுவதை நிறுத்தி விட்டேன். சித்திரக்காரஞக மாறி விட்டேன்!'' என்ருன் சிவகாமிநாதன்.

''அம்மா எப்படிச் சம்மதித்தார்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வீட்டின் உள்ளறையிலே கால் வைத்தார் சித்திரானந்தர்.

முதிர்ந்த சாமியாரின் பாதங்களிலே விழுந்து வணங்கி எழுந்தாள் செண்பக சுந்தரி. எழுந்து நிற்கும் போது அவளுடைய கண்களிலிருந்து 'பொல பொல' என்று கண்ணீர் உதிர்ந்தது.

''அம்மா! காலம் என்ற வைத்தியன் உங்களுடைய இதயத்தின் ரணத்தை இன்னும் ஆற்றவில்லையா? இது தெரிந்திருந்தால் இன்னும் சில நாட்கள் கழித்தே வந்திருப்பேனே!'' என்ருர் சித்திரானந்தர்.

''சுவாமி! சில ரணங்களுக்கு மருந்து ஏது? உடம்பு மடியும் போதுதான் இந்த ரணங்களும் மடிய வேண்டும்!

உங்களுக்குத் தெரியாதது என்ன உண்டு? நீங்களே சொல்லுங்கள்!''

செண்பகசுந்தரி இவ்வாறு சொன்னதும் சாமியாரின் கண்களுமே கலங்கின. ஆனாலும் எப்படியோ துயரத்தை அடக்கிக் கொண்டார் அவர்.

''அம்மா! பெற்ற மக்களின் சிறப்புக்களைக் காணும்போது ஏற்படுகிற இன்பம் இருக்கிறதே, அதுதான் ஒப்பற்ற இதய சஞ்சீவி. அது ஒரு அற்புதமான அமுதம். அந்த அமுதம் எந்த ரணத்தையும் ஆற்றிவிட வல்லது! ஆனால் —''

''ஆனால் என்ன சுவாமி?''

''அந்தச் சிறப்பு பூரணமாக வளர்வதற்கு இடம் கொடுக்க வேண்டும். நாம் முட்டுக்கட்டை போடக்கூடாது. வளர்கிற பூஞ்செடிக்கு உரம் வைத்துத் தண்ணீர் ஊற்றுவது போல, இளம் உள்ளங்களிலே முளைவிடுகிற கலைக்கு, நாம் ஊட்டம் கொடுக்க வேண்டும். தடை விதிக்கக் கூடாது! அது நன்றாக வளர வளரத்தான் தாயுள்ளத்துக்கு அமைதியும் ஆனந்தமும் உண்டாகும். இது இயற்கை நியதி!''

''நிற்கிறீர்களே! உட்காருங்கள்!'' என்று சொல்லிச் சாமியாரை உபசரித்தாள் சுந்தரி. சாமியார் சோபாவில் உட்கார்ந்தார்.

''தம்பி! உன்னுடைய சித்திர முயற்சிகள் எப்படி இருக்கின்றன?'' என்று சிவகாமிநாதனைக் கேட்டுக் கொண்டே, அந்த அறையின் நான்கு புறமும் ஆராய்ந்து பார்த்தார் சித்திரானந்தர். அப்படியே வியப்பிலே ஆழ்ந்து போனார் அவர்.

சுவர்களில் எல்லாம் வகை வகையான சித்திரங்கள் கண்ணாடிச் சட்டம் போட்டுத் தொங்கிக் கொண்டிருந்தன. அந்தச் சித்திரங்களுக்கு மத்தியிலே பெரிய அளவிலே தம்முடைய படம் ஒன்று தொங்கியது! அதைப் பார்த்ததும் சித்திரானந்தர் சோபாவிலிருந்து எழுந்தார்.

''தம்பி! இது என்ன? நாலு பேரைப் போல் உயிரோடு நடமாடுகிற ஒரு மனிதனைக் கண்ணாடிச் சட்டத்துக்குள்ளே பூட்டிப் போட்டிருக்கிறாய் — அதுவும் ஒரு நாடோடியான பண்டாரத்தை...!''

இவ்வாறு கேட்டுக்கொண்டே அந்தப் படத்துக்கு எதிரே போய் நின்றார் சித்திரானந்தர்.

''சுவாமி! இந்தப் படந்தான் என் வாழ்வில் ஒரு பெரிய மாறுதலை உண்டாக்கிய படம்! சிறிய அளவில் காகிதச் சிட்டையிலே உங்களை வரைந்தேன் அல்லவா? அது எனக்கு மன எழுச்சி தருகிற ஒரு மூர்த்தியாக என்னுடைய சித்திர மடல்களிலே கொலு விருக்கிறது! இந்தப் பெரிய படம் நிம்மதியிழந்த ஒரு தாயுள்ளத்துக்கு ஆறுதலும் அமைதியும் தருகிற எங்கள் வீட்டுத் தெய்வம்!''

பரிவும் ஆர்வமும் நிரம்பிய குரலிலே இவ்வாறு சொன்னான் சிவகாமிநாதன்.

சித்திரானந்தர் மறுமொழி ஏதும் பேசவில்லை. கண்களை மூடிக்கொண்டே ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தார் அவர்.

இதன் பிறகு ஒரு வாரம் அந்த வீட்டிலே தங்கியிருந்தார் சித்திரானந்தர். வாழ்வையும் அதன் சுக துக்க உணர்ச்சிகளையும் முற்றிலும் துறந்து விட்ட ஒரு சந்நியாசியின் இதயத்திலும், கருணை என்ற உணர்ச்சி எப்படி வலுப்பெற்றுச் செயல் புரிகிறது என்பதை, அந்த ஒரு வாரத்திலே நேருக்கு நேராகக் கண்டான் சிவகாமிநாதன்.

''எல்லாப் பற்றுக்களையும் களைந்து எறிந்து விட்டேன். ஆனால் சித்திரப் பற்று ஒன்றை மட்டும் இதயத்திலிருந்து அகற்ற முடியவில்லை!'' என்றார் சித்திரானந்தர்.

''சுவாமி! உலக பந்தங்களையெல்லாம் துறந்து, இக வாழ்வையே வெறுத்துச் சென்ற துறவிகளுங்கூடக் குகைகளிலே எத்தனை எத்தனை சித்திரங்களை வரைந்து வைத்திருக்கிறார்கள்! இந்தப் பாரத தேசத்திலுள்ள குகைக் கோயில்களிலே என்ன பார்க்கிறோம்? புத்த தருமத்தைச் சேர்ந்த துறவிகளுங் கூட

சமீபத்தில் இறைவனடி சேர்ந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு சுப்பிரமணியம் சிறந்த நீதிபதியாக இருந்ததுடன் தமிழன்பு மிக்கவராகவும் விளங்கினார். சட்ட நுட்பங்களை எவ்வளவு விரைவில் உணர்ந்து முறை வழுவாது நீதி வழங்கிப் புகழ் எய்தினாரோ, அதே அளவுக்குத் தமிழ் இலக்கியத்தில் ஆற்றல் படைத்திருந்தார். தமிழார்வமும், தமிழ்ப் பணியுமே இவரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துக்குத் தமது ஓய்வுக் காலத்தில் இட்டுச் சென்றன எனலாம். ஆனால் இப்பல்கலைக் கழகத்துக்கு அவருடைய உயர்ந்த சேவை நீடித்துக் கிடைக்கவில்லை. அவரது மறைவு தமிழகத்துக்கே பெருநஷ்டமாகும்.



எல்லா இன்பங்களையும் துறந்த போதி லும், ஓவியச் சூழ்நிலையிலே கலை வாழ்வு வாழ்வதை ஒரு புனித வேள்வியாக அல்லவா கருதி யிருக்கிறீர்கள்!'' என்று மறுமொழி சொன்னான் சிவகாமிநாதன். கலங்கிய கண்களோடு இந்த வார்த்தை களைக் கேட்டுக் கொண்டிருந்த செண்பக சுந்தரி அப்போது சொன்னாள்:

''சுவாமி! அந்தச் சுவர் ஓவியங் களைப் போய்ப் பார்த்து அவற்றை வரைய வேண்டுமாம் இவன்! இங்குள்ள சித்திர ஆசிரியர் இவன் ஒருவனால் தான் அந்தக் காரியத்தைத் திறமை யாகச் செய்ய முடியும் என்று சொல்லு கிறாராம்!''

மகனுடைய திறமையிலே உவகை யும், அதே சமயம் இறந்த கால நினைவு களிலே துயரமும் ஒருங்கே அலை வீசுகிற குரலிலே இவ்வாறு சொன்னாள் செண்பக சுந்தரி. சாமியார் பளிச்சென்று பதில் சொன்னார்:

''அதனால் என்ன? அதைப் பற்றி நாம் பெருமைப்பட வேண்டியதுதானே? அவனை ஏன் தடுத்து நிறுத்த வேண்டும்? வாழ்வில் எந்தக் காரியத்தை நம்மால் தடுக்க முடியும்? வருவதை வராதே என்று சொல்லுவதற்கும், வராததை வா என்று சொல்லுவதற்கும் மனித சக்திக்கு ஆற்றல் ஏது? இதில் கலக்கம் அடைவதற்கு என்ன உண்டு?''



திடமான குரலிலே இப்படிப் பேசி னார் சித்திரானந்தர். இதைக் கேட்ட தும் செண்பகசுந்தரிக்கு அளவுகடந்த திகைப்பு ஏற்பட்டது.

''சுவாமி! நீங்கள் ஒருவர் என்னோடு சேருவீர்கள் என்று எதிர்பார்த்தேன். நீங்களும் பேராசிரியரைப் போலவே—''

''மகளே! துயரத்தினால் புண்பட் டுள்ள உனது இதயத்தின் ரணங்கள் ஆறுகிற காலம் வந்து விட்டது. அம்மா! அதற்குரிய அமுதசஞ்சீவி தயாராகிக் கொண்டிருக்கிறது! ஏன் அதைத் தடை செய்ய முயற்சி எடுக்கிறாய்....?''

''சுவாமி! என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்?'' என்று குழப்பத்தோடு கேட் டாள் சுந்தரி!

''சுந்தரியம்மையே! எத்தனை பெரிய துயரமானாலும் அது ஒரு நாள் மாறியே ஆக வேண்டும். எத்தனை பெரிய மழை யானாலும் அது கட்டாயம் வெறித்தே தீரும். எந்த இருளும் நீங்கியே ஆக வேண்டும். இதுதான் உலக இயல்பு. புயலுக்குப் பின் அமைதியும், இருளுக் குப்பின் ஒளியும் இறைவனுடைய சங் கற்பம். உறங்குகிற மனிதன் விழிக் கிறான். மரணத்துக்குப் பின் பிறப்பு தொடருகிறது. மனித வாழ்வு என் பது ஓய்வு ஒழிவில்லாத ஒரு சக்கரம். அதன் சுழற்சி நிற்காது! ஜன்ம ஜன்மாந் தர வாசனை என்றும், ஊழின் வலிமை என்றும், வினைச் சுழற்சி என்றும், ஒரு பெரிய சட்டம் நிரந்தரமாக வேலை செய்து கொண்டே யிருக்கிறது அம்மா! நாம் அனைவரும் இந்தச் சட்டத்துக்கு உட்பட்டவர்களே!''

சித்திரானந்தரின் மொழிகளைப் பக்தி யோடு கேட்டுக் கொண்டே மௌன மாக இருந்தாள் செண்பகசுந்தரி. அவ ளால் எதுவும் பேச முடியவில்லை.

''மகளே! மறைந்து சென்ற பாட்ட னும், தந்தையும் எங்கோ மறைந்து சென்று விட்டதாக எண்ணாதே. அவர்கள் வேறு எங்கும் போய்விட வில்லை. விட்ட குறையும் தொட்ட குறையும் புதிய பிறப்பு எடுத்துத் தனது இலட்சியங்களைப் பூர்த்தி செய்ய முனைந்து நிற்கிறது. கலைக்குமரனாக நமது முன்னே நிற்கும் சிவகாமிநாத னைப் பனைமலைக்கும் சித்தன்னவாச லுக்கும் அழைப்பது அதுவே! அவ னுடைய பேராசிரியரில்லை! அவர் சொன்ன பேச்சு அவருடைய வார்த்தை யில்லை! அது பாட்டன் சிவகாமிநாத னுடைய பேச்சு! அதுவே தந்தை வில்வநாதனின் கட்டளை!''

இப்படிச் சித்திரானந்தர் சொன்ன தும் ஆவலும் திகைப்பும் பொங்கியவ னாகச் சாமியாருக்கு அருகிலே வந்து நின்றான் சிவகாமிநாதன்! (தொடரும்)

# குளிர் காலத்திலே...

# ‘கெப்ளர்’

## ஈடிணையற்றது






குளிர்காலத்தில் பரவும் தொத்துநோய்களுக்குக்
குடும்பத்திலுள்ளோர் – குறிப்பாகக் குழந்தைகள் –
ஆளாவது இயற்கை. நோயை எதிர்க்கும் திடமான
சக்தியை அவர்களிடம் வளர்க்க
அவர்களுக்கு அளியுங்கள் ‘கெப்ளர்’–ஷார்க்
லிவர் ஆயிலோடு கூடிய மால்ட்
''கெப்ளர்'' – ஷார்க் லிவர் ஆயில் மற்றும் விடமின்கள்
‘ஏ’யும் ‘டி’யும் கலந்த ருசியான, சத்துச் செறிந்த டானிக்.
குடும்பத்தினர் அனைவருடைய ஜீவன் அது ! உடலைப்
பலப்படுத்தி, நோய் எதிர்ப்புச் சக்தியைப் பெருக்குகிறது.
பிணியாறும் நிலையிலுள்ளோருக்கு மிக உகந்தது.

**ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு**



SWT-12-TAM

# கல் பூத்தது!

ரா. கணபதி



உமா, ராஜுவுக்குத் தங்கை என்றும், அவன் மனைவி ராஜிக்கோ தங்கைக்கும் மேலே. அப்படிப்பட்டவள் தன்னிடம் ஒரு விஷயத்தை ஒளித்து வைக்கிறாள் என்பதை ராஜியால் நம்பவே முடியவில்லை.

உமாவுடைய கணவன் விசுவநாதன் சென்னையிலிருந்து மாற்றலாகி மதுரைக்குப் போனானல்லவா? அதற்கு முதல் நாள் அவன் பிள்ளை பாலு - அவன் பிள்ளை மட்டும்தானா? ராஜியின் தங்கை பிள்ளையும்தானே? —பள்ளியில் உமாவிடம் ஏதோ ஒரு கவரைக் கொண்டு வந்து கொடுத்தானாம். இதைப் பற்றி, அதே பள்ளியில் படிக்கும் ராஜியின் மகள் சரசு அவளிடம் சொன்னாள். என்றாலும் உமா இன்று பரியந்தம் வாய் திறக்கவே இல்லை. ஆனால் இரண்டு மூன்று தடவை உமா ஓர் உறையைத் திறந்து திறந்து பார்த்து ஆனந்தப்படுவதை மட்டும் ராஜி அகஸ்மாத்தாகக் கவனித்தாயிற்று. 'பாவி, செய்வதையும் செய்து விட்டு ஊரை விட்டுப் போகுமுன் பெரிய மனசோடு, தன்னிடம்தான் பணம் இருக்கிறது என்ற பெருமையில் ஏதோ கொஞ்சம் இவள் கண்ணில் காட்டி விட்டான் போல் இருக்கிறது. அதைப் பார்த்து இந்தப் பித்துக்குளிப் பெண்ணும் எதற்குப் பெருமைப்படுகிறது? பெருமைப் பட்டாவது தொலையட்டும். தன்னிடமும் தன் கணவனிடமும் ஏன் அவள் விஷயத்தை ஒளிக்க வேண்டும்?'

தாய் தகப்பனுமில்லாத குறையோடு, அகத்துக்காரன் இருந்

நும் இல்லாதவன் என்பதனால் உமாவிடம் ராஜி கொஞ்சமாகவா வாஞ்சை காட்டினான்!

ராஜிக்கு ரொம்ப வருத்தம்தான்—இந்தத் தீபாவளி சமயத்தில் செலவுக்கு வகை இல்லாமல் அண்ணன் விழி பிதுங்கும் போது தங்கைக்காரி பெட்டியைப் பூட்டிக் கொண்டு பணத்தை இறுகக் கட்டிக்காத்தாளே என்று.

உமா தன் பெட்டியை இறுகப் பூட்டி வைக்கலாம். என்றாலும் ராஜியின் மனசுக்கு யார் பூட்டுப் பூட்டி வைப்பது? அது இஷ்டப்பட்டபடி பலவிதக் கற்பனைகளைப் புனைந்து தள்ளிக் கொண்டிருந்தது. அப்புறம் இந்தக் கற்பனைக் குமைச்சலை அவனாலேயே ஒரு நாள் தாள முடியாமல் போனபோது உமாவின் பெட்டியுடைய பூட்டும் திறந்து கொண்டது.

ஆம், உமா பள்ளிக்கூடம் போயிருக்கும்போது அவளுடைய பெட்டியை மறு சாவி போட்டுத் திறந்து விட்டான் ராஜி. எவ்வளவோ தங்கமானவன்தான் அவன். ஆனால், தான் அவ்வளவு தங்கமாக நடந்து கொண்டதற்கு நம்பகமாக உமா தன்னிடம் நடந்து கொள்ளவில்லை என்று ஏமாறிப் போன அவனது உள்ளம் இப்படி உளவு வேலையில் இறங்கி விட்டது.

ராஜி விரும்பிய அந்த உறையும் பெட்டியிலிருந்து கிடைத்தது. விலாசம் எழுதியுள்ள கையெழுத்தைப் பார்த்தவுடன் அவன் அதிசயித்துப் போனான். உறைக்குள்ளிருந்து கடிதத்தை இழுத்தான் ராஜி.

அதன் தொடக்கத்தைக் கண்டதும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'செய்யக் கூடாத காரியத்தைச் செய்து விட்டோமே' என்ற நடுக்கத்துடன் உறையை மீண்டும் பார்த்தான். தான் எவ்வளவு பெரிய பிழை செய்ய இருந்தோம் என்று உணர்ந்தான்.

விலாசத்தைப் பாராமலே அதை வரைந்த கையெழுத்தை மட்டும் தான் பார்த்த அதிசயம் எப்படி நிகழ்ந்தது எனத் தனக்குள்ளேயே வியந்தபடி கடிதத்தை உறைக்குள் போட்டு அந்த உறையையும் பெட்டிக்குள் போட்டு, பெட்டியை மூடப் போனான் ராஜி.

அப்போது மீண்டும் ஓர் எண்ணம் அவன் நெஞ்சில் துவண்டது. 'கணவன் — மனைவி கடிதங்களைப் பிறர் பார்க்கக் கூடாது என்பது சரிதான். ஆனால் இது உமாவுக்கும் தானே பொருந்தும்? அவள் மட்டும் ஏன் இந்தக் கடிதத்தைப் போற்றி வைத்திருக்கிறாள்? அதைவிட விநோதம் — இந்தக் கடிதத்தைப் பாலுவே எதற்காக உமாவிடம் கொண்டு வந்து கொடுத்தான்?'

குழம்பினான் ராஜி. குழப்பத்தைத் தெளிவாக்கிக் கொள்ள, சற்று முன் கூசிய அதே காரியத்தை இப்போது கூசாமல் செய்தான். பெட்டியைத் திறந்து அந்தப் பெட்டிக்குள்ளிருந்த உறையையும் திறந்து, அந்த உறைக்குள் இருந்த கடிதத்தை ஆவல் மீதூறப் பார்க்கலானான்; படித்துக் கொண்டே போனான்; படித்து முடித்தும் விட்டான்.

ஆனால் குழப்பம் தீர்ந்ததோ? அதுதான் இல்லை. அது முன்னிலும் சேறாகக் குழம்பிப் போயிற்று.

அந்தக் கடிதத்தில் அவனுக்கு ஒரு பேரதிர்ச்சி இருந்தது. அவனால் மாற்ற முடியாத ஓர் உறவுக்காக அவன் உடம்பை அருவருப்பு பிடுங்கித் தின்றது. அதை நினைக்க நினைக்க ராஜியின் நரம்பு மண்டலமெல்லாம் நடுங்கியது. இப்படியும் ஒரு நயவஞ்சகம் உண்டா?

அது போகட்டும், இந்தக் கடிதத்தை ஏன் உமா இப்படிப் பெருமையுடன் பாதுகாத்து வைத்துப் பார்த்துப் பார்த்துப் பூரிக்க வேண்டும்? காரணம் —அப்படி இருக்குமோ? அதை எண்ணித்தான் மிகவும் அதிர்ந்து போனான் ராஜி. 'ஆகா! பட்ட கஷ்டம் இப் பெண்ணைப் பைத்தியமாக்கியிருக்கிறது. துணியைக் கிழித்துப் போட்டாலும், கல்லை எறிந்தாலும் மட்டும்தான் பைத்தியமா என்ன? ஏதோ ஒரு நிறுக சித்தப் பிரமை பிடித்திருப்பதால்தான் இந்த அவலப் பெண் உமா இந்தக் கொடூரமான கடிதத்தை இப்படிக் காத்து வருகிறாள்!'

சற்று முன் உமாவைப் பற்றி ஏதேதோ தவறாக எண்ணிப் பெட்டியைத் திறந்தான் ராஜி. ஆனால் இப்போது பெட்டியை மூடிப் பூட்டை அழுத்தும் முயற்சியில் தாமாகவே மூடிக் கொண்ட அவனது இமைகள் அவனுடைய கன்னத்தில் முத்துக்களை உருள விட்டன.

விலாசத்தைப் பாராமலே அதை வரைந்த கையெழுத்தை மட்டும் பார்த்த வித்தையை



வியந்தானே ராஜு! கடிதத்தைப் பார்த்தும் அதில் உறைந்திருந்த ஓர் அன்பு இலக்கியத்தை அவன் கவனிக்காததை எப்படி விந்தை என்று சொல்ல முடியும்? எழுத்தில் வரைய முடியாத. எண்ணத்தில் வடிக்க முடிக்காத இலக்கியமல்லவா அது?

சின்னஞ்சிறு வயதிலேயே தாய்தந்தையரை இழந்தவள் உமா. அந்தத் துக்கம் தெரியாமல் உமாவை அன்பாகவே வளர்த்தனர் அண்ணன் ராஜுவும் மதனி ராஜியும். உமாவின் உள்ளப் புண்ணும் ஆறியது. 'ஸ்டெதாஸ்கோப்'புக்கு அகப்படாத அவளது இதய நோவு ஆறி வந்தாலும் 'ஸ்டெதாஸ்கோப்'புக்கு அகப்படும் அவளுடைய இதயத்தில் அடிக்கடி நோவு காணலாயிற்று. உமாவுக்கு அடிக்கடி மார்வலியும் மயக்கமும் வரலாயின. எல்லாம் கலியாணமானால் சரியாகிவிடுமென்று பெரியவர்கள் சொல்ல, அந்த அசட்டு நம்பிக்கையில் விசுவநாதனின் கரத்தில் உமாவை ஒப்புக் கொடுத்தான் ராஜு.

செல்வ நிலையில் ராஜுவுக்கும் விசுவநாதனுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. ஆனால் உமாவின் ரூபலாவண்யத்துக்கு எத்தனை கோடி கொடுத்தாலும் போதாது என்ற ஒரே காரணத்துக்காக அந்த வீட்டு மாப்பிள்ளை ஆனான் விசுவநாதன்.

மாலையும் கழுத்துமாக மணமக்கள் வணங்க வந்த போது ராஜுவின் கண்கள் கசிந்தன. உமாவின் உணர்ச்சிகளும் விம்மி எழுந்தன. அவளது இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அதற்கேற்பக் கண்களும் வண்ணத்துப் பூச்சியின் இறகுகளைப் போல அடித்துக் கொண்டன. அப்படியே கீழே சாய்ந்தாள் உமா. மாலைகளும் சங்கிலிகளும் மணிஆரங்களும் அணிந்திருந்த இளம் கழுத்திலிருந்து தைந்து விடும் போல அவள் முகம் தொங்கியதைக் கண்டு பதறிப் போனான் விசுவநாதன். அவள் கழுத்திலிருந்து தரையில் புரண்ட ஒரு பெரிய ரோஜா மாலையையே மடித்து அவள் தலைக்கு அணையாக வைத்தான்.

இதைப் பற்றிப் பின்னால் ஒரு நாள் உமாவிடம் விசுவநாதன் சொன்னான்:

''நீ அன்றைக்கு மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்தாய் பார். அப்போது உன் கன்னத்திலெல்லாம் ரோஜாப்பூவின் கேசரங்கள் ஒட்டிக் கொண்டிருந்தன. மயக்கம் தெளிவிப்பதற்காக அடித்த தண்ணீர் முகமெல்லாம் திவலை திவலையாகப் பரவியிருந்தது. பனியில் சிலிர்க்கும் - சிரிக்கும் - அசல் ரோஜாவாகவே நீ இருந்தாய். இந்த ரோஜா எப்போது ஒரு சரோஜாவை எனக்குத் தரப் போகிறதாம்?''

அசட்டு விசுவநாதா! ரோஜாவைப் பதியன் போட்டால்தானே இன்னொரு ரோஜாச் செடி பிறக்கும்? மானுட ரோஜாவைப் பதியன் போட முடியுமா என்ன?

விவாகமானபின் தன் உடல் நிலை முன்னிலும் க்ஷீணித்து வருவதை உணர்ந்தாள் உமா. பெரிய டாக்டர் ஒருவரிடம் அவளை அழைத்துச் சென்று வீடு திரும்பும் போது விசுவநாதன் கல்லாகச் சமைந்திருந்தான்.

உமாவோ அயராது அமைதியாக இருந்தாள்; ஏனோ இந்தப் பௌதிக உறவுகள் அவளுக்குப் பெரிதாகப் படுவதேயில்லை. விசித்திரப் பிரகிருதி இந்த உமா!

உமாவேதான் ராஜுவிடம் வாதாடினாள்; அவள் பேச்சில் உள்ள நியாயத்தை ராஜு உணர்ந்தான். விசுவநாதனுக்கு மறுமணம் செய்வதில் அவ்விருவருமே முனைந்தார்கள். ராஜியின் தங்கை பங்கஜம் விசுவநாதனின் இரண்டாம் தாரமானாள்.

மாலையும் கழுத்துமாக மணமக்கள் வணங்க வந்த போது ராஜுவின் கண்கள் கசிந்தன.

உமாவும், பங்கஜமும் மிகவும் அந்நியோந்நியமாகத்தான் குடித்தனம் நடத்தினர். விசுவநாதனும் தன் உள்ளத்தால் உமாவை மனைவியாகவே கருதி அன்பு செலுத்தி வந்தான். இதைப் பற்றி உமா தன் அண்ணனிடமும் மதனியிடமும் எவ்வளவோ பெருமை அடித்துக் கொண்டதுண்டு.

''மானசீகமான உறவுகள்தாம் தூய்மையானவை. நான் தூயவாழ்வு வாழ வேணுமென்றே ஈசுவரன் என் உடலுக்குப் பிணியைக் கொடுத்து விட்டான். உலகத்தில் யாரும் கண்டறியாத புனித தாம்பத்தியம் அல்லவா நாங்கள் நடத்துவது?'' என்று நாத் தழுதழுக்கக் கூறுவாள் அவள்.

உமாவின் மகிழ்ச்சி எல்லை மீறிப் போனது பங்கஜத்துக்கு ஜம்மென்று ஒரு பிள்ளை பிறந்த போதுதான். விசுவநாதனின் 'ரோஜா' தராததைப் பங்கஜ மலர் தந்துவிட்டது. பாது உமாவின் பாலனாகவேதான் வளர்ந்தான். அன்னையும் தந்தையும் தேவையில்லை என்ற அளவுக்கு உமாவையே இறுகப் பற்றிக் கொண்டான் அவன். அப்தபூர்த்தியின் போது உமாவிடமிருந்து பங்கஜத்திடம் போக மாட்டேன் என்று அவன் அப்போப் பட்ட பிடிவாதம் பிடித்ததால் உமாவேதான் கணவன் பக்கத்தில் மணையில் அமர்ந்து பெருமை பெருமையாக ஆண்டு நிறைவு கொண்டாடினாள். அப்போது பங்கஜமும் தன் கூறைப் புடவையையே அவளுக்கு உடுத்திப் பார்த்து மனமகிழ்வு எய்தினாள். அதைக் கண்டு ராஜியும் இவ்வளவு அவ்வளவு என்றில்லாமல் சந்தோஷப்பட்டிருக்கிறாள். ஒருத்தி தங்கை; இன்னொருத்தி தங்கைக்கும் மேலல்லவா?

அதன்பின் ஏனோ விசுவநாதனின் போக்கு மாறலாயிற்று. சிறிது சிறிதாக உமாவை ஒதுக்கலானான் அவன். உமா அதைச் சிறிது உணர்ந்த உடனேயே, தான் பூரணமாக ஒதுங்கி விடுவதுதான் உத்தமம் என்று உறுதி கொண்டாள். ஒரு நாள் ராஜுவை வருவித்துத் தன் கணவனின் மனமாற்றத்தை அவனிடம் தெரிவித்தாள். தான் பிறந்தகம் வந்து விடுவதாகவும் கூறினாள்.

உண்மை நிலையை விளங்கிக் கொள்வதற்காக விசுவநாதனிடமே உடைத்துக் கேட்டு விட்டான் ராஜு. அப்போது விசுவநாதன் நெஞ்சக ஈரத்தைப் பஞ்சால் துடைத்து விட்டுச் சொன்னான்:

''பங்கஜத்தை மணந்த அன்றே எனக்கு ஒரு புதுப் பிரபஞ்சம் உருவாகத் தொடங்கி

# ஜுரம் போன்ற உணர்ச்சி மற்றும் ஃப்ளு

ஜுரம்போன்ற உணர்ச்சியுடன் கடுக்கவும் அசதியும் சேர்ந்திருக்கிறதா? அல்லது ஃப்ளு வரும்போலிருக்கிறதா? 'ஆஸ்ப்ரோ' சாப்பிட்டு ஜுரத்தைத் தணியுங்கள். உலகம் முழுவதிலும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ' உங்கள் உடலின் நோவுறும் இடங்களில் நேரிடையாக வேலைசெய்து துரித நிவாரணம் அளிக்கிறது. குடும்பம் முழுவதற்கும் உபயோகிக்க 'ஆஸ்ப்ரோ' கைவசம் வைத்திருங்கள்.

## விலிருந்து பூரண நிவாரணம் பெறுங்கள்

# 'ஆஸ்ப்ரோ'



## குடும்பம் முழுவதற்கும் ஏற்றது

### "ஆஸ்ப்ரோ" வேலை செய்யும் விதம்:



பொடியாகப் பிரிகிறது: 'ஆஸ்ப்ரோ' உடனேயே பொடியாகப் பிரிந்து தொடங்குகிறது. 'ஆஸ்ப்ரோ' மிக விரைவாகவே வேலை செய்ய ஆரம்பிக்கிறது.



பரவுகிறது:



நிவாரணமளிக்கிறது






இளஞ்சிவப்பும் ஊதாநிறமும் கொண்ட சீலிடப்பட்ட பட்டையைக் கேட்டு வாங்குங்கள்

## 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள் மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்

ஒரு நிக்கோலஸ் Ⓝ தயாரிப்பு

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த
# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ் வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.






மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்
## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

விட்டது. பாலு பிறந்த போது அந்தப் பிரபஞ்சம் விரிவடைந்தது. ஆனால் உண்மையில் இந்தப் பிரபஞ்சத்தை நான் அநுபவிக்க முடியாமல் செய்கிறாள் உன் தங்கை. பாலு என்னைவிட அவளைத்தான் பெரிதாக நினைக்கிறான். அவனுக்காகப் பங்கஜம் தன் தாய்மையைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கலாம். என்னால் அவ்வாறு பிள்ளைப் பாசத்தைத் தியாகம் செய்ய இயலாது."

இதென்ன தாறுமாறான பேச்சு? அமுதம் எப்படி விஷமாயிற்று? ராஜு நிலைகுலைந்து போனான். உமாவோ தெளிவும் அமைதியும் இழைய, "ஆம், அண்ணா! அவர் சொல்வது உண்மைதானே? நான் அவர் வாழ்க்கைத் தருவில் பூத்த ஒரு மலர்தான். கனியாகாத மலர் நான். கனியைத் தந்தது வேறொரு மலர். அந்தக் கனியையும் ஸ்வீகரித்துக் கொள்ளும் மலராகிவிட்ட என்னை மரத்திலிருந்து பிரிக்கத்தானே வேண்டும்?" என்று கேட்டாள்.

கொந்தளிக்கும் நெஞ்சகத்தோடு மௌனமாகத் தங்கையை இட்டுக்கொண்டு புறப்பட்டான் ராஜு. அப்போது பணம் கொழுத்த விசுவநாதன் 'பரந்த இதயத்'தோடு உமாவிடம் பத்தாயிரம் ரூபாய் அடங்கிய ஓர் உறையை நீட்டினான். அதை ஏற்க அவள் மறுத்து விட்டாள். "என் இதயத்தில் முன் ஒரு காலத்தில் நீங்கள் முதலீடு செய்த அன்பிலிருந்து எனக்கு என்றும் வட்டி கிடைத்து வரும். என் உள்ளத்துக்கு அதுவே ஜீவனோபாயம். உடலுக்கு ஜீவனோபாயமாக உடலாலேயே உழைத்துக் கொள்வேன். இந்தப் பணம் எனக்குத் தேவையில்லை" என்று கூறி விட்டாள் உமா. உமா தன் அண்ணனுடன் புறப்பட்டபோது உள்ளேயிருந்து பங்கஜத்தின் விசும்பல் ஒலி பிரியா விடை கூறியது.

அண்ணனிடம் ஆசிரயம் பெற்று உபாத்திமைப் பயிற்சி பெற்றாள் உமா. பின்பு உள்ளூர்ப் பள்ளி ஒன்றில் முதல் வகுப்பு ஆசிரியையாக அமர்ந்தாள். அதன்பின் இரு குடும்பங்களின் உறவும் மிக மிகத் தேய்ந்து விட்டது. பங்கஜம் மட்டும் எப்போதேனும் ராஜியைப் பார்க்க வருவாள். அப்போதும் அவள் உமாவிடம் ஏதும் பேச மாட்டாள். பேச அவளால் இயலவில்லை என்றே தோன்றும். உமாவைக் கண்டாலே கண்ணைத் துடைத்துக் கொண்டு பார்வையைத் திருப்பிக் கொண்டு விடுவாள் பங்கஜம். அதைக் கண்டு ராஜியின் நயனங்களிலும் நீர் மொட்டு வைக்கும். ஒருத்தி தங்கை என்றால் மற்றவள் தங்கைக்கும் மேல் ஆயிற்றே!

ஐந்தாண்டுகளுக்குப்பின் அதிசயம் நிகழ்ந்தது. உமாவிடமே பயில வந்தான் பாலு. குழந்தையின் அப்தபூர்த்தியில் முக்கியமான இடம் பெற்றவளே வித்தியாப்பியாசத்திலும் முக்கியமான இடம் பெறுவதைக் கண்டு பள்ளிக்கு மகனைச் சேர்க்க வந்த விசுவநாதன் வியப்புற்றான்.

அவனது உணர்ச்சி வியப்புடன் நிற்கவில்லை என்பது சில நாட்களிலேயே உமாவுக்கு நிதரிசனமாயிற்று. விஜயதசமியன்று பாலுவைப் பள்ளியில் சேர்த்தவன் அடுத்த இரண்டு வாரங்களுக்குள் — தீபாவளிக்கு முன்னதாகவே — மதுரைக் கிளைக்கு மாற்றலாகி விட்டான். 'மாற்றலாகி விட்டான்' என்று உமாவால் நம்ப முடியவில்லை. தான் பாலுவிடம் மீண்டும் ஒட்டிக் கொண்டு விடக் கூடாது என்பதற்காகப் பல நாட்கள் பழகிய சென்னையை விட்டு விசுவநாதனாகவே மாற்றல் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்பதை அவள் அநுமானித்துக் கொண்டாள்.

பாலு தன்னிடம் படித்த அந்தப் பத்துப் பதினைந்து நாட்களிலேயே பல்லாயிரம் பிறப்பில் காட்டக் கூடிய வாத்ஸல்யத்தை அவன் மீது சொரிந்து விட்டாள் உமா. அந்தக் குழந்தையும் வஞ்சனையின்றி அந்த அன்பைத் திருப்பியதில் அகம் மலர்ந்தாள். உள்ளம் புடைக்க உண்ட அந்தப் பாச விருந்துக்கும் ஒரு முடிவு ஏற்பட்டது.

ஊருக்குக் கிளம்பும் முதல் நாள் 'டீச்சரை'த் தனிப்படச் சந்தித்த போது பாலு தயங்கித் தயங்கி நின்றான். அவன் அவளை 'டீச்சராக' மட்டுமேதான் அறிந்திருந்தான். அந்த டீச்சர் அவனை அன்புடன் கொஞ்சிய பிறகு, கூச்சத்தை விட்டுத் தன் நிஜார்ப் பையிலிருந்து ஓர் உறையை எடுத்தான்.

கொட்டை கொட்டையான கண்களில் அன்போடு பெரிய மனுஷத்தனமும் மின்ன, ஓரிரண்டு பல் விழுந்த ஓட்டை வாயைத் திறந்து டீச்சரிடம் சொன்னான்:

"அப்பா ஊருக்குப் போகிறதற்காக நண்பர்களுக்கெல்லாம் 'என் ஞாபகமாக இருக்கட்டும்' என்று ஏதேதோ பிரஸெண்ட் கொடுத்தார். நானும் டீச்சர், உங்களுக்கு என் ஞாபகமாக ஒன்று கொண்டு வந்திருக்கிறேன்" என்றான்.

பாலுவின் பெரியமனுஷத்தனம் அந்த வார்த்தைகளில் அலைமோதித் தொனித்தது.

"இந்தாருங்கள், டீச்சர்" என்று அந்த உறையை உமாவிடம் ஒப்புவித்தான் பாலு.

அதில் எழுதியிருந்த விலாசத்தையும், விலாசம் எழுதிய கையெழுத்தையும் கண்ட உமா திடுக்குற்றாள். உள்ளே இருந்த கடிதத்தில் ஓரிரு வரி படித்ததும் தயங்கினாள்.

"பாலு ராஜா! இதை ஏன் நீ எனக்குப் பரிசாகக் கொண்டு வந்தாய்?" என்று கேட்டாள்.

"முழுக்கப் படியுங்கள் டீச்சர். உங்களுக்குத் தெரியும்" என்று புதிர் போட்டான் அந்த அழுத்தக்கார வாண்டு.

அவளும் முழுக்கப் படித்தாள். எப்படித்தான் படித்தாளோ? வரிக்கு வரி, வரிப் புலியாகி அவள் கொண்டிருந்த ஒரு நம்பிக்கையைப் பிடுங்கித் தின்ற அந்தக் கடிதத்தை இதய நோய்க்காரியாகிய உமா எப்படித்தான் மயங்கி விழாமல் படித்தாளோ?

ஒருவாறு சுதாரித்துக் கொண்டு குழறும் ஸ்வரத்தில் "நீ எனக்கு ஞாபகப் பரிசு எதுவும் கொடுக்க வேண்டாமடா கண்மணி! உன்னை நான் மறந்து போனால் தானே ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும்? இந்தா...." என்று கூறியபடி உறையைக் குழந்தையிடம் திருப்பினாள். பாலுவின் கொட்டை கொட்டையான கண்களில் கண்ணீர்த் துளிகள் மின்னின. ஓட்டைப்

பல் வரிசையால் உதட்டைக் கடித்துக் கொண்டான்.

இழே விழுவாமா வேண்டாமா என்று நீர்ச் சொட்டுக்கள் காத்திருக்க, பெயர்ந்து போயிருந்த பள்ளித் தரையைக் கால் விரலால் நெம்பிய வாறே நின்ற அந்தக் குழந்தையைக் காணக் காண உமாவின் உள்ளம் உருகிக் கரைந்தது.

''ஏன்டா கண்மணி, இந்தக் கவரில் என்ன இருக்கிறது என்று உனக்குத் தெரியுமோ?'' என்று ஆதரவாகக் கேட்டாள்.

''எப்படி டீச்சர் தெரியும்? நான் ஸ்கூலில் சேர்ந்து பத்து நாள்தானே ஆகிறது? அதற்குள் எழுத்துக் கூட்டிப் படிக்கத் தெரியுமா?'' என்று கணீரென்று கேட்டான் அந்த ரோஷக்காரப் பயல். கண்ணிலிருந்து கண்ணீர் பெருகினாலும் உஷ்ணத்துக்குக் குறைவில்லை.

''அப்படியானால் இதை ஏன் எனக்குப் பரிசாகக் கொண்டு வந்தாய்?'' என்றாள் உமா.

''அதுவா?'' என்று இழுத்தபோது பாபுவின் கோபம் தணிந்து விட்டது.

''என் அம்மா இந்தக் காகிதத்தை அடிக்கடி படித்துப் பார்ப்பாள். நான் அம்மாவிடம் அதில் என்ன எழுதி யிருக்கிறது என்று கேட்டேன். 'இதனால்தான் நான் இன்று நல்ல நிலைமையில் இருக்கிறேன். இது என் சொத்து' என்றாள் அம்மா. 'என்ன அம்மா, காகிதத்தைப் போய்ச் சொத்து என்கிறாயே' என்றேன் நான். 'காகிதமானால் என்னடா? ரூபாயெல்லாம் கூடக் காகிதம்தானே? செக்கும் காகிதம்தானேடா? இந்தக் காகிதம் ரூபாய் நோட்டுக்கும் செக்குக்கும் மேலே' என்றாள் அம்மா.

''ரூபாய் நோட்டு, செக் எல்லாவற்றையும் விட உசத்தியான 'பிரஸெண்டை' உங்களுக்குத் தரணும் என்றுதான் எடுத்து வந்தேன் டீச்சர். இதுகூடத் திருட்டா என்ன? அம்மாதான் சொல்லி யிருக்காளே: 'என்னுடைய தெல்லாம் உனக்குத்தான்' என்று?

''நீங்களானால்....''

ஓட்டைப் பல் வரிசை உதட்டை மீண்டும் கடித்தது. கண்களில் கண்ணீர் சேரலாயிற்று. அது விழுவாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே பாபுவை வாரி அணைத்துக் கொண்டாள் உமா.

''உன் பிரஸெண்டை நான் திருப்ப மாட்டேனடா, ராஜா, திருப்பவே மாட்டேன்'' என்று நெஞ்சில் நேசம் அழுத்தக் கூறினாள்.

இதையெல்லாம் ராஜி எப்படி அறிவான்? எனவேதான் அவன் அந்தக் கோரமான கடிதத்தை அன்புடன் காத்து வரும் உமாவுக்குச் சித்தப்பிரமை என்று எண்ணிவிட்டான். அதையொட்டி, உமாவிடம் எல்லையில்லாத பரிவுடன் நடந்து கொள்ளத் தொடங்கினான் ராஜி. புத்திசாலியான உமாவுக்கு ஒருவாறு விஷயம் புரிந்துவிட்டது.

''எனக்குச் சித்தப்பிரமை என்று மன்னி சந்தேகப்படுகிறாய்? பிரேமைக்குப் பேர் பிரமை என்றால் எனக்கும் பிரமைதான்'' என்றாள் அவள் ஒருநாள் வெளிப்படையாக. ராஜி அசந்து போய்விட்டான்.

''ஆமாம், பிரேமைக்குப் பேரே பிரமை என்றுதானே உலகம் நினைக்கிறது? அதனால்தானே ஈசுவரனையும் பித்தன் என்கிறது? மன்மதனின் அகங்காரம் போட்ட மலர் அம்பை வெறுத்து உதறிய அதே பரமேசன் சாக்கிய நாயனாரின் அன்பு எறிந்த கற்களை மலராக ஏற்றானல்லவா? அந்தப் பரமசிவன் பித்தனென்றால் நானும் பைத்தியம்தான். முன்பு என் அகத்துக்காரர் எனக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்தபோது அதை நான் ஏற்கவில்லை. இதை உன்னிடம் சொன்னால் நீ கூட நான் செய்ததை ஒப்புக்கொள்ள மாட்டாயோ என்றே நான் அந்த விஷயத்தை உன்னிடம் மறைத்து வைத்தேன். ஏனென்றால் அந்தப் பணம் உனக்குப் பூவாகத் தோன்றும். ஆனால் எனக்கு அது பாறாங்கல். இந்தக் கடிதம் என் தலைக்கு வந்த பாறாங்கல்லாக உனக்குப் படலாம். அதனால் நீ வருத்தப்படலாம். இது காரணமாகவே இந்தக் கடிதத்தையும் நான் ஒளித்துவைத்தேன். உண்மையில் அது எனக்குக் கல்லல்ல. என்னைப் பொறுத்த மட்டில் அது பங்கஜ மலரை விட மெல்லிய புஷ்பம். அந்தக் கடிதத்தைப் பங்கஜம் ரூபாய் நோட்டுக்கும், செக்குக்கும் மேல் என்று சொன்னாளாம். அது என் விஷயத்திலும் நூற்றுக்கு நூறு உண்மை. அன்புக்கு விலை பேச எந்தக் கஜானாவில்தான் திரவியம் உண்டு?''

சிறிது நேரம் திக்பிரமை பிடித்தவன் போல் இருந்தான் ராஜி. 'ஆகா, உமா தங்களுக்கில்லாமல் பணத்தை மறைப்பதாக அல்லவா எண்ணி விட்டோம்?' குமுறி அழுதது அவன் உள்ளம். என்றாலும் உமா அந்தக் கடிதத்தை வைத்துக் காக்கும்படியாக என்ன கண்டு விட்டாள் என்பது அவனுக்குப் புதிராகவே யிருந்தது. அந்தப் புதிரை உமாவிடமே அவிழ்த்துக் கொள்ள எண்ணினான்.

''உமா! உனக்குப் புத்தித் தடுமாற்றம் ஏற்பட்டு விட்டது; அதனால்தான் அந்தக் கடிதத்தை மகிழ்ச்சியுடன் காத்து வருகிறாய் என்றுதான் நான் நினைத்து விட்டேன். உன் கழுத்தை வெட்டும் அரிவாளை, உன் தலையில் விழும் பேரிடியை நீ எப்படிப் பிரியத்துடன் ஏற்கிறாய் என்பது எனக்கு இப்போதும் புரியவில்லை உமா. நய வஞ்சகம் எழுத்துக்கு எழுத்து சொட்டும் அந்தக் காகிதத்தை நேசத்தின் நினைவுச் சின்னமாக நீ நினைப்பதும் எனக்கு அறவே அர்த்தமாகவில்லை'' என்றான்.

உமா சாந்தமாகப் பேசினாள்: ''கல் மட்டும் இல்லை; கழுத்தை வெட்டும் அரிவாள் கூட மலராவதுண்டு மன்னி. அரிச்சந்திரன் சந்திரமதியின் மீது வீசிய அரிவாள் மலர் மாலையாக வில்லையா? அன்பு இருக்குமிடத்தில் எதுவும் நிகழும்.

''இந்தக் கடிதத்தில் அன்பு எங்கிருந்து வந்தது என்றுதானே நீ யோசிக்கிறாய்? கடிதத்தின் வாசகத்தில் குரோதமும் துவேஷமும் கூடவுமே இருக்கலாம். ஆனால் அந்தக் கடிதத்தின் கருத்தைக் காத்துவைத்து, அடக்கி யாதியைத் தேடிக் கொண்ட ஒரு கணவனின் பிரேமையுமல்லவா அதில் கண்ணுக்குத் தெரியாமல் கரைந்திருக்கிறது? 'பங்கஜம் தியாகம் செய்யலாம், ஆனால் என்னால் முடியாது?' என்று சொன்னாலும் அவருடைய தியாகமுமல்லவா அதில் உறைந்து விட்டது? இதெல்லாவற்றுக்கும் மேலாக அந்தக் கடிதத்தில் என்ன எழுதி யிருக்

றது என்றே தெரியாமல் என்னிடம் கொண்டு வந்து கொடுத்தானே அந்தக் குழந்தையின் உள்ளம் கொள்ளாத வெள்ளை அன்பும் அல்லவா இந்தக் கடிதத்துடன் பின்னிப் பிணைந்து விட்டது? தன் அம்மாவின் வாழ்வுக்கு வழி தந்த அந்தக் கடிதம் எனக்கும் அப்படியே இருக்கும் என்று எண்ணிய அவனது குழந்தைத் தனத்தையும், அப்பெருஞ்செல்வத்தை எனக்குத் தன் பரிசாகத் தரவேண்டுமென்ற பெரும்போக்கையும், கடிதத்தை என்னிடம் அளித்தபோது அவன் கொண்ட பூரிப்பையும், நான் அதை ஏற்க மறுத்தபோது அவன் உள்ளம் சாம்பி மங்கியதையும், கடைசியில் அதை நான் ஏற்றபோது அவன் அக விளக்கு ஜொலித்துச் சுடர் வீசியதையும் நீ எப்படி அறிவாய்? ராமனின் அன்புக் கால் பட்டுக் கல்லும் பெண்ணைப் பூத்தது போல் பாலுவின் அன்பில் இந்தக் கல்லும் மலர்ந்தது.

"அந்தக் கடிதத்தை நீ பேரிடி என்றாய். உண்மைதான். இடி மழையில் பிறக்கிறது. ஆனால் இடி விழுந்து எழுந்த நெருப்பை அந்த மழையே அணைக்கக் கூடுமல்லவா? பாலுவின் காரணமாகத்தான் இந்தக் கடித இடி பிறந்தது. இந்த இடி விழுந்து நான் எரிந்து போகாமல் என்னை அவனது அன்பு மழையே காப்பாற்றி விட்டது..." உணர்ச்சி வசப்பட்டு விட்டாள் உமா.

உச்சநிலையை அடைந்த உணர்ச்சி வேகம் சில நாட்களில் தன்னாலேயே அந்த வேகத்தைத் தாளமுடியாமல், தானே அந்த வேகத்துக்கு இரையாகி ஓய்ந்து போயிற்று. 'ஸ்டெதாஸ்கோப்'புக்கு அகப்படும் உமாவின் இதயமும், 'ஸ்டெதாஸ்கோப்'புக்கு அகப்படாத இதயமும் ஒரே சமயத்தில் பரம சாந்தியில் தோய்ந்தன.

உமாவின் பொருள்களை ஒழுங்கு செய்த ராஜுவுக்கு அந்த உறை அகப்பட்டது. ஆச்சரியத்துடன் அவன் படிக்கலானான்.

அன்பானவருக்கு,

எங்கே உமா அக்கா வந்து விடுவாளோ என்ற அவசரத்தில் இதை எழுதுகிறேன்.

உங்களை நான் 'அன்பானவர்' என்று அழைத்திருப்பது உண்மையானாலும் உங்களுடைய குலம் விளங்க ஒரு விளக்கை அளித்திருக்கும் நான் அந்த விளக்கின் ஒளியை மனம் கொண்ட மட்டும் நுகர நீங்கள் வழி செய்தே ஆக வேண்டும். நானும்தான் பொறுத்துக் கொண்டு வருகிறேன் என்றாலும் நீங்களும் எப்படி இதற்கு உடன் பட்டிருக்கிறீர்கள்? பெற்றெடுத்தவளுக்கில்லாத உரிமை இன்னொருத்திக்கு என்றால் அதை எப்படி ஒரு பெண்ணால் சகிக்க முடியும்? நான் இந்த வீட்டில் இருக்கும் வரை பாலு எனக்குத்தானே முதல் உரிமை? அந்த உரிமையை எனக்கு வாங்கித் தர நீங்கள் விரும்பாவிடில் என்னை வெளியே அனுப்பிவிடுங்கள். உரிமையை வாங்கித்தர விருப்பமிருந்தால்....

ஒரு கோரிக்கை. நீங்கள் நீண்ட நாட்களாக விரும்பிய சரோஜாவைத் தரப் போகிறேன் என்பதற்காக வேணும் நான் உமா அக்காவிடம் காட்டிய நட்பெல்லாம் நடிப்புத்தான் என்று நீங்கள் ஒருபோதும் வெளிப்படுத்தக் கூடாது. என் கூடப்பிறந்த அக்காவுக்குக்கூட நான் என் மனதைச் சொன்னதில்லை. என்னைக் காட்டிக் கொடுக்காதீர்கள்!

- பங்கஜம்

அவசரத்தில் பங்கஜம் தேதியைக் குறிப்பிடவில்லை. என்றாலும் தபாலில் போட்ட இடம், பட்டுவாடா செய்த இடம் என்று உறையில் இரண்டு முத்திரைகள் இருந்ததால், மை சற்று மங்கி யிருந்தாலும் தேதியைக் கண்டு பிடித்து விட்டான் ராஜு. வீட்டிலிருந்த பங்கஜம் உள்ளூரிலேயே உள்ள கணவன் அலுவலகத்துக்குத்தான் எழுதி யிருக்கிறாள் என்றும், அப்படி அவள் எழுதியது பாலுவின் அப்தபூர்த்திக்கு மறு தினம் என்றும் தெரிந்து கொண்டான். 'அக்காள்' உமாவைப் பற்றிய தன் மனப்போக்கை அக்காள் ராஜியிடம் கூடச் சொல்லக் கூடாது என்று பங்கஜம் கேட்டிருந்தாள். அந்த வாக்கை விசுவநாதன் காப்பாற்றி விட்டான். உமாவும் காப்பாற்ற வேண்டுமென்றே ராஜிக்குக் காட்டாமல் மறைத்து வைத்தாள். ஆனால் ராஜிக்கோ பங்கஜம் உடன் பிறந்த தங்கை என்றும் உமா அதற்கும் மேல் அல்லவா? அவள் உண்மையைத் தெரிந்து கொண்டு விட்டாள். எனினும் அந்த ராஜிக்கும் இன்னொர் உண்மை தெரிய நியாயமில்லை. அவனது உடன் பிறப்பான ராஜியின் தெய்வத்தை மெய்யாக்குவதற்காக உடன்பிறப்புக்கும் மேலான உமா சரோஜாவாகப் பிறந்திருக்கிறாள்—கல்லிலும் ஒரு மலர் பூத்து விட்டது — என்பதே அது.



தெருவில் 'டாக்ஸி' போய்க் கொண்டிருந்தது.

அதை ஒரு போலீஸ்காரர் நிறுத்தினார். "எங்கே ஐயா, உன்னுடைய லைசென்ஸை எடு!" என்று டிரைவரைப் போலீஸ்காரர் கேட்டார்.

"நான் தப்பாக ஓட்டலையே, ஐயா!" என்றார் டாக்ஸி டிரைவர்.

"அதனால்தான் சந்தேகம் வந்துவிட்டது!... இவ்வளவு ஜாக்கிரதையாக ஓட்டுகிறாயே, உன்னிடம் லைசென்ஸ் இராதோ என்று சந்தேகம்!" என்றார் போலீஸ்காரர்.

டிரைவர் அசந்து போய்விட்டார்.




அத்தியாயம் 26

## வீரன் வடிவேலு

முடிவு காலம் நெருங்கிக் கொண்டிருக்கும் போது யாருக்குமே இயல்பாக ஏற்படக் கூடிய மனப் பதற்றம் வடிவேலுவுக்கு உண்டாகவில்லை. எப்படியேனும் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முயல வேண்டும் என்ற எண்ணம் தோன்றவில்லை. இத்தனை நாட்களாகப் பெற்றிருந்த ராணுவப் பயிற்சியையெல்லாம் மறக்கடிக்கச் செய்து விட்டது அந்த விநோதக் காட்சி. முன் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதன் அவசியத்தைப் புறக்கணித்து விட்டு, அணி வகுத்து வரும் அந்த விமானங்களை அதிசயத்துடன் கண்ணிமைக்காமல் நின்று பார்த்தான் வடிவேலு. ஆற்றங் கரையில் கைநிறையக் கூழாங்கற்களை அள்ளிச் சொரியும் சிறு குழந்தைபோல அத்தனை எளிதாக அந்த விமானங்கள் குண்டுகளைச் சொரியப் போகின்றன என்று எதிர்பார்த்தான்! 'ஆகாயத்தில் பறக்கும் இயந்திர அசுரர்களையே அடக்கி ஆள்பவர்களுக்குப் பூமியில் உலவி வரும் அற்ப உயிர்களைப் பறிப்பதென்பது ஒரு விளையாட்டாகத்தானே விளங்க வேண்டும்? வானில் எட்டாத தொலைவுக்கு ஏறிச் சென்றதுமே அந்த விமானிகளின் உள்ளங்களில் ஒருவித உயர்வு மனப்பான்மை குடிகொண்டு விடாதா? ஆயிரக்கணக்கான மக்களை வாழ வைப்பதோ, சாக அடிப்பதோ தங்கள் கையில்தான் இருக்கிறது என்கிற மமதை தலைக்கேறும்போது அதுவே போதையாக அமைந்து அறிவை மயக்காதா? தூண்டில் புழுவெனத் துடிதுடித்துச் சாகப் போகின்றவர்களெல்லாம் தங்களைப் போலவே மனிதர்கள்தான் என்பதை அந்த விமானிகள் எங்கே சிந்தித்துப் பார்க்கப் போகிறார்கள்? மனிதனை மனிதன் வேட்டையாடிக் கொல்கின்ற காலமில்லை இது; முருங்கை மரத்தில் அப்பிக் கொண்ட மூசுக் கட்டைகளைத் தீ மூட்டிப் பொசுக்குவது போலக் கூட்டம் கூட்டமாக மக்களை வதைத்து அழிக்கும் காலம்!

'இதற்குள்ளாக நூற்றுக்கும் மேற்பட்ட லாரிகளில் போர் முனைக்குப் போய்க் கொண்டிருக்கும் பிரிட்டிஷ் இந்திய துருப்புக்களின் நடமாட்டம் அந்த விமானிகளின் கண்களில் தென்பட்டிருக்கும். 'பாம்பர்'கள் இதோ நெருங்கி வந்து விட்டன. அடுத்தாற்போல் ஒன்றன் பின் ஒன்றாக அந்த விமானங்கள் விரைவாகக் கீழிறங்கி வந்து தலைக்கு மேலாகத் தாழப் பறக்கும். அப்போது ஒவ்வொரு விமானத்தின் அடிவயிற்றிலும் பொருத்தப்பட்டுள்ள கதவு திறந்து கொள்ளும். ராட்சதப் பறவையொன்று முட்டைகள் இடுவது போல் குண்டுகளை உதிர்த்து விட்டுச் செல்லும்.'

கேவல்சிங்கினுடைய துப்பாக்கியின் அடிவாரம் வடிவேலுவின் முதுகை அழுத்திக் குத்தி உலுக்கி, நிலை தடுமாற வைத்தது. ''முட்டாள்! குப்புறப் படுத்துக் கொள்!'' என்று தொண்டை கிழியக் கத்தினான் ஸுபேதார். அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்த பின்னர் கண்களையும் இறுக மூடிக் கொண்டான் வடிவேலு. குண்டு விழும் போது எழப் போகின்ற 'விசில்' சத்தத்தை எதிர் நோக்கிச் செவிகளை மட்டும் நீட்டி வைத்துக் கொண்டான்.

'ஆகா! கடைசியில் போர்முனையைச் சென்றடையு முன்னரே உயிர் துறக்க வேண்டியதுதானா? ஜப்பானியனைக் கண்ணால் பார்க்காமலே சாகப் போகிறேனா? இந்திராணி! உனக்கு அளித்த வாக்குறுதியை என்னால் நிறைவேற்ற முடியவில்லை. ஒரு ஜப்பானியனுடைய உயிரைக் கூட நான் பலி வாங்கவில்லை. என்னை மன்னித்து விடு! குமாரி! இளமையும் இன்பமும் ஒருருவான உன்னை விட்டு இதோ நான் போகிறேன்! இந்த அபாக்கியவானை எண்ணி அசட்டுத்தனமாய் ஏங்கிக் கொண்டிராதே! சீக்கிரமாக என்னை மறந்து விடு! உன் இளமையைப் பாழடித்துக் கொள்ளாதே! நீ வாழ வேண்டும் குமாரி! நெடுங்காலம் வாழ்ந்து, சொல்லொணாக் கொடுமைக்கு உள்ளாகித் துன்புற்றிருக்கும் இந்த உலகத்தின் புண்களை உன் அன்பாலும் பண்பாலும் ஆற்ற வேண்டும்! இன்ப லோகமாக இதனை மாற்ற வேண்டும்!'

வடிவேலுவின் உள்ளத்தை வேதனை அரித்தது. விம்மலில் உடல் குலுங்கியது. அவன் கண்களிலிருந்து பெருகிய நீர் சகதியுடன் கலந்தது.

''கோழை! கோழை! அழுகிறான், வெட்கமாயில்லை?''

ஸுபேதார் கேவல்சிங் அவனருகே நின்று இடிஇடியென்று சிரித்தான். சுற்றிலுமிருந்த வேறு பலரும் கெக்கலி கொட்டி நகைத்தார்கள்.

வடிவேலு மெல்ல எழுந்து தேகத்தில் ஒட்டிக் கொண்டிருந்த சேற்றை வழித்து எறிந்தான். வெகு தூரத்தில் சிட்டுக்களின் அளவுக்குச் சிறுத்துத் தோன்றின ஜப்பானிய விமானங்கள்.

''குண்டு போடாத போதே இப்படி பயந்து அழுகிற இவன், நிஜமாகவே அந்த விமானங்களுள் ஒன்று, ஒரு குண்டை வீசி விட்டுப் போயிருந்தால் அது எங்கோ எட்ட விழுந்திருந்தால் கூட, உளறி அடித்துச் சுருண்டு செத்து விட்டிருப்பான்!''

மீண்டும் குபீரென்று சிரிப்பொலி எழுந்தது அங்கே.

'அவர்களுக்கு எப்படி விளக்கிச் சொல்வது?' மௌனமாய்த் தலையசைத்தான் வடிவேலு. பேசிப் பயனில்லை என்று தனக்குத்தானே கூறிக் கொள்பவன் போல. தன் உயிருக்கு அஞ்சியா அவன் அழுதான்? நரகமாக மாறி விட்டிருக்கும் இந்தப் பயங்கர உலகம் குமாரி போன்ற தேவதைகள் வாழ ஏற்ற இடமில்லையே என்பதற்காகத்தான் கண்ணீர் விட்டதாகச் சொன்னால் அவர்களுக்குப் புரியவா போகிறது? சொர்க்கத்தின் அரசிகளெனச் சிறப்புடன் திகழ வேண்டிய எத்தனை பெண்கள் இன்று சந்தர்ப்ப வசத்தால் சாக்கடையில் உழலுகிறார்கள்! குணக் குன்றாக விளங்க வேண்டிய டையென், யுத்த அரக்கனுக்கு அடிமையாகி அவன் அந்தப்புரத்தில் அவமானப் பட்டுக் காலத்தை ஓட்டவில்லையா? அவ்விருவரையும் பற்றி எண்ணியபோது நெஞ்சு குமுறிக் கண்ணீர் உகுத்ததாய்க் கூறினால் இவர்கள் கேலி செய்வதை நிறுத்தி விடவா போகிறார்கள்?'

தொப்பியைத் தலையிலணிந்து சரி செய்து கொண்ட அவன், மறைந்து செல்லும் விமானங்களைப் பார்த்தவாறே, ''ஆச்சரியமாயிருக்கிறதே!'' என்று கூறினான்.

''அதில் ஆச்சரியமொன்றுமில்லை. ஏற்றிக் கொண்டு வந்த குண்டுகளையெல்லாம் பினாங்குத் தீவில் இறக்கி விட்டுப் போகின்றன அந்த விமானங்கள். நம் மீது போட அவற்றினிடம் ஒரு குண்டு கூட மிச்சமில்லை! அவ்வளவையும் ஜியார்ஜ் டவுனிலேயே வீசித் தீர்த்துக் கட்டி விட்டுத் திரும்புகின்றன.''

'பதினைந்து மைல் நீளமும் எட்டுமைல் அகலமுமே உள்ள சின்னஞ்சிறு தீவின் கடல் துறைப் பகுதியில் மட்டும் ஒவ்வொரு நாளும் எழுபது விமானங்கள் குண்டு மழை பொழிவதென்றால்....' நினைத்துப் பார்க்கவே பிடிக்கவில்லை வடிவேலுவுக்கு.



மனச் சங்கடத்துடன் அவன் லாரியை நோக்கி நடந்தான். அந்தத்தருணத்தில் திடீரென்று மறுபடியும் விமானங்கள் நெருங்குகிற ஓசை கேட்டது. இவை பாம்பர்கள் அல்லவென்றும் அவற்றுக்குப் பக்கபலமாக வந்த ஒரே எஞ்சினுடன் கூடிய ஆனால் மிக வேகமாய்ப் பறக்கும் சக்தி பெற்ற சிறிய யுத்த விமானங்கள் என்றும் ஒலி வித்தியாசத்திலிருந்தே கண்டுபிடிக்க முடிந்தது. அண்ணாந்து நோக்கினான் வடிவேலு. அவற்றுள் ஏழு உயரப் பறக்க ஒன்று மட்டும் அணிவகுப்பை விட்டுப் பிரிந்து 'விருட்'டென்று கீழிறங்கி வந்தது. அந்த விமானியின் எண்ணக் கருத்தைப் புரிந்து கொள்வது கீழே இருந்த வீரர்களுக்குக் கடினமாயில்லை. பாம்பர்கள் தங்களைத் தாக்காமல் போய் விட்டதால் இந்த 'பைட்டர்' விமானங்களும் அவ்வாறே தங்களை ஏதொன்றும் செய்யாமல் சென்று விடும் என்று நம்பி மோசம் போனதை அனைவருமே உணர்ந்தார்கள். விநாடிகளுடன் போராடியபடி பாய்ந்து சென்று லாரியின் பின் பக்கத்தில் பதுங்கிய வடிவேலு, 'டப்டப்டப்டப்' பென்று விமானத்தின் மிஷின் கன் செயல்படுவதையும் ராணுவ வாகனத்தின் முன் பக்கக் கண்ணாடி ஒன்று நொறுங்கிச் சிதறும் ஓசையையும் செவியுற்றான். கூடவே, அவனைப் போல் அத்தனை வேகமாகப் பாதுகாப்பான இடத்துக்கு ஓடிச் செல்லாத சிலர் 'ஆ' வென்று அலறும் சத்தமும் கேட்டது. வடிவேலு மறைவிடத்தை விட்டு வெளியே வந்தான். ஒருவன் இறந்து போயிருப்பதையும் வேறு நால்வர் பலத்த காயத்துடன் துடித்துக் கொண்டிருப்பதையும் கண்டான். அத்துடன் விஷயம் முடிந்து விட்டதாயும் தெரியவில்லை. சற்றுத் தூரம் போனதும் அந்த விமானம் வட்டமடித்துத் திரும்பி மீண்டும் அவர்களை நோக்கி வந்தது. ரோசம் பொத்துக் கொண்டு வந்தது வடிவேலுவுக்கு. 'எங்களைச் சுட்டுத் தள்ளுவதென்பது அந்த விமானிக்கு என்ன வேடிக்கையாக இருக்கிறதா? கையாலாகாதவர்கள் என்று எங்களை மதிப்பிட்டு விட்டானா?' வீரர்கள் மறுபடியும் மறைவிடம் தேடி விரைகையில் வடிவேலு லாரிக்குள் தாவி ஏறிச் சென்று கனக் குறைவான 'மிஷின் கன்' ஒன்றினை எடுத்துக் கொண்டு சாலையில் குதித்தான். நட்ட நடுவே நின்று கொண்டு மிஷின் கன்னை உயர்த்தி அணுகி வருகிற விமானத்தைக் குறி பார்த்தான். விமானத்தின் துப்பாக்கி இயங்கிய ஒலியோடு வடிவேலுவின் கையிலிருந்த மிஷின் கன் செயல்படும் ஓசையும் சேர்ந்து கேட்டது.

விமானம் நெருங்கி வர வர அவன் கால்கள் மடங்கின, துப்பாக்கியின் முனை உயர்ந்தது. மண்டியிட்டு உட்கார்ந்து வெறி பிடித்தவன் போலச் சுட்டுக் கொண்டே யிருந்தான். ஆபத்தை அறிவிக்கும் குரலில் கேவல் சிங் உரக்கக் கத்தித் தன்னை அழைப்பதையும் பொருட்படுத்தாத அவன், தரையில் அழுத்தமாக ஊன்றியிருந்த தன் வலது முழங்காலையும் இடது பாதத்தையும் சற்றேனும் அசைக்கவில்லை. அவன் கையிலேந்தி யிருந்த இயந்திரத் துப்பாக்கி, குண்டுகளைக் கக்குவதும் நிற்கவில்லை. அவற்றில் இரண்டொன்றாவது ஜப்பானிய விமானிக்கு மிக அருகே பாய்ந்திருக்க வேண்டும். கொட்டம் அடங்கப் பெற்ற அவன் திரும்பி வராது போய் விட்டான்.

முகம் முழுவதும் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பி உருண்டோட இரைக்க இரைக்க நின்ற வடிவேலுவைப் பிரமிப்புடன் பார்த்துக் கொண் டிருந்தார்கள் மற்றச் சிப்பாய்கள். 'சற்று முன்னால் கோழை என்று கேவல்சிங்கினால் தூற்றப்பட்டுத் தங்களுடைய கேலிச் சிரிப்புக்கும் இலக்கான அதே ஆசாமிதானா இவன்?'

சிலையாக நின்ற அவர்களை மளமளவென்று உத்தரவுகளைப் பிறப்பித்து உயிர் பெறச் செய்தான் கேவல்சிங். ஆஸ்பத்திரி வாகனத்திலிருந்து 'ஸ்ட்ரெச்சர்'களை எடுத்து வந்து காயமடைந்தவர்களைத் தூக்கிப் போகச் செய்தான். வேறு சிலரைச் சாலையோரத்தில் குழி தோண்டும்படி ஏவினான். நில மட்டத்துக்குக் கீழே ஒளிந்து போராட உதவ வேண்டிய மண்வெட்டியால் முதன் முதலாகச் சவக்குழி பறிக்க நேர்ந்ததை எண்ணி முணுமுணுத்துக் கொண்டே கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்த அவர்களை அனுப்பி விட்டு வடிவேலுவிடம் வந்தான் அவன்.

சொற்படி கேளாததற்காகத் திட்டப் போகிறான் ஸுபேதார் என்றெண்ணிய வடிவேலுவுக்கு சிகரெட் ஒன்று நட்பின் அடையாளமாகக் கிடைத்தது. "உன்னைத் தவறாக மதிப்பிட்டு விட்டேன் வடிவேலு!" என்றான் கேவல்சிங். சிகரெட்டைப் பற்ற வைத்ததுடன் அவன் தோள்களையும் தட்டிக் கொடுத்தான். "மைக்கேலிடம் இங்கு நடந்தவற்றைக் கூறி மேலிடத்துக்கு உன் வீரத்தைப் பாராட்டி எழுதச் சொல்கிறேன்" என்றான்.

# உங்கள் குழந்தைகளுக்கும் சேமிப்புப் பழக்கம் ஏற்படட்டும்.

அவர்களும் தங்களுக்குச் சொந்தமாகப் பாஸ் புத்தகங்கள் வைத்திருக்க விரும்புவார்கள். குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்டில் ஒரு ஸேவிங்ஸ் பாங்குக் கணக்கு ஆரம்பித்து வையுங்கள்! குழந்தைகள் பள்ளிப் பரீட்சையில் வெற்றி பெற்றபோதும், வீட்டு வேலைகளைச் செய்து உதவும்போதும், பிறந்தநாள் முதலான சந்தர்ப்பங்களிலும் ரொக்கப் பரிசுகள் வழங்கி, அந்த சம்பாத்தியங்களை சேமிப்புக் கணக்கில் கட்டிவரச் செய்யுங்கள்.



**விசேஷ வசதி** ■ நீங்கள் ஆண்டு ஒன்றுக்கு 100 செக்குகள்வரை எழுதி, எந்த சமயத்தில் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் முன்னறிவிப்பு இன்றி வாங்கிக்கொள்ளலாம். தவிர உங்கள் சேமிப்பிற்கு ஆண்டு ஒன்றுக்கு 3% தொடர்வட்டி கிடைக்கும்.

## தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்

T. D. கன்னாரா, ஜெனரல் மானேஜர்

B/C/98 TM



## அத்தியாயம் 27

# "மன்னித்துவிடு!"

கருகும் மென்றிருந்த இருட்டு. நட்சத்திர ஒளி கூடப் பரவாத வகையில் மரங்களின் கிளைகளும் இலைகளும் தழைத்து வளர்ந்திருந்த வனம். சேற்றுக் குட்டைகளில் தவளைகள் 'கொரட் கொரட்'டென்று சத்தமிட்டன. அவை சற்று ஓய்ந்தால் பூச்சிப் பொட்டுகள் 'டிக் டிக்'கென்று ஓசைப்படுத்துவது கேட்டது. இவற்றுக் கிடையில் மலேரியாக் கொசுக்களின் 'ஙொய்' என்ற ரீங்காரம் வேறு கேட்டது.

நிறைய மது குடித்தால் வியாதிகள் பலவும் கிட்டத்தில் அணுகாது என்று வடிவேலு எங்கோ எப்போதோ படித்திருந்தான். மலேரியாவிலிருந்து மது தன்னைக் காப்பாற்றுமா என்பது அவனுக்குத் தெரியாது. இப்போதைக்கு மனச் சோர்வையும் உடற் சோர்வையும் அகற்ற மது அருந்த வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. மரத்தடியில் படுத்திருந்தவன் எழுந்தான். நுனியில் ஒரு கிளையுடன் கூடிய கனமான குச்சியைப் பொறுக்கி எடுத்துத் தரையில் நட்டான். இரும்புத் தொப்பியை அதிலிருந்து தொங்க விட்ட போது சிறு வயதில் உண்டிவில் தயாரித்துப் பள்ளிக்கூடக் கடிகாரத்தை உடைத்தது அவனுக்கு நினைவு வந்தது. தனக்குள் சிரித்துக் கொண்டே காய்ந்த இலைச் சரகுகளையும் சுள்ளிகளையும் திரட்டித் தொப்பியினடியில் குவித்தான். தோளிலிருந்து கட்டித் தொங்கிய குடிநீர் டப்பாவைக் கவிழ்த்துக் கொஞ்சம் நீரை இரும்புத் தொப்பியில் கொட்டினான். தீ மூட்டினான். நெருப்பிலிருந்து புகை கிளம்பி அவன் கண்களில் ஏறியது: எரிச்சலைத் தந்தது: கண்ணீரைத் தருவித்தது. இமைகளைக் கொட்டியபடியே விலகினான் வடிவேலு. மூன்று நாட்களுக்கு முன்னால் தான் நிஜமாகவே அழுததும், கோழை என்று பரிகசிக்கப் பட்டதும், பின்னர் வீரனென்று பாராட்டப்பட்டதும் அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தன.

'யாருக்கு வேண்டும் பாராட்டு?' என்று வெறுப்புடன் எண்ணினான் அவன். 'மிஷின் கன் என்பதாக ஒன்றினைக் கண்டு பிடித்தானே, அவனைப் பாராட்டுங்கள் எல்லாருமாகச் சேர்ந்து! மைக்கேல் கூறினானே மிஷின் கன் உருவான கதையை!'

விருந்து ஒன்றில் அமெரிக்க விஞ்ஞானியும் வியாபாரியும் சந்தித்தார்கள்: தன் மின்சார, ரசாயன ஆராய்ச்சிகளைப் பற்றிப் பெருமிதத்துடன் பேசினான் விஞ்ஞானி. 'உன் மின்சாரத்தையும் ரசாயனத்தையும் தூக்கிலே போடு!' என்றான் வியாபாரி. 'செல்வம் குவிக்க வேண்டும் என்ற ஆசை உனக்கு இருந்தால் ஐரோப்பிய நாடுகளிலுள்ளோர் ஒருவரை ஒருவர் வேகமாகவும் எளிதாகவும் கொன்று குவிக்க உதவும் வகையில் எதையேனும் கண்டுபிடி!'

'எவ்வளவு அழகாகச் சொன்னான் அந்த வியாபாரி!' என்று வியந்தான் வடிவேலு. 'நாளுக்கு நாள் மனிதனை மனிதன் அழிக்கும் வேகம் அதிகரித்துக் கொண்டே போக வேண்டும்! நாளுக்கு நாள். மனிதனை மனிதன் அழிக்கும் வேலை சுலபமாகிக் கொண்டே

போக வேண்டும்! அதுதானே நாகரிக வளர்ச்சிக்கு அடையாளம்?'

வடிவேலு உட்கார்ந்திருந்த இடத்துக்குப் பத்துப் பதினைந்து அடி தூரத்தில் நெடுஞ்சாலை அமைந்திருந்தது. தெற்கு வடக்காகச் சென்ற அதன் மறுபுறத்தில் இதே போன்ற கானகம் தான். ஆனால் இப்போது அந்தக் காட்டில் வடக்குத் திசையில் சாலையை ஒட்டினாற் போல் ஏதோ சலசலப்பு உண்டாவது போலிருந்தது வடிவேலுவுக்கு. முயலோ மானோ அல்லது குரங்கோ இரவில் சில சமயங்களில் பயந்து போய் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடுமே அந்த ஓசை அல்ல அது. யாரோ சர்வ ஜாக்கிரதையாக அதிகமாகச் சத்தப்படுத்தி விடக் கூடாது என்பதை நன்கு கருத்தில் கொண்டு இங்குமங்குமாய் அலைவது போல் தோன்றியது.

அவசரம் அவசரமாக மண்ணை அள்ளிப் போட்டு நெருப்பை அணைத்தான் வடிவேலு. முழுமையாக அதன் ஒளி குன்றி ஜ்வாலை மடியுமுன்னரே ஏழெட்டுத் தோட்டாக்கள் அதில் வேகமாய்ப் பாய்ந்து சுள்ளிகளையும் நெருப்புப் பொறிகளையும் சிதற அடித்தன. தவளையைப் போலக் கால்களால் தரையை உந்தி எம்பி எட்டப் போய் விழுந்தான் வடிவேலு. இதற்குள் நெருப்பும் நன்றாக அணைந்து விட்டது.

'தீயினையே இலக்காகக் கொள்ளாமல் அதற்குச் சற்று பக்கவாட்டில் குறிவைத்துச் சுட்டிருந்தால் ஜப்பானியர் எதிர்பார்த்தது நன்கு நிறைவேறியிருக்கும்! இப்போது மட்டுமென்ன? காவலிருந்த ஒரே ஒருவனும் செத்து விட்டதாகவே அவர்கள் நினைத்துக் கொள்ளட்டுமே!'

மெல்ல மெல்லத் தவழ்ந்தும் ஊர்ந்தும் ரேடியோடெலிபோன் இருந்த இடத்தை அடைந்தான் வடிவேலு. ''ஸெக்ஷன் கமாண்டர் பேசுகிறேன்'' என்று பெருமிதத்துடன் தான் யாரென்பதை டெலிபோன் மூலம் அறிவித்த போது சிப்பாய் நிலையிலிருந்து ஒரு படி மேலே ஏறிச் சென்றிருப்பது குறித்துத் தன் மனம் பூரிப்படைவது தெளிவாகியது அவனுக்கு. தேனூர் மிராசுதாராக விளங்கப் போகிற தனக்கு இதொன்றும் பிரமாதமான இந்திரப் பதவி இல்லை என்பதை அவன் புரிந்து கொண்டு தானிருந்தான். ஆனாலும் உள்ளத்துக்குள் உண்டான அந்தக் கிளுகிளுப்பு வார்த்தையிலும் பிரதிபலிப்பதை அவனால் தடுக்க முடியவில்லை. தான் அதிகமாகக் கேட்டதையும் குறைவாகவே கண்டதையும் காப்டன் மைக்கேலுக்கு அவன் தெரியப்படுத்தினான்.

''இப்போது மணி மூன்றாகிறது. விடிய இன்னும் இரண்டு மணி நேரம்தான் இருக்கிறது. வெளிச்சத்தில் அவர்களை ஒரு கை பார்ப்போம். அவர்களும் இருளில் அதிகமாக முன்னேறித் தொந்தரவு கொடுக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். எதற்கும் நீ விழிப்புடன் இரு!'' என்று பதில் கிடைத்தது.

இருளை ஊடுருவும் கண்களுடன் அவன் காத்திருந்தான். கடந்த ஒரு வார காலமாக ஜப்பானியருடன் போராடிப் பலத்த சேதத்துக்கு உள்ளான துருப்புக்கள் பின்வாங்கித் தெற்கே ஐந்து மைல் தொலைவில் ஓர் ஆற்றினைக் கடந்து கொண்டிருந்தன அப்போது. முன்னேறி வருகிற ஜப்பானியர்களால் அவர்களுக்கு மேலும் துன்பம் நேராதிருக்க இடையில் புகுந்திருந்த சுமார் ஓராயிரம் பேர்களுள் வடிவேலுவும் ஒருவன். தன் கடமை என்னவென்பது அவனுக்கு நன்கு தெரியும். 'பின்வாங்கிச் செல்கின்றவர்களில் உடல் களைத்துச் சோர்ந்த எண்ணற்றவர்களைத் தவிரக் கையிழந்தவர்களும் காலுடைந்தவர்களும் கண்ணிழந்தவர்களும் ஏராளம். பசியாலும் பிணியாலும் வாடுபவர்கள் பலர். அவர்களுக்கு ஓய்வும் நல்ல உணவும் தேவை. அது அவர்களுக்குக் கிடைப்பதும் கிடைக்காததும் இங்கே நாம் எத்தனை திறமையுடன் எவ்வளவு காலம் ஜப்பானியரைத் தடுத்து நிறுத்துகிறோம் என்பதைப் பொறுத்திருக்கிறது....'

சற்று நேரத்தில் நில அதிர்ச்சியே ஏற்படுவது போல் ஒரு பயங்கரச் சத்தம் கேட்டது. எதிரியின் டாங்கு ஒன்று சாலையில் முன்னேறி வருகிறதென்பது அவனுக்குப் புலனாயிற்று. மறுபடியும் மைக்கேலுடன் டெலிபோனில் பேசுவோமா வேண்டாமா என்ற யோசனையில் சில நிமிஷங்கள் கழிந்தன. அதற்குள் அகன்ற இரும்புச் சங்கிலிகளும் பல சக்கரங்களும் உருளும் போது உண்டாகும் கிடுகிடுக்கச் செய்கிற ஓசை அடங்கி விட்டது. வடிவேலு மௌனமாகச் சிரித்தான். இதற்குள் அவனுக்குப் பக்கபலமாகக் கேவல் சிங்கும் அவன் பட்டாளத்தைச் சேர்ந்த மற்றவர்களும் மைக்கேலால் அனுப்பப்பட்டு வந்து விட்டார்கள். ஜப்பானிய டாங்கு ஒன்று அருகில் வந்திருப்பதை அவர்களுக்கு ரகசியக் குரலில் அறிவித்தான் வடிவேலு. ''சாலையின் குறுக்கே விழுமாறு நேற்று மாலை நாம் வெட்டிச் சாய்த்த மரங்கள் தான் அந்த டாங்கைத் தடுத்து நிறுத்தி வைத்திருக்கின்றன. சந்தேகமில்லை!'' என்றான் மகிழ்ச்சியோடு.

**ப**லபலவென்று பொழுது விடிந்தது.

டாங்கு எதையும் காணோம்.

ஜப்பானியர் யாரும் வந்த சுவடே தெரியவில்லை!

ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனான் வடிவேலு. 'எங்கே அவர்கள்? எப்படி மாயமாய் மறைந்தார்கள்? எல்லாமே என் மனப் பிரமையா? சில மணி நேரத்துக்கு முன்னால் எதிர்ப் புறத்திலிருந்து பறந்து வந்த தோட்டாவுக்கும் என் சிரத்துக்கும் அரை அங்குலம் தானே இடைவெளி இருந்தது? அது எப்படிக் கனவாக இருக்க முடியும்? ஆகா! பாதையின் குறுக்கே போடப்பட்டிருந்த மரங்கள் எங்கே? அவை எப்படி வீதியின் ஓரத்துக்கு ஒதுங்கிச் சென்றன? பொல்லாத ஜப்பானியர் இரவோடு இரவாகப் பூனைக் கண்களுடன் காரியத்தை முடித்திருக்கிறார்கள்! டாங்குகள் செல்லத் தடையாக இருந்த மரங்களை இரவின் அமைதி குலையாது அப்புறப்படுத்தியிருக்கிறார்கள்!

'ஆயினும் அவர்கள் இப்போது எங்கே?'

'இதோ இங்கேதா னிருக்கிறோம்' என்று பதிலளிக்கும் முகமாகப் 'பட்பட்பட்பட்'டென்று பட்டாசுகளைக் கட்டோடு கொளுத்திப் போட்டது போன்ற சத்தத்துடன் கனக் குறைவான இயந்திரத் துப்பாக்கிகள் சரமாரியாகக் குண்டுகளைப் பொழிந்தன. வடிவேலுவுக்குப் பக்கத்தில் இருவர் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு சாய்ந்தார்கள். புதர்கள் மண்டிக் கிடப்பது போல் தோன்றுகிற ஓரிடத்திலிருந்து அந்தத் தோட்டாக்கள் புறப்பட்டு வருகின்றன என்பதைக் கண்டுகொண்டான் வடிவேலு. அந்தப் புதர்களை நோக்கி எவ்வளவுதான் துப்பாக்கியால் சுட்டும் பலனில்லை என்பதும் ஜப்பானியர் தாங்கள் குழி பறித்துப் பதுங்கியிருப்பதை மறைக்கவே செடிகளையும் கிளைகளையும் வெட்டி முன்னால் போட்டிருக்கிறார்கள் என்பதும் தெளிவாயிற்று. மரங்களின் அடிவாரத்திலேப் புகலடைந்திருந்த இந்தியச் சிப்பாய்கள் இம்மி அளவு அசைந்தாலும் அந்த மிஷின் கன்கள் நெருப்பைக் கக்கின.

என்ன செய்ய வேண்டுமென்று ஒரு முடிவுக்கு வந்தான் கேவல் சிங். தங்களுள் இருவர் சுற்றி வளைத்துக்கொண்டு ஓடிப் போய்ச் சாலையைக் கடந்து மறுபுறத்தில் அந்த ஜப்பானியருக்குப் பக்கவாட்டில் நெருங்கி வந்து அவர்களை எம லோகத்துக்கு அனுப்ப வேண்டும். அது வரையில் அந்த ஜப்பானியரின் கவனம் அவ்விருவர் பக்கமாகத் திரும்பாத வண்ணம் மற்றவர்கள் மரங்களின் மறைவிலிருந்து கொண்டே துப்பாக்கியால் நேருக்கு நேராகச் சுட்டுத் தாக்க வேண்டும்! இருந்த இரண்டு இயந்திரத் துப்பாக்கிகளையும் இந்த அபாயகர சோதனையில் இறங்கத் துணிந்த வடிவேலுவிடமும் மற்றொருவனிடமும் தந்தான் கேவல்சிங்.

திட்டமிட்டபடியே எல்லாம் நடந்திருக்கும் ஜப்பானியனுக்குப் பின்பக்கமாக வந்து சேர்ந்த வடிவேலுவின் துப்பாக்கி பிடித்த கரங்கள் நடுங்காமலிருந்திருந்தால்! 'எப்படிக் கொல்வது? மனிதனை மனிதன் முதுகுப்புறத்திலிருந்து கொண்டு எவ்வாறு சுடுவது? கொலையாகாதா அது?' அன்று தனியொருவனாக ஒரு விமானத்தையே சுட்டு வீழ்த்த அஞ்சா நெஞ்சத்துடன் முன்வந்தவன் இன்று மனிதனைத் தாக்கப் பயப்பட்டான். முன்னதை உலோகக் குவியலென்றும் பின்னதை ரத்தமும் சதையும் கொண்ட உயிர்க் குவியலென்றும் வேற்றுமை பாராட்டித் தயங்கினானா? சில வினாடிகள் அவன் அப்படி தாமதித்தது அவனுடைய நண்பனின் வாழ்க்கைக்கு முடிவு கட்டி விட்டது. குழியில் பதுங்கியிருந்த ஐவரில் நால்வரது உயிரைப் பறித்த அவன், ஐந்தாவது நபரால் சுட்டுக் கொல்லப்பட்டுச் சுருண்டு விழுந்தான். அதே கணத்தில் திடுக்கிட்டு விழிப்புற்ற வடிவேலுவின் விரல் விசையை அழுத்தியது. அவ்வளவுதான், அந்த ஜப்பானியரில் கடைசி ஆசாமியும் செத்தொழிந்தான்.

வடிவேலு திரும்பிப் பார்த்தான். எதையோ வெறித்து நோக்குவது போல; திறந்த இமைகளும் குத்திட்டு நின்ற விழிகளுமாய்த் தரையில் மல்லாந்து கிடக்கும் நண்பனைக் கண்டான்.

'அடப்பாவி! உன்னை நம்பி மோசம் போனேனேயடா!' என்று குற்றம் சாட்டிச் சபிப்பது போல் அவன் முகம் சமைந்திருப்பதாக வடிவேலுவுக்குத் தோன்றியது. 'மறுபடியும் இம்மாதிரி இரக்கம் காட்ட மாட்டேன் நண்பா! தயவு செய்து என்னை மன்னித்து விடு!' என்று அந்தச் சவத்தினிடம் மானசீகமாகக் கெஞ்சினான் வடிவேலு. நடந்து போனதைக் குறித்து விசனித்துக் கொண்டிருக்க நேரமில்லை அப்போது. வெறும் செடி கொடி புதர்கள் என்று இந்தியச் சிப்பாய்கள் இதுவரையில் கருதி வந்த ஓரிடத்திலிருந்து பீரங்கி ஒன்று துருத்திக்கொண்டு வெளி வந்தது. அடுத்தாற்போல் இலை தழைகள் சரிந்து இரு பக்கங்களிலும் விழ அந்தப் பீரங்கியைத் தன்னிடத்தில் கொண்டிருந்த ஒரு டாங்கு முன்னேறி வருவதையும் காண முடிந்தது. (தொடரும்)

# வாதாபிச் செல்வம்

**தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்**

நாம் வணங்கும் தெய்வங்களிடையே அக்ர ஸ்தானம் வகிப்பவர் விநாயகர். அவர் இன்று நம் கோயில்களில் மாத்திரம் அன்றி, ஆற்றங்கரைகளில், குளக்கரைகளில் ஏன், நாற்சந்திகளில் கூட இருந்து எல்லாருக்கும் எளியவராக, இனியவராக விளங்குகிறார். ஆனால் சங்கத்துச் சான்றோர் இயற்றியுள்ள பாடல்களில் விநாயகரைப் பற்றிய குறிப்பு இல்லாதிருப்பது அவ்வழிபாடு அந்தப் பழைய சங்ககாலத்தில் நம் தமிழ் நாட்டில் இல்லை என்று தெளிவுபடுத்தும். இவர் தமிழ் நாட்டுக்கு எப்போது வந்தார், தமிழர் இதயங்களில் எப்போது இடம் பிடித்தார் என்று தெரிய வேண்டாமா? தேவாரங்களில் கணபதி வழிபாடு சொல்லப் பட்டிருக்கிறது. இன்னும் சோழவள நாட்டில் தஞ்சை மாவட்டத்திலே நன்னிலத்துக்குக் கிழக்கே ஏழு எட்டு மைல் தூரத்திலே உள்ள திருச்செங்காட்டங் குடியில் உள்ள கோயில் கணபதீச்சரம் என்ற பெயருடன் நிலவி வருகிறது.

> பாலினால் நறுநெய்யால்
> பழத்தினால் பயின்றாட்டி
> நூலினால் மணமாலை
> கொணர்ந்தடியார் புரிந்தேத்த
> சேலினார் வயல்புடைசூழ்
> செங்காட்டங்குடி அதனுள்
> காலினால் கூற்று உதைத்தான்
> கணபதி ஈச்சரத்தானே

என்பது ஞானசம்பந்தர் தேவாரம். அந்தக் கோயிலில் பிரதானமாக இருப்பவர் வாதாபி கணபதி. தமிழ்நாட்டில் உள்ள விநாயகரது சிலை வடிவங்களில் இந்த வாதாபி கணபதியே மிகப் பழையவர். நமது சங்கீத வித்வான்களும் கச்சேரியை இந்த வாதாபி கணபதி வணக்கத்தோடு ஆரம்பிக்கின்றனர். இந்த வாதாபி கணபதி திருச்செங்காட்டங்குடிக்கு எப்படி வந்திருக்கிறார் என்று அறிய சரித்திர ஏடுகளைப் புரட்ட வேண்டும். வாதாபி, மேலைச் சாளுக்கியரது தலைநகர். அங்கிருந்து அரசாண்ட இரண்டாம் புலிகேசி காஞ்சியிலிருந்து அரசாண்ட பல்லவ மன்னனான மகேந்திர வர்மனோடு போர் தொடுத்திருக்கிறான். காஞ்சி நகரையே முற்றுகை விட்டிருக்கிறான். பின்னர் மகேந்திரனுடன் சமாதானம் செய்து கொண்டவன் போல் நடித்து அவன் செய்த உபசாரங்களை யெல்லாம் ஏற்றுத் தன் தலைநகர் திரும்பும்போது காஞ்சிக்கு வெளியில் உள்ள கிராமங்களைச் சூறையாடியிருக்கிறான்; பெண்களைச் சிறைப் பிடித்திருக்கிறான். இதற்கெல்லாம் பழி வாங்க மகேந்திர வர்மன் நீண்ட காலம் வாழ்ந்திருக்கவில்லை. ஆனால் அவனது மகனான நரசிம்மவர்மன், ஆம், மாமல்லபுரத்தை உருவாக்கிய மாமல்லன்தான், பின்னர் ஒரு பெரும் படையுடன் சென்று சாளுக்கியரை வென்று வாதாபிக்குள் நுழைந்து அந்த நகரையே தீக்கிரையாக்கியிருக்கிறான். இது நடந்தது கி. பி. 640ல். இந்த வரலாற்றை யெல்லாம் பேராசிரியர் கல்கி எழுதிய அந்த அற்புத நவீனமான 'சிவகாமியின் சபத'த்தில் நாம் படித்திருக்கிறோம். அப்படி நரசிம்ம வர்மன் படையெடுத்தபோது அப்படையை நடத்திச் சென்ற சேனாபதி பரஞ்சோதியார் என்றும், அவர் இந்தத் திருச்செங்காட்டங்குடிக்காரர் என்பதும், அவரே பின்னர் சிறுத்தொண்டர் என்ற பெயரோடு அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராக வாழ்ந்தவர் என்றும் வரலாறு கூறுகிறது. அவரது வாதாபிப் படையெடுப்பைப் பெரிய புராணம் பாடிய சேக்கிழாரும் மறக்காமல் சொல்கிறார்.

> மன்னவர்க்குத் தண்டுபோய்
> வடபுலத்து வாதாபித்
> தென்னகரம் துகளாகத்
> துளைநெடுங்கை வரையுகைத்து
> பன்மணியும் நிதிக்குவையும்
> பகட்டினமும் பரித்தொகையும்
> இன்னன எண்ணில கவர்ந்தே
> இகல் அரசன்முன் கொணர்ந்தார்

என்பது பாடல். அப்படிப் பல பொருள்களையும் கொண்டு வந்து வாதாபி நரசிம்ம போத்தரையன் காலடியில் கொட்டியவர் தமக்கென்று ஒரு பொருளையும் எடுத்துக் கொண்டிருக்கிறார். அதுதான் வாதாபிக் கோட்டை வாயிலில் இருந்த கணபதி. அம்மூர்த்தியைப் பெயர்த்து எடுத்து வந்து அதைத் தம் சொந்த ஊராகிய திருச்செங்காட்டங்குடியில் பிரதிஷ்டை பண்ண மன்னனின் அனுமதியையும்

திரிவிக்கிரமர்



பெற்றிருக்கிறார். அப்படித் தமிழ் நாட்டுக்குள் வந்தவரே வாதாபி கணபதி. அவர் தமிழ் நாட்டுக்கு வருமுன் கோயில் கொண்டிருந்த வாதாபிக்கு நாம் போக வேண்டாமா? அன்று நரசிம்மவர்மனோடோ இல்லை, பரஞ்சோதியாரோடோ நாம் போகவில்லை. அப்படிப் போயிருந்தாலும் போர்ப் படை வீரராகத்தான் சென்றிருப்போம். இன்றோ நாம் கலைத் தூதுவராக அந்த வாதாபிக்குச் செல்லலாம்.

முன்னரே ஹம்பி செல்ல ஹாஸ்பெட் வரை போயிருக்கிறோம். அங்கிருந்து கடக் போய் அங்கிருந்து ஷோலாப்பூர் செல்லும் பாதையில் ரயில் மாறிப் பாதாமி என்னும் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அது என்ன பாதாமி என்கிறீர்களா? அந்தப் பழைய வாதாபிதான் இன்று பாதாமி என்று திரிந்திருக்கிறது. ரோடு வழியாகப் போக வேண்டுமென்றால் ஹாஸ்பெட்டிலிருந்து கடக் போய் அங்கிருந்து பாதாமி செல்லலாம். அந்த வழியில் ரோடுகள் சரியாக இல்லை; இடையில்வரும் ஆற்றைக் கடக்கப் பாலமும் இல்லை. ஆதலால் ஹாஸ்பெட்டிலிருந்து வடக்கு நோக்கிப் பாகல்கோட் வரை போய்ப் பின்னர் தெற்கு நோக்கிப் பாதாமி வரவேணும். இப்படிச் செல்லுவது சுற்றி வளைத்துச் சென்றாலும் இதுவே வசதியான வழி. பாதாமி செல்ல பஸ் வசதிகள் எல்லாம் இருக்கின்றன.

ஊரை அடுத்து மலைச் சிகரங்கள் இருக்கின்றன. இரண்டு மலைகளுக்கிடையே ஒரு பெரிய குளம் இருக்கிறது. அதை அகஸ்தியர் குண்டம் என்கின்றனர். அடடே! அந்தத் தமிழ் முனிவர் அகஸ்தியர், நரசிம்மனையும் பரஞ்சோதியையுமே முந்திக் கொண்டு இங்கு வந்து இடம் பிடித்திருக்கிறாரே என்று எண்ணத் தோன்றும். அவரைப் பற்றி விசாரித்தால் இந்த ஊருக்கு வாதாபி என்ற பெயர் எப்படி வந்தது என்பதும் தெரியும்! பண்டைய நாளிலே தாருகாசுரன் என்னும் ஓர் அசுரன் இருந்திருக்கிறான். அவனுக்கு ஒரு தங்கை அசமுகி என்று. அவள் எப்படியோ துர்வாசமுனிவரை மயக்கி அவரை மணந்திருக்கிறாள். துர்வாசருக்கும் அசமுகிக்கும் பிறந்தவர்கள் இரண்டு பேர்கள். ஒருவன் வாதாபி; மற்றொருவன் வில்வலன். இந்த அண்ணன் தம்பியர் இருவரும் முனிவர்களை அழிக்க ஒரு வழி கண்டுபிடித்திருக்கின்றனர். முதலில் வாதாபி ஆடாக மாறுவான். வில்வலன் அந்த ஆட்டைக் கறி சமைத்து முனிவர் ஒருவரை விருந்தினராக அழைத்து அவருக்கு விருந்து அருத்துவான். பின்னர் வில்வலன் மிருத சஞ்சீவினி என்ற மந்திரத்தை ஜபித்து வாதாபியை அழைப்பான். வாதாபியும் தன் சுய உருவம் பெற்று முனிவரது வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து விடுவான். அகஸ்தியர் அந்த வாதாபி வில்வலன் இருந்த இடத்துக்கு வந்திருக்கிறார். வில்வலன் அவரிடமும் தன் கைவரிசையைக் காட்டியிருக்கிறான். ஆனால் வயிற்றினுள்சென்ற வாதாபியை அப்படியே ஜீரணித்து விடுகிறார் அகஸ்தியர். அவர் அப்படிச் செய்த இடமே வாதாபி.



அனந்த நாராயணன்

வாதாபி இன்று சிறிய ஊராகத்தான் இருக்கிறது. அது ஒரு காலத்தில் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் தலைநகரம் என்று சொல்லக் கூடிய சின்னங்கள் ஒன்றுமே இல்லை. அகஸ்தியர் குண்டத்துக்கு வடக்கிலும் தெற்கிலும் இரண்டு மலைகள். வடபக்கம் உள்ள மலை மேலே ஒரு கோயில். அந்த மலை மேலே ஏறுவது மிகச் சிரமமாக இருக்கும். நல்ல படிக்கட்டுகள் இல்லை. அங்குள்ள கோயிலை மலிகட்டி சிவாலயம் என்கின்றனர். இது பெரிய கோயில் அல்ல. கோயிலின் நீளமே ஐம்பது அடிதான். கோயில் கருவறை, சபா மண்டபம், முன் மண்டபம் என்று மூன்று பகுதியாக இருக்கிறது. மண்டபத்துத் தூண்கள் எல்லாம் சாதாரணமானவை. சிற்ப வடிவங்கள் நிறைந்ததல்ல. அங்கிருக்கும் சிவபெருமானுக்குக் கீழிருந்தே வணக்கம் செய்துவிட்டு, தென்பக்கமுள்ள மலைப் பக்கம் திரும்பலாம். ஊருக்குள்ளே பாதை வளைந்து வளைந்து செல்லும். பாதை குறுகலாகவும் இருக்கும். அவைகளையெல்லாம் கடந்து மலை அடிவாரத்துக்கு வந்தால் ஒரு படிக்கட்டு தோன்றும். படி ஏறு முன்னே அண்ணாந்து பார்த்தால் அங்குள்ள குடைவரை ஒன்று தோன்றும். கரடுமுரடான ஒரு பெரிய மலையின் ஒரு பக்கத்தை வெட்டிச் செதுக்கி அந்தப் பக்கத்திலே தரையிலிருந்து முப்பது அடி உயரத்துக்கு மேலே மலையைக் குடைந்து ஒரு குடைவரை அமைத்திருக்கிறார்கள். இப்படிக் குடைவரை ஒன்றல்ல; நான்கு குடைவரைகளை அந்த மலைச் சரிவிலே செதுக்கியிருக்கிறார்கள். இந்தக் குடைவரைகளிலுள்ள அற்புத சிற்பங்களில் பலவற்றைச் சென்ற ஆண்டு 'கல்கி' தீபாவளி மலரில் சித்திரமாகக் கண்டு களித்திருக்கிறோம் நாம்.

இந்த நான்கில் முதல் குடைவரைக்கு நாம் வந்திருக்கிறோம். அது சிவனுக்கு என்று அமைந்த குடைவரைக் கோயில். அதற்குக் கிழ்ப்புறம் அமைந்துள்ள இரண்டு பெரிய குடைவரைகளும் விஷ்ணுவுக்கு என்று ஒதுக்கப்பட்டவை. கடைசியாக ஒரு சிறு குடைவரையைச் சமணர்களுக்கு என்று ஒதுக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு குடைவரையின் முகப்பிலும், மலையிலேயே வெட்டிச் செதுக்கிய தூண்கள், அதற்கடுத்து ஒரு பெரிய முன் மண்டபம். அதன் பின்தான் உள் மண்டபம், கருவறை எல்லாம். இக்குடைவரைகள் எல்லாம் மாமல்லபுரத்துக் குடை

வரைகளின் பாணியில் தான் அமைந்திருக்கும். ஆனால் மாமல்லபுரம் உருவாவதற்கு முன்னரே இவை உருவானவை என்று சரித்திர ஏடுகள் பேசுகின்றன. பாதாமிக் குடை வரைகள் ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவானவை என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

இனி குடைவரைகள் இருக்கும் இடத்துக்குப் படிக்கட்டுகளின் வழியாக ஏறிச் செல்லலாம். முதல் குடைவரையையும் முந்திக்கொண்டு ஒரு சற்பாறை மேல் பக்கம் நீண்டு கொண்டிருக்கும். அந்தச் சுவரைச் சமன் செய்து அதில் ஒரு சந்தியா தாண்டவமூர்த்தியை ஐந்து ஆறடிச் சதுக்கத்தில் உட்புச உருவில் செதுக்கியிருக்கிறான் சிற்பி. காஞ்சி கைலாசநாதர் கோயிலின் மேலைப் பிராகாரத்திலுள்ள சந்தியா தாண்டவமூர்த்தியைப் போலவே இவ்வடிவமும் அமைந்திருக்கக் காண்போம். இக் குடைவரை வாயிலிலே பூதகணங்கள் பலப் பல வடிவங்களில் உருவாகி விருப்பார்கள். கோயிலின் கருவறையை நோக்கி நந்தியம் பெருமான் படுத்துக் கிடப்பார். இக்குடைவரையின் முன் மண்டபம், நம் வீடுகளில் உள்ள வராந்தாவைப் போல் இருக்கும். அந்த மண்டபத்தின் மேல் கோடியிலே கிழக்கு நோக்கிய வண்ணத்தில் அர்த்தநாரீசுவர வடிவம் இருக்கும்.

தோலும் துகிலும்
  குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும்
  பசுஞ் சாந்தும்
சூலமும் தொக்கவளையும்
  உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக்
  குளிர்ந்தூதாய் கோத்தும்பி

என்று அன்று மணிவாசகர் பாடினாரே, அந்தப் பாடலுக்கு ஏற்ப அம்மையப்பனாக இறைவன் அங்கு சேவை சாதிப்பான். இங்குள்ள அர்த்தநாரி வீணை ஏந்திய கையனாய் நிற்பது புதுமையானது. வலப்புறம் நந்தி, பிருங்கி முனிவரும் நிற்பார்கள். இடப்புறம் அன்னை பார்வதியின் தோழி ஒருத்தி நிற்பாள். மிக்க அழகான இந்த மாதிருக்கும் பாதியனை வணங்கிவிட்டுக் கிழக்கே திரும்பினால் மேற்கு நோக்கியவராய் ஹரிஹர மூர்த்தி நிற்பார். வலது கையில் மழுவும், இடது கையில் சங்கும் ஏந்தியவராய்ப் பார்வதி லக்ஷ்மி சகிதம் எழுந்தருளியிருக்கும் இச்சங்கர நாராயணர் மிகவும் கம்பீரமான வடிவினர். இந்தக் குடைவரையில் மகிஷமர்த்தனியும் உருண்டு திரண்ட வடிவோடு சூலம் ஏந்திய கையளாய் நிற்பாள்.



வராகர்

எல்லோரும் அர்த்த சித்திர வடிவில் இருப்பவர்தாம். கருவறையில் லிங்க வடிவிலே இறைவன் இருக்கிறான். இங்குள்ள உள் மண்டப வாயிலின் தூண்களெல்லாம் அடிப்பாகம் சமசதுரமாகவும் மேல்பாகம் வரிவரியாய் வடித்தெடுத்த கமலம் போலவும் அமைந்திருக்கும். வேறு வடிவங்கள் இந்தத் தூண்களில் செதுக்கப்படவில்லை.

இக் குடைவரையிலிருந்து வெளியே வந்து கிழ்ப்புறமுள்ள ஐந்தாறு படிகள் ஏறிச் சென்றால் இரண்டாவது குடைவரை வந்து சேருவோம். இது முதல் குடைவரையை விடப் பெரியதொன்று. இங்கு வாயிலில் இரண்டு துவாரபாலகர்கள் நிற்பதைக் காணலாம்.

இங்கு திரிவிக்கிரமனும், வராகரும் பெரிய பெரிய உருவில் இருக்கின்றனர். உள் மண்டபத்தின் விதானத்தில் கருடன் மேல் ஆரோகணித்து வரும் விஷ்ணுவைப் பார்ப்பதுடன் ஒரு மலர்ந்த தாமரையையும் பார்க்கலாம். உற்று நோக்கினால் அது தாமரை அல்ல என்றும் பதினறு மீன்களைச் செதுக்கித் தாமரை போல் அமைத்திருக்கிறார்கள் என்றும் தெரியும். இங்குள்ள குடைவரைகளில் எல்லாம் அளவில் பெரியது மூன்றாவது குடைவரைதான். இக்குடைவரை மலையில் ஆழமாக வெட்டப்பட்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் அனந்தநாராயணரும், மற்றொரு பக்கத்தில் நரசிம்மரும் மிகப் பெரிய அளவில் செதுக்கப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொன்றும் கிட்டத்தட்ட பத்துப் பன்னிரண்டு அடி உயரம் உடையவை. கம்பீரமான வடிவங்கள் அவை. இங்குள்ள கல்வெட்டு ஒன்று இக்குடைவரைகள் கி. பி. 573ல் வெட்டப்பட்டவை என்று தெரிவிக்கிறது.

இக்குடைவரைகளைக் கண்டபின் இன்னும் சில படிக்கட்டுகள் ஏறி ஒரு வாயிலில் நுழைந்து மறுபடியும் கீழே இறங்கினால் நான்காவது குடைவரைக்கு வந்து சேருவோம். இதுதான் இங்குள்ள குடைவரைகளில் சிறியது. ஜைனதீர்த்தங்கரர் பலரது வடிவங்கள் அங்கே உருவாகியிருக்கின்றன. பார்சுவநாதரது வடிவம் ஒன்றும் இருக்கிறது.

இக்குடைவரையில் நடுநாயகமாக நிற்பவர் மகாவீரர். இங்குள்ள தூண்கள் மற்றவைகளைப் போன்றவைதான் என்றாலும் அந்தத் தூண்களின் போதிகைகளில் யக்ஷனும் யக்ஷியுமாக இணைந்து இணைந்து பல வடிவங்களில் நிற்பதைக் காணலாம். உலகத்தையும் அங்குள்ள பந்தபாசங்களையும் முற்றும் துறந்த சமண தீர்த்தங்கரர்களிடையே இணைந்து நிற்கும் காதலர் வடிவங்களையும் அமைத்த சிற்பிகளின் மனப்பக்குவந்தான் என்னே என்று அதிசயித்து நிற்போம் நாம்.

## உன்னுல் முடியுமா ?

பாரீஸ் காரனரிலிருந்து சென்டிரல் ஸ்டேஷன் எதிரே ஒரு பஸ் வந்து நின்றது. அதில் இருந்த மொத்தப் பெண் பிரயாணிகளில் மூன்றில் ஒரு பகுதிப் பேர் இறங்கினுர்கள். இறங்கியவருக்குச் சமமான ஆண் பிரயாணிகள் ஏற்றிக் கொள்ளப்பட்டார்கள். அது எல். ஐ. ஸி. பஸ். ஆகவே மவுண்ட் ரோடில்தான் மறுபடியும் நின்றது. இப்போது அதில் உள்ள மொத்த ஆண் பிரயாணிகளில் மூன்றில் ஒரு பகுதிப் பேர் இறங்கினுர்கள். இறங்கிய நபருக்குச் சமமான பெண் பிரயாணிகள் ஏற்றிக் கொள்ளப்பட்டார்கள். பஸ் வல்லலை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. இப்போது அதில் ஆண் பிரயாணிகளைவிட இரண்டு பெண் பிரயாணிகள் அதிகமாக இருந்தார்கள். அப்படியானுல் பஸ் பாரீஸை விட்டுக் கிளம்பும் போது அதில் இருந்த ஆண்கள் எத்தனை பேர்கள்? பெண்கள் எத்தனை பேர்கள்? விடையைப் பார்க்காதே!

(விடை: பதினாறு ஆண்கள் பன்னிரண்டு பெண்கள்)

'பாலிலே செய்த மிட்டாய், பாலர்கள் வாங்கும் மிட்டாய்!' என்று பாடியபடி வந்தான் ஐஸ்வு மிட்டாய்க்காரன். குப்பன், கப்பன், கறுப்பன் என்ற மூன்று குழந்தைகள் ஓடினுர்கள் மிட்டாய் வாங்க. அவரவர்கள் கொடுத்த காசுக்குத் தக்கபடி மிட்டாயைக் கயிறு போல இழுத்து நீட்டிச் 'சடக்' 'சடக்' கென்று நறுக்கி மணிக்கட்டில் கட்டி விட்டான் மிட்டாய்க்காரன். குப்பன் கையில் கட்டிய மிட்டாயின் நீளம் மூன்று அங்குலம். கப்பனின் மிட்டாயோ மூன்றங்குலமும் கறுப்பனின் மிட்டாயின் நீளத்தில் நான்கில் ஒரு பாகமும் சேர்ந்தது. கறுப்பனின் மிட்டாயோ, குப்பன், கப்பன் ஆகிய இருவரின் மிட்டாயின் நீளத்தையும் சேர்த்தால் எவ்வளவோ அவ்வளவு. அப்படியானுல் மிட்டாய்க்காரன் இழுத்து நறுக்கிய ஐஸ்வு மிட்டாயின் மொத்த நீளமென்ன?

(விடை: குப்பனுடைய மிட்டாய் மூன்றங்குலமானுல் கறுப்பனுடையது ஆறு அங்குலமும் அவனுடைய மொத்த மிட்டாயின் நீளத்தில் நாலில் ஒரு பங்கும் இருக்க வேண்டும். ஆகவே நாலில் மூன்று பாகம் ஆறு அங்குலமானுல் நாலுப்பாகம் எட்டங்குலமாகும். குப்பன் மூன்று, கப்பன் ஐந்து, கறுப்பன் எட்டு.)

## உங்கள் ஆல்பத்துக்கு

இவ்விருவரையும் பார்த்த உடனேயே ஜப்பான் தேசத்துப் பெண்கள் என்று உனக்குத் தெரிந்து விடுமே? தலை முடியைச் சீவி முடிந்து சீப்பு வைத்துக் கொண்டிருப்பதும், அந்த உடையும் ஜப்பானியர்களுக்கே உரியவை. விருந்தினர்களை அன்போடு உபசரித்துப் பண்போடு பழகுவதில் ஜப்பானியர்கள் ஈடு இணையற்றவர்கள். இவர்கள் தங்கள் வீட்டை அழகுபடுத்துவதில் கைதேர்ந்தவர்கள். கலையுள்ளம் படைத்த ஜப்பானியர்கள் கைவேலைத் திறனுக்குப் பெயர் போனவர்கள். உண்பதையும் உடுப்பதையும் விருந்தினர்களை உபசரிப்பதையும் ஒரு கலையாகப் பயிலுகிறவர்கள். ஜப்பானியர் வெளியிலிருந்து வீட்டுக்குள் நுழையுமுன் நம்மைப்போலவே பாதுகைகளைக் கழற்றி விட்டுத்தான் உள்ளே போவார்கள். தேயிலைப் பானத்தைத் தயாரிப்பதையும் அதைக் குடிப்பதையுமே கூட ஒரு கலையாக மதிப்பவர்கள் ஜப்பானியர் என்று முன்பே ஒரு தடவை உனக்குச் சொல்லி இருக்கிறேனே? இதோ இவ்விரு ஜப்பானியப் பெண்களும் உங்களைத் தேயிலைப் பானம் அருந்த அழைக்கிறுர்கள்.




காகிதமும் கத்திக்கோலும்

## 'பூ ஜாடி

நீங்கள் செய்து வைத்திருக்கும் பலவிதப் பூக்களை அலங்காரமாக வைப்பதற்கு ஒரு ஜாடி செய்ய வேண்டாமா? ஐந்தங்குல அகலமும் ஒன்பதேமுக்கால் அங்குலம் நீளமும் உடைய ஒரு காட்ரிஜ் காகிதத்தை அருகில் உள்ள இரண்டாவது படத்தில் இருப்பதைப் போலச் சுருட்டி ஒட்டிக் குழல் போலச் செய்து கொள்ளுங்கள். இது ஜாடியின் நடுவில் வர வேண்டியது. இனி முதல் படத்தில் குறித்துள்ள அளவுகளின் படி ஒரு காகிதத்தைக் கத்திரித்துக் கொள்ளுங்கள். மேலும் கீழும் முக்கால் அங்குலம் விட்டு நடுவில் உள்ள பாகத்தைக் கால் அங்குல இடைவெளியில் வரிசையாகப் பிளேடினால் கீறிக் கிழித்துக் கொள்ளுங்கள். மேலும் இருமுள்ள புள்ளிக் கோட்டில் கத்தியின் பின் பக்கத்தால் அழுத்திக் கீறிக் கொண்டபின் முதலில் தயாரித்த குழலைச் சுற்றி வெளிப் பக்கமாக அதன் உயரத்துக்கு இந்தக் காகிதத்தைச் சுற்றி ஒட்டி விடுங்கள். இப்போது ஜாடி தயாராகி விடும். அது எப்படி இருக்கு மென்பதையும் இங்கே பார்க்கிறீர்கள்.





## தட்டாமாலே தாமரைப்பூ, சுற்றிச் சுற்றி...

வாயகன்ற பாத்திரத்திலுள்ள நீரிலே மிதந்தபடி, தட்டாமாலே சுற்றி ஆடும் இந்தப் பொம்மை செய்யும் விதத்தை உங்களுக்குச் சொல்லித் தரட்டுமா? இதற்கு வேண்டியதெல்லாம் நான்கு சிறிய கார்க்குகள், ஒரு பெரிய கார்க், இரண்டு நீண்ட ஊசிகள், பேப்பர், கட்டிச் சூடம் கொஞ்சம் இவைதான். படத்தில் காட்டி இருப்பது போல வட்டமான பெரிய கார்க்கின் குறுக்கும் நெடுக்கும் இரண்டு ஊசிகளைச் செருகுங்கள். நான்கு ஊசி முனைகளிலும் சிறிய கார்க்குகளைச் செருகுங்கள். நடுக் கார்க்கின் மீது இரண்டு பேர்கள் கை கோத்தபடி தட்டாமாலே சுற்றுவது போலப் பேப்பரில் வரைந்து கத்திரித்து அதை ஒட்டி நிற்க வையுங்கள். இது எல்லாமே எத்தனை சிறியதாகச் செய்ய முடியுமோ, அத்தனை சிறியதாகச் செய்து கொள்ளுங்கள். கடைசியாகக் கட்டிச் சூடத்தில் கொஞ்சம் கொஞ்சம் எடுத்து நான்கு சிறிய கார்க்கின் பின்பக்கத்திலும் ஸ்டேப்ளிங் மெஷின் ஊசி கொண்டு (அல்லது பத்திரிகைகளைத் தைத்து வருமே கம்பி, அதைப் பிரித்து எடுத்து உபயோகிக்கவும்) பொருத்துங்கள். இப்படித் தயாரித்த இந்தச் சாதனத்தை வாயகன்ற பாத்திரத்திலுள்ள தண்ணீரில் மிதக்கவிடுங்கள். எல்லாம் ஒழுங்காக இருக்குமானால் இந்தச் சாதனம் சுழல ஆரம்பிக்கும். இது சுழல இதன் மீது உள்ள பெண்களும் தட்டாமாலே சுற்றுவார்கள். ஆடிக் கொண்டே இருப்பார்கள்.



ஆனால்.... எல்லாம் ஒழுங்காக இருக்குமானால் என்று சொன்னேன் அல்லவா? இது நானுகச் சுழல்வதற்கு முக்கியமான ஒன்று கார்க்குகள், ஊசிகள், வாயகன்ற பாத்திரம், தண்ணீர், எல்லாவற்றிலுமே கொஞ்சம்கூட எண்ணெய்ப் பசை இருக்கவே கூடாது. இதுதான் மிக மிக முக்கியம். ஆகவே முதலில் கையைச் சோடா போட்டுக் கொதி நீரில் நன்கு கழுவிக் கொண்டு இதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். கார்க்குகள், ஊசிகள், பாத்திரம் இவைகளையும் இப்படியே கழுவ வேண்டும். தண்ணீரிலும் எண்ணெய்ப் பசை இருக்கக்கூடாது. இப்படிக் கவனமாகத் தயாரித்தால்தான் கார்க் பெண்களின் விளையாட்டம் தங்கு தடையின்றிப் பல நாட்களுக்குத் தொடர்ந்து நடைபெறும். மற்ற விளையாட்டுக்களைப் போல் சுலபமானதல்ல இது. ஆனால் கவனமுடன் செய்தால் வெற்றி நிச்சயம். இதைச் செய்யப் பயன்படும் பொருள்களில் ஏதாவதொன்றில் கொஞ்சம் எண்ணெய்ப் பசை (கிரீஸ்) இருக்குமானாலும் இதில் வெற்றி கிடைக்காது. ஆகவே இதை வீட்டுப் பெரியவர்களின் உதவியுடன் செய்து பாருங்களேன்!

## தர்மாஸ் பிளாஸ்க்

இரவு வெகு நேரங்கழித்து வருகிறார் உன் அப்பா. களைத்து வரும் அவருக்கு உன் அம்மா உடனே பிளாஸ்கிலிருந்து கடக்கடக் காப்பியை ஊற்றி ஆவி பறக்கத் தருகிறாள். அடுப்பு மூட்ட வேண்டிய தொல்லை இல்லை. இப்படி உஷ்ணத்தைப் பாதுகாத்துத் தரும் பிளாஸ்க் எப்படிச் செய்யப்பட்டிருக்கிறது. இதன் தத்துவமென்ன என்று உங்களுக்குத் தெரியுமா?




தீவாலே விட்டெரியும் நெருப்பின் அருகேசென்று கையை நீட்டுகிறீர்கள். அப்போது உஷ்ணத்தை உணர முடிகிறது உங்களால். ஆனால் அந்தச் சூடு வியாபித்து உங்கள் கைகளைத் தேடி வருவதில்லை. காரணம் நம்மைச் சூழ்ந்துள்ள காற்று ஒரு சக்தி வாய்ந்த 'பாட் கண்டக்டர்'. அதாவது எதையும் எளிதில் ஏற்றுக் கொண்டு விடாது. உஷ்ணத்தின் பிரயாணத்தை 'ரேடியேஷன்' என்று குறிப்பிடுகிறோம். சூரியனின் உஷ்ணம் 'ரேடியேஷன்' என்ற சக்தியினால் தான் பூமியை வந்தடைகிறது. ரேடியேஷன் என்ற சக்தியினால் பரவும் உஷ்ணமானது ஏதாவது ஒரு பொருளின் மீது விழுந்தால், படிந்தால், தாக்கினால்தான் அதை நம்மால் உணர முடியும். அப்படி அது அந்தப் பொருளின் மீது விழும் போது அந்த உஷ்ணமானது ஒன்று கிரஹிக்கப்படும் அல்லது (தன் மீது தாக்கியதை) பிரதிபலிக்கும். வெண்மையும், பளபளப்பாக்கப்பட்ட உலோகங்களும் தங்கள் மீது விழும் உஷ்ணத்தின் பெரும் பகுதியைப் பிரதிபலிக்கச் செய்து விடுகின்றன. கரடுமுரடானதும் கருப்பு நிறமுடைய பாகங்கள் தங்கள் மீது படியும் உஷ்ணத்தைக் கிரஹித்துக் கொண்டு விடுகின்றன. இதனால்தான் உஷ்ணப் பிரதேசங்களில் வாழுபவர்கள் வெள்ளை உடை அணிகிறார்கள். வீடுகளின் வெளிப்புறம்சுண்ணாம்பு அடிக்கப்படுகிறது.

இதே தத்துவத்துடன்தான் தர்மாஸ் பிளாஸ்க் செய்யப்பட்டுள்ளது. பிளாஸ்கின் குறுக்குவெட்டுப் படம் அதன் உட்புறப் பாகங்களை விளக்குகிறது. பிளாஸ்கின் வெளித் தகரக் குழலுக்குள் (5) இருக்கும் கண்ணாடிக் குழாய் (1, 2) இரட்டைச் சுவர்களினால் ஆக்கப்பட்டது. சுவர்களின் உட்புறம் வெள்ளி போன்ற பளபளப்பான ஒருவகை ரசத்தினால் பூசப்பட்டு அந்தப் பிரதேசத்தின் காற்று முழுவதையும் எடுத்து சூனியப் பிரதேசமாக்கி இருக்கிறார்கள். இப்படிச் சூனியமாக்கி 'சீல்' செய்த முனைதான் பிளாஸ்க்கின் கண்ணாடி கூறாயின் அடியில் உள்ள கூரான முனை (6). பிளாஸ்க்கினுள் இருக்கும் பொருள் தன் உஷ்ணத்தை இழக்காது. வெளியிலுள்ள உஷ்ணம் உள்ளிருக்கும் பொருளைப் பாதிக்காது. காரணம், பளபளப்பான ரசம் பூசப்பட்ட கண்ணாடிப் பாகம் வெளிச் சூட்டை கிரஹித்துக் கொள்ளாமல் பிரதிபலித்து விடும். உள்ளிருக்கும் பொருள் தன் உஷ்ண நிலையை இழக்காது. காரணம், கண்ணாடிச் சுவர்களுக்கிடையே உள்ள சூனியமாக்கப்பட்ட பிரதேசமும் மேலேயும் கீழேயும் உள்ள கார்க்குகளும் (4) பிளாஸ்க்கின் கண்ணாடியும் கூட சக்தி வாய்ந்த 'பாட் கண்டக்டர்ஸ்' ஆகும். இரண்டு கண்ணாடிச் சுவர்களுக்கு மிடையேயுள்ள சூனியப் பிரதேசம் பழுதானாலும்—முனை முறிந்து உள்ளே காற்றுப் புகுமானாலும்—பிளாஸ்க் உஷ்ணத்தை அல்லது குளிர்ச்சியைக் காக்கும் தன் சக்தியை இழந்து விடும்.



## பிளஸ்பாக்



தென் ஆப்பிரிக்காவின் புல்வெளிகளில் காணப்படும் ஒருவகை மானைத்தான் இங்கு பார்க்கிறீர்கள். இதன் பெயர் பிளஸ்பாக். இது மிகவும் பயந்த, கவனமுள்ள பிராணி. காற்றைப் பாய்ந்து செல்லக் கூடியது. விரோதியையோ, வேட்டையாட வருபவர்களையோ கண்டதும் இது விண்ணிலே பாய்ந்து தாவி ஓடும். அரவம் கேட்டுச் சற்றுத் தொலைவில் இருக்கும் இந்த இனத்தின் மான் கூட்டம் உஷாராகி ஓடத் தலைப்படும். நிமிர்ந்து நின்றால் இதன் உயரம் தோள் வரை மூன்றடி. இரண்டங்குலம் தான். மற்ற ஆப்பிரிக்க மான் வகைகளிலிருந்து இதைச் சுலபமாகப் பிரித்து இனம் கண்டு கொள்ளும்படி இதன் முகத்தில் ஒரு வெள்ளைக்கோடு கண்களின் அருகே ஓடுகிறது. இதன் உடலில் கருஞ்சிவப்பு நிறமுள்ள ரோமம் அடர்ந்திருக்கும். இதன் கொம்பு கம்பீரமும் அழகும் வாய்ந்தது. வளையம் வளையமான பல கணுக்களோடு, லயர் என்ற வாத்தியத்தைப் போலச் சொகுசாக வளர்ந்து காணப்படும்.



சீரான ஆகாரமில்லாததால்
நீங்கள்
மெலிந்திருக்கிறீர்களா?

# ஆல்போஸாங்
# சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது**
**சாதாரண உணவுடன் சேர்ந்து**
**சிக்கனமான, விஞ்ஞான முறையில்**
**ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் இருபத்தைந்து

## மனத்தில் ஒரு_மாயம்

ஜெகசிற்பியன்

இளைய உதையான் எழிலரங்கு அமைக்க எழுந்த போதே ஆந்திர இளவரசி உத்தமசீலியும் அன்று எழுந்து விட்டாள்.

இரவெல்லாம் ஏதேதோ நினைவுகள், கனவுகள். விழிப்பு போன்ற உறக்கத்தில் நினைவுகள் படர்வதும், உறக்கம் போன்ற விழிப்பில் கனவுகள் படர்வதுமான ஒரு விசித்திர அநுபவம். அன்றிரவு அவள் உறங்கினாளா, விழித்துக் கிடந்தே நேரத்தைப் போக்கினாளா என்பது அவளுக்கே புரியாத புதிராக இருந்தது. அந்தப் புதிரிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவே, விடிந்தும் விடியாத கன்னிக் காலைப் போதில் மஞ்சம் நீங்கி எழுந்தாள் அவள்.

அவளுக்கு முன்னே அந்த இலவந்திகைப் பள்ளியும் எழுந்து விட்டிருந்தது. பணிப்பெண்களும் பணியாட்களும் தத்தமது காரியங்களைச் சுறுசுறுப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தனர். பள்ளி மாளிகையைச் சார்ந்த மிகப் பெரிய நந்தவனத்தைச் சுற்றிக் கடந்த நான்கு நாட்களாகஇருந்ததைவிட இன்று அதிக எண்ணிக்கையுள்ள காவல் வீரர்கள் ஈட்டியும் கத்தியும் ஏந்தியவர்களாய் வளைய வந்து கொண்டிருந்தனர்.

இந்தக் காட்சிகளைப் பார்த்து உள்ளூற வியப்படைந்தாள் உத்தமசீலி. 'நான் தான் எனக்கே புரியாத ஏதோ ஒரு மனக் குறளியால் உலுப்பப்பட்டு எழுந்து விட்டேன் என்றால், இவர்கள் ஏன் இப்படித் துறுதுறுப்பும் பரபரப்புமாக இயங்கிக் கொண்டிருக்கிறார்கள்? எதை உத்தேசித்து அல்லது எவரை முன்னிட்டு இத்தனை தீவிரம் காட்டுகிறார்கள்?'— அவள் தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்டாள். 'அதெல்லாம் ஒன்றுமில்லை. அவர்கள் எப்போதும் போலவே தங்கள் அலுவல்களில் ஈடுபட்டிருக்கலாம்; என் மனத்தின் சலனத்தை அவர்கள் மீது படரவிட்டுப் பார்ப்பதால் அவ்வாறு தோற்றமளிக்கலாம்.'



உற்சாகமடைந்த அவள், நந்தவனத்தின் நடுவேயிருந்த பூம்பொய்கைக்குப் பறந்தோடினாள். சீதளச் சுகம் செறிந்த அந்தச் சிங்காரப் பொய்கையிலே அளைந்து உளைந்து நீந்தி நீராடி எழுந்து, செய்குன்றத்தின் மேலேறி நின்று காலை இளங் கதிரவனின் பொன்னொளிக் கதகதப்பில் தன் கார்குழலை உலர்த்திக் கொண்டு இறங்கி, நறுமண மண்டலமாய் விசாலித்துக் கிடந்த நந்தவனத்தினுள் புகுந்து நான்முகனின் வண்ணக் கற்பனைக் களஞ்சியம் போல் பூத்துக் குலுங்கிய புத்தம் புது மலர்களைக் கொய்து பூக்குடலையில் நிறைத்




துக்கொண்டு மாளிகைக்கு விரைந்து திரும்பினாள்.

இத்தனை நாட்களாக எளிய ஆடையணிமணிகளே புனைந்து வந்த அவள், அன்று ஆடம்பர அலங்காரங்கள் செய்து கொள்வதில் நாட்டம் கொண்டாள். பூட்டிக் கிடந்த தந்தப் பேழை திறக்கப்பட்டது. அதிலிருந்து விலையுயர்ந்த பட்டாடைகளும் விலைமதிப்பற்ற ஆபரணங்களும் வெளியே வந்தன. நறுமணப் புகையேற்றிய கரிகுழலை வாரிப் பின்னிக் கலாப வடிவிலே கொண்டையிட்டு முடிந்து, வண்ண மலர் சூடி, கண்ணுக்கு மையிட்டு, மார்பிலே சந்தனம் பூசி, கைத் தலங்களிலும் கால் பாதங்களிலும் செம்பஞ்சுக் குழம்பால் சித்திரம் தீட்டி, இடையிலே சிவப்புப் பட்டுச் சிற்றாடையும், மார்பகத்திலே மரகத வண்ணப் பட்டுக் கச்சையும், அதன் மேலே மெல்லிய நீலநிற மல்மல் துகிலும் புனைந்து கொண்டு, முழு உருவையும் பிரதிபலித்துக் காட்டக் கூடிய நீண்டதொரு பளிங்குச் சட்டத்தின் எதிரே வந்து அமர்ந்த அவள், அற்புத வேலைப்பாடுகளுடன் விளங்கிய அணிகலன்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துத் தன் பூமேனியில் பூட்டத் தொடங்கினாள்.

பூரப்பாளை, புல்லகம், பொன்னரி மாலை, தென்பல்லி, வடபல்லி, மகரப் பகுவாய், முஞ்சகம் முதலான அணிகளைச் சீவி முடித்த சிரசிலே அணிந்து, வீரச் சங்கிலி, நேர்ச் சங்கிலி, நுண்ஞாண் சவடி, சரப்பள்ளி, முத்தாரம், கண்ட நாண், புல்லிகைக் கண்ட நாண், பாசமாலை, மாணிக்கச் சரம், வாகுவலயம், வயிரப் பதக்கம், ஏகாவல்லி, திரிசரம், இரன்மணி வடம் முதலான மாலையணிகளைக் கழுத்தில் புனைந்து, — கொக்கு வாய் எனப்படும் நவரத்தினப் பிற்றாலியைப் பிடரிக்குப் பின்னால் தொங்க விட்டு, — நீலக் குதம்பை, மகரக்குழை, தாளுருவி, வல்லிகை, மரகதத் தோடு, வடுக வாளி, திருக்காவம், பொற்கொப்பு முதலான ஓடாணி (சுரை)யணிகளைச் செவிகளில் கோத்து, — மேகலை காஞ்சி, விரிசிகை, கலாபம், பருமம், ஸ்ரீசந்தம் முதலான சுற்றணிகளை இடையிலே கட்டி, — சூடகம், பொன் வளை, முத்து வளை, மாணிக்கவளை, சங்க வளை, பவழக் கடகம், திருக்கைக்காறை, திருப்பட்டிகை முதலான வளையணிகளைக் கைகளில் பூட்டி, — இரத்தின அடுக்காழி, அரதன மோதிரம், வாளைப் பாகுவாய் மோதிரம் முதலானவற்றைக் கைவிரல்களிலே இட்டு, — பொற்பாதசாலம், முத்துச் சிலம்பு, முறுக்குக் காப்பு, தண்டைக் கிண்கிணி, குறங்குசெறி முதலான காப்பணிகளைக் கால்களில் பூட்டி, — கான் மோதிரம், மகரவாய் மோதிரம், பொற்காலாழி, பீலி முதலான மோதிர அணிகளைக் கால் விரல்களில் அணிந்து, இவற்றுக்கெல்லாம் மேலாகப் புன்னகை யென்னும் தெய்வ ஆபரணமொன்றை முகத்திலே பூசிக் கொண்டு நிமிர்ந்த அவள், பளிங்குச் சட்டத்தில் தன்னுடைய பார்வையை ஓட்டினாள்.

யார் இந்த மோகினி? ஆந்திர இளவரசி உத்தமசீலியா இவள்? அவளுக்கே அதில் சந்தேகம் வந்து விட்டது!

அவன் கலகலவெனச் சிரித்தான். சிரித்துச் சிரித்துத் தன் சிங்காரிப்பை ரசித்த அவன் சட்டென்று சிரிப்பை நிறுத்திவிட்டுப் பளிங்குச் சட்டத்தை உற்று நோக்கினான். அவனுடைய அழகிய முகம் வெளிறியது. அதிருப்தியுடன் தலையை ஆட்டிக் கொண்டு எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்தித்தான். மறுகணம், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய், இந்நேரம்வரை எண்ணித் தேர்ந்து எடுத்துப் பூட்டிய எல்லா அணிமணிகளையும் மளமளவெனக் கழற்றிப் பேழைக்குள் போட்டு விட்டு வெற்றுடம்பாய் எழுந்து நின்று, பட்டாடைகளைக் களைந்து எளிய பஞ்சாடைகளை உடுத்துக் கொண்டு, மீண்டும் அந்தப் பளிங்குச் சட்டத்தில் தன் பிம்பத்தைப் பார்வையிட்டான்.

யார் இந்தத் தேவதை? சுரமண்டலத்திலிருந்து இறங்கி நரமண்டலம் காண வந்த தெய்வநங்கையா இவன்? ஆகா, அவன்தான் இப்போது என்ன அழகாகத் தோற்றமளிக்கிறான்!

சாந்தம் தவழும் புன்முறுவல் பூத்த உத்தமசீலி சற்றுத் தள்ளிப் போய் அமர்ந்துகொண்டு, அந்தப் பள்ளி மாளிகையின் சூழ்நிலையைக் கவனித்தான். அது முன்னைவிட அதிகப் பரபரப்புடன் காணப்பட்டது. முன் போல், அதன் காரணத்தைத் தன் மனப் போக்கின் மீது சாய்த்துக் கொண்டு அமைதியுற இப்போது அவனால் இயலவில்லை. எனவே, மீண்டும் அது பற்றிய சிந்தனையில் மூழ்கினான்:

'இங்குள்ள ஏவலாளர்களும் காவலாளர்களும் எனக்காகவேதான் இத்தனை கரிசனைக் கண்காணிப்புடன் காரியம் ஆற்றுகிறார்களா? அல்லது வேறு எவரை முன்னிட்டேனும் இப்படிப் பம்பரமாய்ச் சுழன்று கொண்டிருக்கிறார்களா? கடந்த நான்கு நாட்களாக இல்லாத திமர்த் தேவை இன்று என்ன அப்படி எனக்கு அவசியமாகி விட்டது? இல்லை; இந்தத் தீவிர நடவடிக்கைகளெல்லாம் எனக்காக என்று தோன்றவில்லை. வேறு யாருக்காகவோ தான் நடைபெறுகின்றன. அப்படியானால், இங்கு வரப் போவது யார்? ஓ....அந்தப் பெருவளநல்லூர் ஓவியன் இன்று வரப் போவதையொட்டி அவனுக்காகத்தான் இத்தனை ஏற்பாடுகளும் செய்யப் படுகின்றனவா? இது என்ன வேடிக்கை! அவனைப் பற்றி இவர்களுக்கென்ன தெரியும்? அவன் இங்கு வரப் போகும் செய்தியையே இவர்கள் அறிந்திருக்க முடியாதே! அவனுடைய வருகையின் முக்கியத்துவத்தையும் இவர்களால் தெரிந்து கொண்டிருக்க இயலாதே! அப்படித் தெரிந்திருந்தாலும் அந்த எளிய கலைஞனை வரவேற்க இத்தனை பரபரப்பா? வில்வேலியே அவன் வருகையை உத்தேசித்து இங்குள்ள ஏவலர்க்கும் காவலர்க்கும் விசேஷ உத்தரவு ஏதேனும் பிறப்பித்திருப்பாரோ? அப்படியொரு கட்டளைக்கு அவசியமே இல்லையே! ஏனென்றால், அவன் இங்கு வந்து போகும் விஷயம் இரகசியமாகவே இருக்க வேண்டுமென்பது எங்கள்



இட்டமாயிற்றே? ஒருகால், சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க அடிகளை வரவேற்பதற்காக இந்தச் சுறுசுறுப்பு காட்டப்படுகிறதா? அவர் இங்கு வந்து சேர இன்னும் சில நாட்களாகுமே! அப்படியே இன்று வந்தாலும், அந்தத் தூய துறவியை வரவேற்பதில் எவ்விதமான அநாவசிய ஆடம்பரங்களும் இருக்கக் கூடாது என்ற விதிமுறை தளபதி வில்வேலிக்குத் தெரிந்திருக்குமே!'

இவ்வாறு சிந்தனையை ஓட்டிக் கொண்டிருந்த உத்தமசீலி திடுக்குற்றவள் போல் நிமிர்ந்தாள். 'உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்த வல்லபரே இன்று இங்கு வரப்போகிறாரோ? பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் உருவத்தை, அந்த ஓவியக் கலைஞன் வரையும்போது அதை அவர் நேரிலிருந்து கவனிக்க வேண்டுமென்பதற்காகவும், பிறகு அவ்வோவியத்தைக் கொண்டு எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் பற்றி அவரிடம் ஆலோசிப்பதற்காகவும் வில்வேலியே அவரை வரும்படி இரகசியமாக அழைத்திருப்பாரோ? அதனால்தான், இந்த இலவந்திகைப் பள்ளி இத்தனை தீவிரமடைந்து காணப்படுகிறதோ?' — குழம்பிக் கிடந்த அவள் மனம் மேலும் குழப்பமடைந்தது. தான் ஏதோ ஒரு பெருந் தவறு செய்து விட்டாற்போல் திகிலுடன் அங்குமிங்குமாகப் பார்த்து விழித்தாள்.

'அந்த ஓவியக் கலைஞன் தன் உயிருக்கு அஞ்சிச் சேதியக் கலைஞரின் இல்லத்திலே புகலடைந்திருக்கிறான். அவரும் அவனுக்கு அடைக்கல தானம் அளித்து வைத்திருக்கிறார். அடைக்கலம் கோரி வந்திருப்பவரைப் பற்றிய விவரங்களை மட்டுமின்றி அடைக்கலம் அளித்த தகவலையும் வெளியிடக் கூடாதென்பது சமண சமயம் வகுத்திருக்கும் விதிமுறை. அந்த விதியை மீறிச் சேதியக் கலைஞர் அவ்வாலிபனைப் பற்றி என்னிடம் சொன்னதே தவறு. நான் அவரைத் துருவித் துருவிக் கேட்டதாலும், என்மீது கொண்ட ஆழ்ந்த நம்பிக்கையாலுமே அவர் அவ்விவரத்



அருமையான பொருள்களுக்கு உரிமையான இடமெதுவோ அங்கே...

# ஆதரவுக்கு ஆதரவான அன்னைக்கு ஆதரவு: டால்டா

தென்புக்குத் தென்பு... அன்புக்கு அன்பு... தென்பை வளர்க்கும் அன்பு...பொன்போன்ற பொருள்களையே தரும் தாயன்பு! அன்பிலே விளைந்த இன்பம்... டால்டா வனஸ்பதியிலான தின்பண்டங்கள்! ஆம், தரத்திலுயர்ந்த தாவர எண்ணெய்களாலான டால்டா... சுகாதார முறைப்படி ஸீலிட்ட டப்பாக்களிலே புதுமையோடு வரும் தூய்மையான டால்டா...வளரும் கண்மணிகளுக்கான வைட்டமின்கள் அடங்கிய வனஸ்பதி...எந்த நாளும் நம்மவர்க்கே சொந்தமன்றோ...




## டால்டா வனஸ்பதி: அறுசுவைச் சமையலுக்கு உறுதுணை

DL. 11-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

தைத் தெரிவித்திருப்பார்: ஆனால், நான் அதைக் காப்பாற்றி வைக்காமல் மூன்றாம் மனிதரான வில்வேலியிடம் வெளியிட்டு விட்டேனே! அவன் அடைக்கலம் புகுந்த ஒரு கலைஞன் என்ற இரகசியத்தை வெளியிடவில்லை யென்றாலும் அவனை அங்கிருந்து வெளியே வரும்படியான சங்கடத்துக்கு உள்ளாக்கியிருப்பதன் மூலம் நான் அந்த அடைக்கலதானத்தின் விதியை மீறியவளாகிறேனே! தம்மிடமுள்ள ஓவியக் கலைஞனைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வைக்கும்படி தளபதி வில்வேலி எழுதியிருக்கும் ஓலையைப் படித்துப் பரவாதி மல்லர் என்ன நினைப்பார்? அந்தத் தகவலை நான் சொல்லித்தான் அவ்வோலை எழுதப் பெற்றிருக்கிறது என்பதை அவர் உடனே புரிந்துகொள்வார். சமண சமய ஒழுக்க விதிகளின்படி நடக்கும் ஓர் உத்தமப் பெண் என்று அவர் என்னைப் பற்றிக் கொண்டிருந்த நல்ல எண்ணத்தையும் அந்தக் கணமே மாற்றிக் கொண்டிருப்பார். இதெல்லாம் ஒருபுற மிருந்தாலும், அந்த ஓவியக் கலைஞனைப் பற்றிய உண்மைகளை என்னிடமே சொல்ல மறுத்த அவர் வில்வேலியின் வேண்டுகோளுக்கு இணங்கி அவனைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வைக்கச் சம்மதிப்பாரா? அப்படி அனுப்ப மறுத்தால் அவரை வில்வேலி பகைத்துக் கொள்வது மின்றித் தமது அதிகார பலத்தை அவரிடமே காட்ட ஆரம்பித்து விடுவாரே? என்னை அறியாமலே அந்த மாபெரும் கலைஞருக்கு எவ்வளவு பெரிய சங்கடங்களை ஏற்படுத்தி விட்டேன்!'

நெஞ்சம் துடிதுடித்த உத்தமசீலியின் எண்ண அலைகள் மேலும் ஆரவாரித்தன: 'என்னை நம்பிப் பரவாதி மல்லர் அந்த ஓவியனை அனுப்பி வைத்தாலும், அவன் எங்கள் விருப்பப்படி, பல்லவ மன்னனின் உருவத்தை வரைந்து கொடுக்க ஒப்புக் கொள்வானா? அப்படியொரு காரியத்தைச் செய்ய அவன் மறுத்து விட்டால்?— அதிலும், விக்கிரமாதித்த வல்லபர் இங்கு வந்து, அவர் முன்னே அவ்வாறு கூறிவிட்டால் – நிலைமை இன்னும் மோசமாகி விடுமே! இதையெல்லாம் முன்கூட்டியே சிந்திக்காமல், என் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கும் ஏதோ ஒரு விபரீத ஆசையின் எழுச்சியிலே—அந்த ஓவியனைச் சந்திக்க வேண்டுமென்ற ஒரு விசித்திர ஏக்கத்திலே – அவனை இங்கு வரச் செய்வதற்காக, வில்வேலியிடம் அப்படியொரு யோசனையைத் தெரிவித்தது எவ்வளவு பெரிய தவறாகி விட்டது! மனம் கவர்ந்த ஜீவ மலரைப் பறிக்கும் ஆவலில் அதன் கொடியே அறுந்து விழும்படி செய்துவிட்ட விதமாக அல்லவா நான் நடந்துகொண்டு விட்டேன்!......அந்த ஓவியன் இங்கு வந்து, திரும்பிச் செல்ல முடியாத பேராபத்தில் சிக்கிக் கொள்வதை விட, வராம விருப்பதே நல்லதென்று இப்போது என் உள்ளம் ஏங்கித் தவிக்கிறதே!....இந்த இருதலைக்கொள்ளி நிலைமையை நான் எப்படிச் சமாளிப்பேன்?'

நெட்டுயிர்த்துச் சோர்ந்த அவள் நெஞ்சின் வேதனையைத் தாளமாட்டாமல் கண்களை இறுக மூடிக்கொண்டாள். எவ்வளவு நேரம் அப்படி இருந்தாளோ, அது அவளுக்கே தெரியாது.

பனித்த இமையோரங்களில் ஏதோ ஒரு குறுகுறுப்பு உணர்ச்சி தோன்றவே மெல்லக் கண் விழித்த உத்தமசீலி திடுக்குற்று எழுந்தாள்.

இது என்ன விந்தை! இந்தப் பளிங்குச் சட்டத்தில் படிந்திருக்கும் அவளது எழில் பிம்பத்துக்கு அருகே இன்னோர் அழகிய கம்பீர உருவமும் தெரிகிறதே! அது .... அது .... அந்த ஓவியக் கலைஞனின் உருவம் அல்லவா?—

அவள் பரபரப்புடன் கண்களைத் துடைத்துக்கொண்டு பின்னால் திரும்பிப் பார்த்தாள்.

அங்கே, அவள் இருந்த அறையை அடுத்திருந்த சித்திரக் கூடத்தை நோக்கி அந்த ஓவியக் கலைஞன் – பரமேசுவர வர்மன் – முன்னே வர, அவனுக்குப் பின்னால் சளுக்கியத் தளபதி வில்வேலியும் வந்துகொண்டிருந்தார்.

## அத்தியாயம் இருபத்தாறு

# அத்தியந்த காமன்

இளவரசி உத்தமசீலியை நோக்கி வெற்றிப் புன்னகை பூத்தவாறு ஓர் இருக்கையில் சென்று செருக்குடன் அமர்ந்தார் தளபதி வில்வேலி.

அளவு மீறிய மகிழ்ச்சியும், அளவு கடந்த பயமும்" ஒருசேரத் தோன்றிப் புரள, வேர்த்து விறுவிறுத்து வாசல்நிலையோரம் வந்து நின்ற உத்தமசீலி மிரட்சியுடன் அங்குமிங்குமாகப் பார்த்தாள்.

ஆனால், அந்த வாலிபனோ அவர்களில் யாரையுமே பார்க்க வில்லை. பல காலம் இருந்து பழகிய ஓர் இடத்துக்கு வந்திருப்பவன் போன்று பார்வையில் சர்வ அலட்சியமாகக் கைகளைப்

கோடம்பாக்கத்தில் பிரபல சினிமா நட்சத்திரமான புல்புல்தாரா குடியிருக்கிறார். அவளுக்கு அவசரமாகப் படப்பிடிப்பு வேலையாகப் பம்பாய் போக வேண்டியிருந்தது. அவள் கணவன் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் அவளை விமானம் ஏற்றி விட்டு, வீட்டுக்குத் திரும்பினார். வழியில் கோடம்பாக்கம் ஸ்டேஷன் அருகில் ரயில்வே கேட் சாத்தியிருந்தது. ரொம்ப நேரம் காத்திருக்க வேண்டியதாகி விட்டது. ஒருமாதிரி ரயில்வே கேட் திறந்து விட்டையடைந்தபோது, டெலிபோன் மணி 'கணகண' என்று அடித்தது. அவர் யாரோ கூப்பிடுகிறார்கள் என்று விழுந்தடித்துக்கொண்டு ஓடிப்போய் டெலிபோனை எடுத்தார்.



"ஹலோ, நான்தான் புல்புல்தாரா பேசுகிறேன். நான் சௌக்கியமாகப் பம்பாய் வந்து சேர்ந்து விட்டேன்!" என்று குரல் வந்தது.

பின்னால் கோத்துக் கட்டிக்கொண்டு, விசாலமான அவ்வறையின் சுவரில் பாங்குறத் தீட்டப் பெற்றிருந்த பழைய ஞாபகச் சரித சித்திரத்தைப் பார்த்து ரசிப்பதில் கவனமாயிருந்தான்.

"நிற்கிறீர்களே இளவரசி, இப்படி வந்து அமருங்கள்!" என்று பரிவுடன் ஓர் ஆசனத்தைக் காட்டினார் வில்வேலி.

அவர் சொன்னதைச் செவிமடுக்காதவள்போல் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தாள் வேங்கி இளவரசி.

வில்வேலியின் முகம் வறண்டது. சற்று நேரம் மௌனமாக இருந்த அவர் மெல்லத் தொண்டையைக் கனைத்துக்கொண்டு "இளவரசி! இந்த ஓவியனைத்தானே நீங்கள் வரவழைக்கும்படி யோசனை சொன்னீர்கள்?" என்று கண்களை இடுக்கிக்கொண்டு கேட்டார்.

ஒல்கி ஒசிந்து ஓரடி முன் வந்த உத்தமசீலி தன் காவியக் கண்களை மலர்த்தி அவ்வாலிபனை இதமாக ஏறிட்டு நோக்கினாள். அவனது திண்மையான கழுத்தில் தவழ்ந்து கொண்டிருந்த அந்த உருத்திராக்கம் போன்ற சவுக்கைக் காய் மாலையை ஒரு கணம் உற்று நோக்கிய அவள் ஒண்முறுவல் பூத்தவாறு சட்டென்று குனிந்து, "ஆம், ஐயா!" என்றாள் மென்மையான பூங்குரலில்.

தொண்டையை மீண்டும் செருமிவிட்டுக்கொண்டு அலட்சிய மிடுக்குடன் நிமிர்ந்த வில்வேலி, "ஏ, வாலிபனே! உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

அவன் அவரது கேள்விக்குப் பதில் ஏதும் கூறாமல் அந்தச் சுவர் ஓவியங்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

வில்வேலியின் முகம் கண்டிச் சுருங்கியது. சற்றே கடுகடுத்த குரலில், "ஏ, சித்திரக்காரா! நீ சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் மாணவன்தானே?" என்று வினவினார்.

இப்போதும் அந்த வாலிபன் தன் போக்கிலேயே பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

உத்தமசீலியின் மனம் வேகமாக அடித்துக் கொண்டது.

"மரியாதை தெரியாத பாமரனே! உன்னை நாங்கள் எதற்காக இங்கு அழைத்திருக்கிறோம் என்பதையாவது நீ அறிவாயா?" என்று உரத்த குரலில் அதட்டிக் கேட்டார் தளபதி வில்வேலி.

அமைதியாகத் திரும்பிய வாலிபன் அவரை ஏறிட்டு நோக்கி, "முதலில் நீர் மரியாதையைத் தெரிந்துகொண்டு நான் அமருவதற்கு ஆசனமொன்றைக் கொண்டு வந்து போடச் செய்யும்!" என்று கூறினான்.

வில்வேலியின் கண்கள் சிவந்தன. அவனை அவர் விழித்துப் பார்த்தார். பரபரப்படைந்த உத்தமசீலி, கையொலி எழுப்பி ஒரு பணியாளை அழைத்தாள். அந்த ஓவியன் உட்கார ஆசனமொன்றை எடுத்து வந்து போடுமாறு தன் கண்ணாலேயே அவனுக்குக் கட்டளை பிறப்பித்தாள். மறு கணமே அங்கு ஓர் அழகிய ஆசனம் வந்து சேர்ந்தது.

"நன்றி" என்று சொன்னவாறு ஆசனத்தில் போய் அமர்ந்த வாலிபன் சட்டென்று நிமிர்ந்து, "என் பெயர் ஸ்ரீநிதி அத்தியந்த காமன்! ஒரு காலத்தில் குருவாக இருந்த நான் இப்போது சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் மாணவனாக இருக்கிறேன்! இங்கு என்னை அழைத்துள்ள காரணத்தை அறியேன்!" என்றான் கம்பீரக் குரலில்.

வில்வேலி அவனை ஒரு கணம் கூர்ந்து நோக்கி விட்டு உத்தமசீலியின் பக்கம் திரும்பிப் புன்னகை பூத்தார்;

ஆனால், அவனோ உள்ளம் துடிதுடிக்க நின்று அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்தான்.

"ஸ்ரீநிதி அத்தியந்த காமன்!...அப்படியென்றால் என்ன பொருள்?" என்று அலட்சியக் குறும்புடன் வினவினார் தளபதி வில்வேலி.

"பரம ஈசுவரனைத் தலைமேல் தாங்கி அவனையே எந்நேரமும் தியானித்துக் கொண்டிருக்கும் ஓர் எளிய பக்தன் என்று அதற்குப்பொருள்!"

இதைக் கேட்டுச் சளுக்கியத் தளபதி குதிரை கனைப்பது போல் குபீரெனச் சிரித்தார். "பரம ஈசுவரன் — பரமேசுவரன்! அவனைத்தான் நீ எப்போதும் தியானித்துக் கொண்டிருப்பதோ?"

"ஆமாம்."

"அப்படிப்பட்ட ஓர் ஆளைத்தான் நாங்கள் தேடிக் கொண்டிருந்தோம்; மெத்த மகிழ்ச்சி!" என்று விஷமப் புன்னகை புரிந்த வில்வேலி, "அந்தப் பரமேசுவரனை நீ எப்போதாவது பார்த்ததுண்டா?" என்றார் கசந்த குரலில்.

"அகக் கண்ணால் அவனைப் பார்த்திருக்கிறேன்; புறக் கண்ணால் தரிசிக்கப் புண்ணியம் பல செய்ய வேண்டும்."

'ஹோ'வென்று நகைத்த வில்வேலி தம் புஜத்தை மூர்க்கமாகக் குலுக்கிக் கொண்டு, "நான் கேட்பது சிவப் பரமேசுவரனை அல்ல; எங்கள் சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தரிடம் பல்லவப் பேரரசைப் பறிகொடுத்துவிட்டுத் தலைமறைவாகத் திரிந்து கொண்டிருக்கிறானே, அந்தப் பரமேசுவரனை!" என்று குத்தலாகக் கேட்டார்.

ஓவியக் கலைஞனாக அங்கு உட்கார்ந்திருந்த பரமேசுவரவர்மன் தன்னையே ஒரு கணம் ஏற இறங்கப் பார்த்து விட்டு, இளஞ் சிரிப்போடு நிமிர்ந்து, "பார்த்திருக்கிறேன்!" என்றான் அமைதியாக.

உற்சாகமடைந்த வில்வேலி, உத்தம சீலியைத் திரும்பிப் பார்த்தார். அவளோ பனிப் பதுமையெனச் சில்லிட்டு நடுங்கிக்கொண்டு நின்றாள்.

"அவனைப் பார்த்திருக்கிறாயா? அவனுடன் பேசியும் இருக்கிறாயா?" என்று கழுத்தை நீட்டி வெகு அக்கறையாக விசாரித்தார் வில்வேலி.

'ஆம்' என்று தலையசைத்தான் அத்தியந்த காமன்.

சற்று நேரம் ஏதோ யோசித்த வில்வேலி, தம் இருக்கையை விட்டு எழுந்து மெல்ல உலாவிக்கொண்டே, "அன்புள்ள கலைஞனே! எங்களுக்கு நீ ஓர் உதவி செய்ய வேண்டும்; செய்வாயா?" என்று தணிந்த குரலில் குழைவாகக் கேட்டார்.

"எத்தகைய உதவி எனக் கூறினால் அது இயலுமா, இயலாதா எனச் சொல்வேன்."

தலையசைத்தவாறு மீண்டும் சிறு பொழுது சிந்தனையில் திளைத்த தளபதி வில்வேலி, மமதை நிறைந்த மிடுக்குடன் கூறினார்: "இங்கே பார், கலைஞனே! நீ அந்த உதவியைச் செய்தால் உனக்கு மண் அளிப்போம், பொன் அளிப்போம், மாபெரும் பதவி அளிப்போம் என்றெல்லாம் நான் வாக்களிக்க மாட்டேன். ஏனென்றால், கௌரவத்தைத் தேடும் கலைஞனான நீ அத்தகைய அன்பளிப்புக்களையெல்லாம் ஏற்க மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். எனவே, இப்போது என் கையிலிருக்கும் உன் உயிரையே உனக்குப் பரிசாகத் தரத் தீர்மானித்திருக்கிறேன், அந்த உதவியைச் செய்தால்!"

அவன் இதைக் கேட்டு அழகாகச் சிரித்தான். "ரசனை மிக்க பயமுறுத்தல்!" என்று கூறி மீண்டும் நகைத்த

ஒரு வீடு விற்பனைக்கு வந்தது. அந்த வீட்டைப் பார்க்க ஒருவர் வந்தார். அவரிடம் வீட்டுச் சொந்தக்காரர் "இந்த வீட்டை வாங்கினால் சௌகரியங்களும் உண்டு, அசௌகரியங்களும் உண்டு!" என்றார்.

பார்க்க வந்தவர், "முதலில் அசௌகரியங்களையெல்லாம் சொல்லுங்கள்" என்றார்.



"வீட்டுக்கு வலது பக்கம் ஒரு ரொட்டிக் கிடங்கு இருக்கிறது. இடது பக்கம் ஹோட்டலிருக்கிறது. எதிர் வரிசையில் மீன் கடையிருக்கிறது! பின் பக்கம் பெரிய சாக்கடை ஒன்று ஓடுகிறது!" என்று சொன்னார் வீட்டுக்காரர்.

பார்க்க வந்தவர் "சௌகரியமும் உண்டு என்றீர்களே - அது என்ன?" என்று கேட்டார்.

"காற்று எந்தப் பக்கத்திலிருந்து வருகிறது என்பதைச் சுலபமாகச் சொல்லி விடலாமல்லவா?" என்றார் வீட்டுச் சொந்தக்காரர் பெருமையுடன்.

ஒரு சமயம் ஒரு கல்வி அதிகாரி, மாஸ்கோ பள்ளிக்கூடம் ஒன்றுக்குச் சென்றிருந்தார். அப்போது வகுப்புக்கள் நடந்து கொண்டிருந்தன. ஒரு வகுப்புக்குள் நுழைந்து, அந்த வகுப்பாசிரியரைப் பார்த்து, "இந்த வகுப்பில் புத்திசாலி மாணவன் யாராவது இருக்கிறானா?" என்று கேட்டாராம்.



"ஓ! எங்கள் இவான் இருக்கிறானே! அவன் மேல் வகுப்பிலிருக்க வேண்டியவன். ஒரு வருஷம் முந்தி விருப்பவன்!" என்று பெருமிதத்தோடு சொன்னார் வகுப்பாசிரியர்.

உடனே அந்த அதிகாரி, அந்த மாணவனைக் கூப்பிட்டு, "நமது சோவியத் நாட்டின் மூன்று பெரிய தேசத் துரோகிகள் யார் என்று சொல், பார்ப்போம்!" என்றார்.

மாணவன் முதலில் "ஸ்டாலின்" என்று கூறினான்.

"சரி."

"மலான்கோவ்!" என்றான் மாணவன் இவான் அடுத்தபடியாக.

"அதுவும் சரி" என்றார் கல்வியதிகாரி.

மூன்றாவது பெயரைச் சொன்னதும் கல்வி அதிகாரிக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் மூன்றாவதாக, "குருஷேவ்" என்றான்!

கல்வி அதிகாரி அயர்ந்து விட்டார். "உன் மாணவன் ஒரு வருஷம் முந்தி விருப்பவன்தான்!" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து நகர்ந்தார்.

அவன் புருவக் கொடிகளை மேலுயர்த்திக்கொண்டு, "என்னால் எதிர்பார்க்கப்படும் அந்த உதவி என்னவோ?" என்றான் அலட்சியமாக.

ஒரு கணம் தயங்கிய வில்வேலி விருட்டென்று அவன் எதிரே வந்து நின்றார். "நீ ஒரு சிறந்த ஓவியன் என்று நான் கேள்விப்பட்டதாலேயே உன்னிடம் இந்த உதவியைக் கேட்கிறேன்: அழிந்து பட்ட பல்லவ சாம்ராஜ்யத்தின் பார்த்திபனாக இருந்த பரமேசுவரவர்மனுடைய உண்மை உருவத்தை ஓவியமாகத் தீட்டித் தர வேண்டும்; என்ன சொல்கிறாய்?"

அவன் எவ்விதச் சலனமுமின்றி, ஆழ்ந்து சிந்திப்பவன்போல் மௌனமாயிருந்தான்.

"நேரம் எனக்குப் பொன்னானது. நான் கேட்டதற்கு விரைவில் மறுமொழி வேண்டும்." — அடித்தொண்டையில் கரகரத்தார் வில்வேலி.

அமைதியாகத் தலை நிமிர்ந்த அக்நியந்த காமன், "ஆமாம்; உம்முடைய எதிரியான அவனது உருவச் சித்திரம் உமக்கு ஏன்?" என்று வினவினான்.

"ஓ..... அந்தக் காரணமும் உனக்குத் தெரிய வேண்டுமா? ... பல் வளம் கொழிக்கும் இந்தப் பல்லவ நாட்டை எங்களுக்குத் தாரை வார்த்துக்கொடுத்து விட்ட பெருமகன் அவன்! அதனால் அவனுடைய திருவுருவச் சித்திரத்தைத்தேரில் ஏற்றித் தெருத் தெருவாக இழுத்துக் கொண்டு போய் விழாக் கொண்டாட நாங்கள் விரும்புகிறோம்!"

வில்வேலியின் இந்த ஏளனப் பேச்சைக் கேட்டு உடல் அதிர்ந்தான் அக்நியந்த காமன். அவனது கலை சொட்டும் முகம் ஜிவ்வெனச் சிவந்துபாறைபோல் இறுகியது. கண்களில் செவ்வரி படர அனற் செறிவுடன் பெருமூச்சு விட்ட அவன், சட்டென்று நிமிர்ந்து ஆத்திர இளவரசியை நேரிட்டு நோக்கினான்.

புயலில் சிக்கிய பூமாலையென வெலவெலத்து நின்றிருந்த உத்தமசீலி, 'மறுக்காதே, மறுக்காதே' என்று கெஞ்சுவதுபோல் அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

அவன் முகத்தில் பழைய சாந்தக் களை வந்து சேர்ந்தது. தன் கழுத்திலே தவழ்ந்த சவுக்கைக்காய் மாலையை மெல்ல வருடிக்கொண்டே புன்முறுவலுடன் எழுந்து, "அப்படியே ஆகட்டும்!" என்றான்.

எல்லை கடந்த மகிழ்ச்சியால் ஒரு துள்ளுத் துள்ளி நிமிர்ந்தார் வில்வேலி. வேங்கி இளவரசியோ ஆனந்த விம்மிவிட்டு வாசல் நிலையில் சாய்ந்தாள்.

அவசரப் பரபரப்புடன் பணியாட்களை அழைத்த வில்வேலி, "இதோ, இந்த ஓவியக் கலைஞனை ஒற்றைத் தூண் குடை மண்டபத்துக்கு அழைத்துப்போய், அங்கிருந்தவாறு ஓவியம் தீட்டுவதற்கான எல்லா வசதிகளையும் செய்து கொடுங்கள்!" என்று கட்டளையிட்டார்.

பணியாட்கள் பின் தொடர்ந்து வர, நந்தவனச் சூழலில் அமைந்த குடை மண்டபத்தை நோக்கி நடந்தான் அக்நியந்தகாமன் என்ற பரமேசுவரவர்மன்;

"இளவரசி! உங்களுடைய அருமையான யோசனை பலித்து விட்டது. எங்களைப் பிடித்த பெரியதொரு தொல்லையும் நீங்க வழி பிறந்து விட்டது" என்று சந்தோஷக் கேவலிட்டுச் சொன்ன தளபதி வில்வேலி, "இது மட்டுமல்ல, அம்மணி! நான் விரித்த வலையில் இன்னும் ஒரு பெரிய புலியும் வந்து சிக்கிக் கொண்டிருக்கிறது. அவ் விஷயமாக அலைந்து கொண்டிருந்ததால் தான் கடந்த இரண்டு நாட்களாக உங்களை வந்து காண இயலவில்லை. இப்போது ஒரு முக்கிய காரியமாக நமது அதிகாரிகளுடன் மந்திராலோசனை செய்யப் போக வேண்டும். நீங்கள் மிக எச்சரிக்கையுடன் அந்த ஓவியனைக் கண்காணித்துக் கொள்ளுங்கள். இன்று மாலைக்குள் இங்கு திரும்பி வந்து மற்றக் காரியங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்" என்றவாறு அவளிடம் விடை பெற்றுச் சென்றார்.

ஒற்றைத் தூண் குடை மண்டபத்துக்கு எதிரே, நீர் ஊற்றால் நிரம்பப் பெற்ற ஓர் அழகிய சிறு தடாகம் இருந்தது. மலர்ச் செடி கொடிகளின் இனிய சூழலில் அமைந்த அந்தத் தடாகக் கரையிலே தன்னந் தனியாக அமர்ந்திருந்தான் பரமேசுவர வர்மன்.

அவனருகில் ஓவியம் தீட்டுவதற்கான வெண்ணிறச் சீலையொன்று சட்டத்தில் சாத்தி வைக்கப் பெற்றிருந்தது. மற்றும், வண்ணக் கலவைக் கிண்ணங்களும், தூரிகைகளும், கடற் பஞ்சு—மாக் கிளிஞ்சல் முதலானவையும் இருந்தன.

அவன் அங்கு தனியாகத்தான் இருந்தான். ஆனால், அவனைச் சுற்றித் தொலைதூரத்துக்கு அப்பாலிருந்த மரங்களின் மேலிருந்து பல நூறு கண்கள் அவனையே வட்டமிட்டு மொய்த்துக் கொண்டிருந்தன.

இடக் கை ஊன்றலில் ஒருக்களித்துச் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவன், நெடு நேரங் கழித்து மெல்ல அசைவுற்று நிமிர்ந்தான். களைப்பும் சோர்வுமாக வெளுத்துச் சாம்பி யிருந்த அவனைப் பார்க்கவே மிகவும் பரிதாபமாக இருந்தது. தன் எதிரேயிருந்த வெறும் ஓவியக் கிழியைக் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தவன் ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவனாய் எழுந்து, தடாகத்தின் கரைச் சுவர் விளிம்பிலே வலக் காலைத் தூக்கி வைத்துக் குனிந்தவாறு, பளிங்குப் பாளமாகத் தெளிந்திருந்த நீர்ப் பரப்பில் எதையோ தேடுவதுபோல் உற்றுப் பார்த்தான். ஆடாது அசையாது அப்படியே பார்த்துக் கொண்டிருந்தான் அத்தியந்தகாமன்.

நிறமற்ற நிறமாக விசாலித்திருந்த அந்த நீல நீர்ப் பரப்பில், சகல புருஷ இலட்சணங்களும் பொருந்திய சுந்தர முகம் ஒன்று தோன்றி மிதவை விட்டது. ஆமாம், அது பரமேசுவர வர்மனின் முக விலாச பிம்பம்தான்!

நீரில் கிடந்து மிதக்கும் தன் நிழற் பிம்பத்தின் சாயல் அனைத்தையும் மனத்துக்குள் வாங்கிப் பதித்துக் கொள்ள முயல்கிறவனைப் போல் அதையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த அவன் கண்களில் இரு சொட்டுக் கண்ணீர் துளித்து அந்த நீர்ப் பரப்பில் தெறிக்கவே, ஒரு சிறு சலனம் தோன்றி, அதில் மிதவையிட்டிருந்த எழிற் பிம்பத்தை அலைத்துக் கலைத்தது.

சட்டென்று நிமிர்ந்த பரமேசுவர வர்மன், ஏதோ உணர்ச்சி வயப்பட்டவன்போல் தூரிகையொன்றை எடுத்துக்கொண்டு அந்தச் சித்திரச் சீலையின் எதிரே போய் நின்றான்.

இலவந்திகைப் பள்ளியில் தனியாய்த் தனித்துக்கொண்டு நேரத்தைக் கடத்தி வந்தாள் இளவரசி உத்தமசீலி. அவளால் அங்கு இருப்புக் கொள்ளவே முடியவில்லை. மகிழ்ச்சியும் திகிலும் மாறி மாறித் தோன்றி அவள் மனத்தை மலர்த்துவதும், உலர்த்துவதுமாக இருந்தன.

மேற்கு வானில் மாலைச் சூரியன் பொன் வலை பின்னத் தொடங்கி விட்டான். அதற்கு மேலும் அவளால் தன் நெஞ்சத் தவிப்பை அடக்கிக்கொண்டிருக்க இயலாமற் போகவே, அங்கிருந்து கீழே இறங்கி, அந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தை நோக்கி அன்னமென நடந்து சென்றாள்.

எண்ணத்தில் ஆயிரம் இன்பக் கனவுகள் ஊற்றெடுக்கத் தயங்கித் தயங்கி வந்த அவள், மண்டபத்தின் அருகில் சென்று மெல்லத் தன் பார்வையை மேலுயர்த்தினாள். அடுத்த கணம், அவளது கண்ணின் கருமணிக்குள் மின்னலொன்று பாய்ந்தாற்போல் பேரதிர்ச்சியுற்றுப் பின்னால் நகர்ந்தாள்.

அங்கே, அந்தக் குடை மண்டபத்தின் தூணில் பரமேசுவரவர்மன் பிரக்ஞை இழந்தவன்போல் சாய்ந்திருக்க, அவன் எதிரேயிருந்த ஓவியச் சீலையில், அவனையே உரித்து வைத்தாற்போன்ற சாயலுடன் ஓர் அழகான ஓவியம் தீட்டப் பெற்றிருந்தது.

சந்தேகமில்லை; அது அவனுடைய உருவ ஓவியமேதான்! (தொடரும்)

# சிறு தொழில்களுக்கு மின்சாரக் கட்டண உதவி

தமிழ் நாட்டில உள்ள எலலாச் சிறு தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில் களுக்கு மின்சாரக் கட்டணத்தில் உதவி நிதி அளிக்க அரசாங்கம் தீர்மானித் துள்ளது. இதில் அரிசி, மாவு, எண்ணெய் மில்கள், காப்பிக் கொட்டை அரைக்கும் மில்கள், மற்றும் கைத்தறி போர்டின் கீழ் வரும் தொழில்களுக்கு உதவி தரப்பட மாட்டாது. உயர்ந்த பட்சம் மின்சார லோடு 20 குதிரைச் சக்திக்கு மேல் இராத தொழில்களுக்குக் கீழ்க் கண்ட நிபந்தனைகளின்மேல் இந்த உதவி தரப்படும்.

மாநில கதர் கிராமத் தொழில் போர்டின் நிர்வாகத்தின் கீழ் உள்ள கதர் கிராமத் தொழில் யூனிட்டுகள், மற்றும் கிராமத் தொழில் களில் ஈடுபட்டுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்கும் இந்தத் திட்டம் பொருந்தும். இதிலும் உயர்ந்த பட்ச மின்சார லோடு 20 குதிரைச் சக்திக்கு மேல் இருதல்லாகாது.

1. தலா யூனிட்டுக்கு ஒன்பது புதுக்காசுகளுக்கு அதிகமாக உள்ள தொகை உதவியாகக் கொடுக்கப்படும். ஆனால் இந்த உதவித் தொகையும் தலா ஒரு யூனிட்டுக்கு ஒன்பது புதுக்காசுகளுக்கு மேல் தரப்படமாட்டாது.

2. மாநில அரசாங்கம் விதிக்கும் மின்சாரக் கட்டணங்கள் இந்த உதவியில் அடங்காது.

3: விவசாய காரியங்களுக்கான துணைத் தொழில்கள், அரிசி, மாவு, எண்ணெய் மில்கள், காப்பிக் கொட்டை அரைத்தல் மற்றும் கைத் தறி போர்டின் கீழ்வரும் தொழில்கள் நீங்கலாக, உயர்ந்த பட்ச மின்சார லோடு 7.5 குதிரைச் சக்திக்கு அதிகமில்லாத எல்லா சிறு தொழில்கள் மற்றும் குடிசைத் தொழில்கள், அவைத் தொழிற்சாலைச் சட்டத்தின்கீழ் வந்தாலும் இல்லாவிட்டாலும் அவைகளுக்கு விவ சாயக் காப்பு வரி விதப்படி கட்டணம் விதிக்கப்படும். தொழில் காப்பு வரியானது ஒன்பது புதுக்காசுகளுக்கு அதிகப்படாமல் இருந் தால், தொழில் காப்பு வரிக்கும், விவசாயக் காப்பு வரிக்கும் உள்ள வித்தியாசத் தொகையானது உதவியாகத் தரப்படும்.

இதுபற்றிய முழு விவரங்களை சம்பந்தப்பட்ட மாவட்ட தொழில் வர்த்தகத்துறை உதவி நெறியாளரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.



வெளியிட்டது:

**தொழில் வர்த்தகத்துறை நெறியாளர் — சென்னை-5**

# மாமனார் வந்தார்!



'படித்தால் தூக்கம் வந்து விடுகிறது. தூக்கிலும் படிப்பு வந்து விடுகிறதா?' ஜகதீசனின் படித்துக் களைத்துப் போன மனம், ஆராய்ச்சிப்பாதையில் நடைபோட்டது. 'பி.ஏ.வாவது, மண்ணாவது! இந்த 'காஸ்ட் அக்கவுண்டன்ஸி' படிக்காமல் என்ன குடிமுழுகி விட்டது?' என்று புத்தகத்தைப் பட்டென்று மூடி மேஜையின் ஓரத்துக்குத் தள்ளினான் ஜகதீசன்.

"என்ன மாப்பிள்ளை! ஏதாவது படிக்கிறீரா, இல்லே, சுந்தரவல்லி, சிங்காரவல்லி என்று நாடக வசனத்தை மனப்பாடம் செய்கிறீரா?"

பளிச்சென்று முன் பாய்ந்து, மூடிய புத்தகத்தைப் படக்கென்று பிரித்து வைத்துக் கொண்டான் ஜகதீசன், மாமனார் மாத்ருபூதத்தின் குரல் கேட்டதும்.

"ம்...ஹ்ம்... படித்துக் கொண்டுதான் இருக்கிறேன். பரீட்சை வருகிறதே!" வந்து தொலைக்கிறதே என்று சொல்ல வந்த வாய் 'வருகிறதே' என்பதோடு நிறுத்திக் கொண்டு விட்டது.

## எஸ். விசுவநாதன்

"இந்த வருஷம் பாஸ் பண்ணியாக வேண்டாமோ? காஸ்டிங் பாஸ் செய்தால் இன்னும் நல்ல ஆபீஸ், நல்ல உத்தியோகம், நல்ல சம்பளம்..."

"ஆமாம்... நல்ல சம்பளம்...!" என்று முணகினான் ஜகதீசன்.

"படியும், படியும்...பாலோ டீயோ கொடுத்தனுப்பச் சொல்கிறேன்!...."



மாமனார் போய் விட்டார், மாடி வராந்தா விளக்கை அணைத்து விட்டு.

ஜகதீசனுக்கு வெறுப்பாக வந்தது. 'சை, என்ன மாமனார் இவர்! கலையார்வத்தைத் தடை செய்யப் பிறந்த கொலைகார மாமனார். நாடகம் நடக்க இன்னும் எண்ணி ஐந்து நாட்கள்கூட இல்லை. டயலாக் நெட்டுருச் செய்யவில்லை...காஸ்டிங்கைக் கட்டிக் கொண்டு அழு என்கிறாரே இந்தக் கல் மனக்காரர்!'

இரவு பத்து மணி என்று சுவர்க் கடிகாரம் சொல்லியது. கையில் பால் தம்ளருடன் மனைவி தங்கம் உள்ளே வந்ததும், முகத்தை முடிந்த மட்டும் கோபமாக இருப்பதுபோல் வைத்துக் கொண்டான் ஜகதீசன்.

"என்ன கோபாக்கினி வீசுகிறது முகத்திலிருந்து!" என்றாள் தங்கம்.

"உன்னுடைய வேலையைப் பார்த்துக் கொண்டு போ!"

"உங்களைப் பார்த்துக் கொள்வதும் என்னுடைய வேலைகளில் ஒன்றுதானே?"

"ஆமாம்.....நான் பச்சைக் குழந்தை. பார்த்துக் கொள்ளச் சொன்னாக்கும் உன்னை!"

"ஐயே! என்ன கோபம் குழந்தைக்கு இப்படி? படிக்க முடியவில்லையென்றால் சொல்லி விடுவதுதானே அப்பாவிடம்? விழுங்கி விடுவாராக்கும் உங்களை?"

"விழுங்குகிறதா? விழுங்கி ஏப்பம்விட்டு விடுவார் உன் அப்பா! மாத்ருபூதமா அவர் மாபூதம், பெரும் பூதம்! வெறும் பூதம்!"



தங்கம் காதைப் பொத்திக் கொண்டாள். "உங்களுக்குக் கோபம் வருகிற சமயத்தில் மட்டும் அப்பாவின் பெயரை மாற்றிக் கொள்ளச் சொல்ல வேண்டும்!" என்று கூறி நகைத்தாள்.

"பின்னே என்ன! நான் ஒரு நாடகப் பைத்தியம், அமெச்சூர் நாடக நடிகன் என்று தெரிந்தும் என்னை ஏன் உன்காலில் கட்டினார்? அல்லது உன்னை என் தலையில் கட்டினார்? சீப் ஜஸ்டிஸ் என்றால் துள்ளி

விழுந்து நமஸ்காரம்பண்ணுகிறீரே! மந்திரிகள் என்றும் பல்லை இளித்து அரங்கத்துக்கு வருகிறீரே! எத்தனையோ ஜட்ஜுகள் எங்கள் நாடகங்களுக்குத் தலைமை வகிக்கவில்லையா? பிரமுகர்கள், மந்திரிகளெல்லாம் பாராட்டிப் பேசவில்லையா எங்கள் நாடகக் குழுவை? என்னை என்ன தெருக் கூத்தாடி என்று எண்ணி விட்டாரா உன் அப்பா?'' என்று குதிக்காமல் குதித்தான் ஜகதீசன்.

தங்கம் அவனைச் சமாதானப்படுத்த அதிக நேரம் பிடிக்கவில்லை.

மயிலாப்பூரில் இருந்து கொண்டு சமர்த்தாக ஒரு கம்பெனியில் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டு மூன்றும் நம்பர் பஸ்ஸில் போய் வந்து கொண்டிருந்த ஜகதீசனை மாத்ருபூதத்தின் வக்கீல் மூளை தன் பெண்ணுக்கு ஏற்ற கணவனாகத் தேர்ந்தெடுத்தது.

கல்யாணத்துக்குப் பிறகு ஜகதீசன் மாமனார் வீட்டுக்கு வந்து சேரவும் அவனுடைய முன்னேற்றத்தில் தமக்கு இருக்கும் அக்கறையையும், தம் பெண்ணின் சௌக்கியத்தில் தமக்குள்ள உரிமையையும் ஸ்தாபித்துக் கொண்டார். மாத்ருபூதம் தமக்குத் தெரிந்த பிரபல கம்பெனியொன்றில் அவனைப் 'போட்டு' அக்கவுண்டென்ஸி படிக்கச் சொல்லி, அவன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு, அவன் அக்கௌவுண்டண்ட் ஆன போது, 'காஸ்ட் அக்கவுண்ட்ஸ்' புத்தகங்களாகிற குட்டித் தலையணைகளை அவன் முன் போட்டு அவனை நரகவேதனைக்குள்ளாக்கினார்.

வீட்டில் தனிச் சுதந்திரம் என்றும் துளி கூடக் கிடையாது ஜகதீசனுக்கு. ஞாயிற்றுக் கிழமையன்று சபாவுக்குப் போவதானாலும் கூட, மாமனாரிடம் சொல்லி விட்டுத்தான் போக வேண்டும். அது மட்டுமல்ல, போய் வந்ததும், அழகுப் போட்டிகளில் காண்பிப்பது போலத் தலையை ஒரு முறை காட்ட வேண்டும், சபாவுக்குத் தான் போய் வந்ததாக. 'இந்த அடிமைத்தனத்தை ஒழிக்க ஓர் ஆப்ரகாம் லிங்கன் இங்கே இல்லையோ?' என்று ஜகதீசன் வருத்தப்பட்டுக் கொண்ட நாட்கள் எத்தனையோ!

''நீர்பாட்டுக்கு அந்தக் கானந்த சபாவில் போய் உட்கார்ந்து விடாதீரும் மாப்பிள்ளை! நாடகம் கிடகம் எல்லாம் 'ஓவர்'. இன்னமே அதெல்லாம் கூடாது!'' என்று மூச்சுக்கு முந்நூறு தடவை சொன்னாலும் அவரை மீறிக் கொண்டு கானந்த சபா அமெச்சூர் நாடகங்களில் நடித்துக் கொண்டுதான் இருந்தான் ஜகதீசன். கதாநாயகன் வேடம் தாங்கி எல்லோரையும் கவர்ந்திருக்கிறான் அவன். ஆபீஸில் எப்படியோ, இந்தத் துறையில் ஜகதீசனுக்குப் புகழ் அதிகம்!

''என்னடா, புக்ககம் எப்படி இருக்கிறது?'' என்று அவன் நண்பர்கள் கேலி செய்யும் பொழுது, ''புக்ககம் இல்லேடா, ஆயுள் தண்டனை, 'லைப் இம்ப்ரிசன்மெண்ட்'!'' என்று இருக்குவான் ஜகதீசன். தங்கத்தின் முகத்துக்காக அவன் இத்தனையையும் பொறுத்துக் கொண்டுதான் ஆகவேண்டியிருந்தது.

''தங்கம் ... ஏ தங்கம்...!''—ஜகதீசன் மாடிப்படியிலிருந்து இரைந்தான். ஆபீஸிலிருந்து வந்ததும், வராததுமாய். மாமனார் வீட்டில் இல்லாத சமயங்களில் மட்டும்தான் அவன் குரல் இப்படி எட்டுக் கட்டையில் இரையும்.

''ஏ தங்கம், எங்கே தொலைந்து போய் விட்டாய், நீ?''

''ஐயய்யய, இதோ வந்துகொண்டே இருக்கிறேனே, என்ன தலை போகிற அவசரமாம்?'' என்று வந்தாள் தங்கம்.

''நான் ஒத்திகைக்குப் போகிறேன்...உன் அப்பா வருவதற்குள் திரும்ப வேண்டும்.... நாழியாகும்... காத்திருக்காதே! இதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன்!''

''அப்பாவுக்குப் போன் செய்து விடுவேன்!'' என்று பயமுறுத்தினாள் தங்கம்.

''செய்வேன், பார்க்கலாம்!'' என்று ஜகதீசன் வீராப்புப் பேசினாலும், பயம் என்னவோ உறுத்தத்தான் செய்தது. குழந்தைகளிடம் 'பூச்சாண்டி' என்று சொல்வதற்கும் ஜகதீசனிடம் தங்கம் 'அப்பா' என்று சொல்வதற்கும் பலன் ஒன்றுதான்.

''நான் நண்பர்களோடு சினிமாவுக்குப் போயிருக்கிறேன் என்று சொல்லேன் தங்கம்! தங்கம்..!'' — குழைந்தான் ஜகதீசன்.

''நம்ப வேண்டுமே அவர்!''

''நம்பச் செய்ய வேண்டும் தங்கம்!''

''உங்கள் அதிர்ஷ்டம்!''

''தங்கம்...தங்கம்...!''

''ஐயே, என்ன குழைவு, கெஞ்சல்!''

'போங்கள் நான் சொல்லிக் கொள்கிறேன்' என்று தங்கம் சொல்லும் வரைக்கும் அவளை விடவில்லை அவன்.

சுவரில் மாட்டியிருந்த சுவாமி படத்தைப் பயபக்தியோடு வணங்கி விட்டு நடையைக் கட்டினான் ஜகதீசன். பக்தி என்னவோ ஸ்வாமி பேரில் இருந்தாலும், பயம் என்னவோ மாமனாரிடத்தில் தான்!

ஜகதீசன் சபாவை அடைந்து, பாதி வீட்டிலும் பாதி ஆபீஸிலுமாகப் படித்து உருவேற்றிய வசனங்களைக் கதாநாயகனுக்குரிய கம்பீரத்தோடும், காதலோடும், தக்காய 'ஹீரோ'வுக்குரிய அழகையோடும் சொல்லி ஒத்திகையை முடித்துக் கொண்டு உள்ளுக்குள் ரோடு இஞ்சின் ஓடுவதுபோல் இருந்த இதயத்தைக் கையில் பிடித்துக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தான்.

அவன் நினைத்தபடி மாமனார் வந்திருக்கவில்லை. அடிக்க வருவதுபோல் கைத்தடியை வீசிக் கொண்டு காட்டுக் கத்தல் கத்தவுமில்லை. 'நல்ல மாமனார் நமக்கென்று வாய்த்தார். கரடி மார்க், காண்டாமிருகம் மார்க் மாமனார்' என்று எண்ணிக் கொண்டு அறைக்குள் நுழைந்தான் ஜகதீசன்.

அவனுடைய உடலில் படிந்திருந்த களைப்புக்கும் அலுப்புக்கும் கைகள் முளைத்து அவனைப் பஞ்சு மெத்தையில் பளிச்சென்று தள்ளித் தூக்கத்தை வருவிக்கிற சமயத்தில் மாமனார் வந்தார்.

''என்ன!'' என்றார் மாமனார் அறைக்கு வெளியே நின்றபடி.

அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான் ஜகதீசன்.

''எதுவரை படித்திருக்கிறீர் மாப்பிள்ளை?''

'தங்கத்தைத் தலையில் கட்டும்போதுதான் இப்படி ஒரு கேள்வி கேட்டார் என்றால், இரவு பத்து அடிக்கப் பத்து நிமிஷம் இருக்

கும்போதுமா ஒரு மனிதர் இப்படி ஒரு கேள்வி கேட்பார்?"

"இதுவரையில் படித்துக் கொண்டுதான் இருந்தேன். தூக்கம் கண்ணைச் சுழற்றிற்று. படுத்தேன்!"

"ஹ்ம்!" — இது உறுமலா, பெருமூச்சா? கோபமா...?

"எனக்குத் தெரியும் மாப்பிள்ளை....நீர் இத்தனை நேரம் உங்கள் கண்ணறாவி சபாவில் வசனம் பேசிக்கொண்டு நின்றீர். வந்து சாப்பிட்டு விட்டுப் படுத்தீர்!"

ஐஸ்பெட்டிகளையும், அனல் கட்டிகளையும் தலைக்கு மேலே சரியாக ஓரடி உயரத்திலிருந்து யாரோ கொட்டியது போலிருந்தது ஜகதீசனுக்கு. தங்கம் அவரிடம் சொல்லித் தொலைத்து விட்டாளா?

"கண்ணே கருப்பட்டியே என்று இந்த நாடக வசனம் படிப்பதற்கு 'காலேஜ் லெஸன்ஸ்' படித்தாலும் பிரயோசனம் உண்டு. நாடகமாம் நாடகம்! இங்கேயும் ஆரம்பித்து விட்டீர் நாடகத்தை!"

மாமனார் ஸ்தானத்தில் இருப்பவரை மென்னியைப் பிடித்து முறித்து விட்டதாக எந்த மாப்பிள்ளையும் மார் தட்டிக் கொண்டதுண்டோ? அந்த மாதிரி ஒரு காட்சியைக் கற்பனையில் மட்டுமே கண்டு, வாய்க்குள்ளேயே பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டான் ஜகதீசன்.

மாமனார் தட தடவென்று கீழே போனார்.

தங்கம் வெடவெட வென்று பயந்து கொண்டே மேலே வந்தாள்.

"உன்னிடம் சொன்னதற்கு, ஒரு...ஒரு... ஒரு..." — ஜகதீசன் கோபத்தில் பிதற்ற முயன்று, தொடர்ந்து பிதற்றவும் முடியாமல் தடுமாறினான் தங்கத்தை நோக்கி.

"நான் சொல்லவே யில்லே ... கேளுங்களேன் .....!" என்று அவள் முகத்தை அவன் பக்கம் திருப்பத் திருப்ப, அவன் கழுத்துக்காரன் போலக் கழுத்தைத் திருப்பிக் கொண்டான்.

"அம்மாதான் சொல்லி விட்டாள் தெரியாத்தனமாய்! நான் வாயையே திறக்கவில்லே" என்றாள் தங்கம்.

ஜகதீசனுக்குக் கோபம் சற்றுத் தணிந்தது போல் இருந்தாலும் மாமனாரிடம் பொய் சொல்லி விட்ட அவமானம் நினைவில் வந்து கொன்றது.

"மூளையே இல்லாத மனித ஜன்மம் எது என்று யாராவது கேட்டால் 'மாமியார்' என்று கூசாமல் சொல்லலாம், போதுமா தங்கம்...?"

"வாய் தவறி வந்து விட்டது அம்மாவுக்கு என்கிறேனே!"

"தவறிப் போய் வாய் வந்து விட்டது உன் அம்மாவுக்கு என்பேன் நான்! பேசாதே என்னிடம்!"

"இப்படித்தான் உங்கள் நாடகத்தில், கதாநாயகியிடம் நீங்கள் 'கொஞ்சு'கிறீர்களாக்கும்!" என்று தங்கம் அவன் தோள் பட்டையைப் பற்றிக் கொள்ளவே, ஜகதீசனைப் பற்றிக் கொண்டிருந்த கோப நோய் சென்று மறைந்தது அந்தக் கணம்.

"உன் அப்பாவை ஹிரண்யனாகப் போட்டு நான் நரசிம்மாவதாரம் எடுத்து, குறைந்த பட்சம் அவருடைய சட்டையையாவது தாறுமாறாய்க் கிழிக்க வேண்டும் தங்கம்!" என்று தன் ஆத்திரத்தை அதோடு நிறுத்திக்கொண்டான் ஜகதீசன்.

'ஆபீஸ் முடிந்தவுடனே நேரே வீடு வந்து சேர வேண்டும்' என்பது மறு நாள் மாமனார் இட்ட கட்டளையாக இருந்தது. அதைத் தங்கத்தின் வாய்மொழியாகக் கேட்டிருந்தாலும் ஜகதீசன் பொறுத்துக் கொண்டிருப்பான். சாட்சாத் மாமனாரே, சாப்பிட்டு விட்டுப் புறப்படும் போது, திருவாய் மலர்ந்

## பேராசிரியருக்குப் பாராட்டுச் சின்னம்

சேசு சபையைச் சேர்ந்த எர்ஹார்ட் அடிகள், முப்பது ஆண்டுகளுக்குமுன் ஐரோப்பாவிலுள்ள ஆல்ஸாஸ் நாட்டிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்தார். திருச்சியிலுள்ள புனித சூசையப்பர் கல்லூரியில் பேராசிரியராகவும், சென்ற இருபது ஆண்டுகளாகக் கல்லூரியின் முதல்வராகவும் பணிபுரிந்து சில மாதங்களுக்கு முன் ஓய்வு பெற்றார். இருபத்தெட்டு ஆண்டுகளாகத் திருச்சி 'லீலைஸ் மாணவர் இல்லத்தின்' அருங்காவலராகவும், விடுதியில் உறையும் மாணவர்களுக்குத் தந்தையாகவும் விளங்கி அருந்தொண்டாற்றி யுள்ளார்.

அடிகளார் எளிய வாழ்க்கை உடையவர். மாணவர் ஒழுங்கு முறையில் மிகவும் கண்டிப்பானவர். எனினும் மிகவும் இனிய, அன்பு ததும்பும், பொன் போன்ற மனம் படைத்தவர். பல ஆயிரக்கணக்கான மாணவர்களைக் கல்வியிலும், ஒழுங்குமுறையிலும் பண்பாட்டிலும் சிறந்தோராக உருவாக்கிய பெருமை எர்ஹார்ட் அடிகளைச் சாரும்.

இத்தகைய உத்தமரைத் தமிழ்நாடு போற்றக் கடமைப்பட்டுள்ளதல்லவா? எர்ஹார்ட் அடிகளின் தொண்டை நினைவுகூர, ஒரு பாராட்டு விழா நடத்தவும் அவரது பெயரால் ஒரு சின்னம் எழுப்பவும், திருச்சிப் பெருமக்கள் அண்ணாமலை பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் திரு.டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்களின் தலைமையில் குழு அமைத்து, ஆவன செய்து வருகின்றனர்.

அடிகளாரின் மாணவர்களும், நண்பர்களும் தம்மாலியன்ற பொருளுதவியை ஸ்ரீ எம். ஏ. நடேச அய்யர், மானேஜிங் டைரக்டர், தமிழ் நாடு சென்டிரல் பாங்க், திருச்சி – 2 என்ற விலாசத்துக்கு அனுப்பி, அடிகளாருடைய தொண்டின் நினைவு தமிழகத்தில் 'என்றும் நின்று நிலவத் துணைபுரிவார்களாக.

தருகிறார்: ஜகதீசன் ஏதும் பேசாது, சாப்பிட்டது சீரணிக்க ஆபீசுக்குப் புறப்பட்டான்.

அவன் நினைவெல்லாம் மறு நாள் நடக்கவிருக்கும் நாடகத்திலேயே நிலைத்திருந்தது. ஆபீஸிலும் வேலை யேதும் ஓடவில்லை. 'விசைக் கணக்கில் கணக்கும் லெட்ஜர்களைப் புரட்டுவதற்கும் பதிவு செய்வதற்கும் ஏதும் கலையுணர்ச்சி தேவையில்லையே!' என்று அலுப்புடன் நினைத்துக் கொண்டான் ஜகதீசன். மறு நாள் நாடகத்தில் தான் சொல்ல வேண்டிய வசனங்கள், நடிக்கவேண்டிய பகுதி யாவும் அவனுக்குள்ளே ஓடிப் பிடித்து விளையாடின.

மாமனாரின் கட்டளையை ஒரேயடியாக உதறித் தள்ளி விடவும் அவனுக்கு அவ்வளவு துணிச்சல் இல்லையே! ஒரே வீட்டிலேயே இருந்து கொண்டு சண்டை பிடித்துக் கொள்ளவும் முரண்டு செய்யவும் அவனுக்கே எப்படியோ இருந்தது.

மாலை கோர்ட்டிலிருந்து வந்ததும் மாத்ருபூதம் கேட்ட முதல் கேள்வி "மாப்பிள்ளை வந்தாயிற்றா?" என்றுதான்.

தங்கத்துக்குத் தகப்பனாரிடம் பதில் சொல்லவே பயமா யிருந்தது. "இல்லை!" என்றாள் தங்கம். அவள் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது.

நரைத்த தாடியும் மீசையுமாக ஒரு பெரியவரும், அவருடன் தோல் பையை இடுக்கிக் கொண்டு கண்ணாடி அணிந்த மற்றொரு நபரும் வெளியே யாருடனோ விசாரித்தபடி உள்ளே வந்தார்கள்.

"நாங்கள் கலானந்த சபாவிலிருந்து வருகிறோம்!" என்று கண்ணாடிக்காரர் சொன்னவுடன் மாத்ருபூதத்தின் முகம், செவி, கண் எல்லாம் பயங்கரச் சிவப்புடன் ஜொலித்தன. பெரியவர்களான அவர்களிடத்தில் மரியாதைக் குறைவாக நடந்துகொள்வது நன்றாக இராது என்றோ என்னவோ, "எனக்கு இந்த டிராமா, கிமா எல்லாம் பிடிக்காது. நீங்கள் அதைப் பற்றிப் பேசுவதானால் இப்போதே வெளியே போய் விடலாம்!" என்றார்.

தாடிக்காரர் மீசையை மெதுவாகத் தடவிக்கொண்டே, "—ஹி...ஹி..." என்றார். "நான் சபாவுக்குத் தலைவன்; இவர் காரியதரிசி..." என்றார்.

"இந்த மாதிரிச் சபாக்களே அநாவசியம். அதற்குத் தலைவரும் வேண்டாம், காரியதரிசியும் வேண்டாம்...!" என்றார் மாத்ருபூதம்.

அதில் ஏதோ ஹாஸ்யம் தென்பட்டது போல் தலைவரும், காரியதரிசியும் 'ஹோ' என்று சிரித்தபோது, மாத்ருபூதம் நிஜ பூதமாகவே மாறி அவர்களை முறைத்தார்.

"அமெச்சூர் நாடகத்துக்கே ஒரு புகழ் உண்டாக்கி விட்டார் உங்கள் மாப்பிள்ளை ஸ்ரீமான் ஜகதீசன். அவரை நாடக மேடைக்கு அளித்த உங்களை நாளைக்குப் பாராட்டித்தான் தீருவது என்று அங்கத்தினர்கள் எல்லோருமாகத் தீர்மானித்திருக்கிறோம்..."

'ஷாக்' அடித்த மாதிரி இருந்தது மாத்ருபூதத்துக்கு ஒரு கணம். "இந்தக் கச்சா பிச்சா வேலைக்கெல்லாம் என்னை இழுக்காதீர்கள். அவமானம்! அவமானம்!" என்றார்.

"சரியாகப் பார்த்தால் ஸ்ரீமான் ஜகதீசனின் தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய மரியாதை இது. ஆனால் அவர் காலமாகிவிட்டதால், அந்த மரியாதையை மாமனார் ஸ்தானத்தில் இருக்கிற பெரியவரான உங்களுக்குத் தான் செய்ய வேண்டும் என்பது எங்களுடைய ஏகோபித்த அபிப்பிராயம்..."

"எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரிகிறது, நீங்கள் நாடகம் நாடகம் என்று சொல்லும்போது. தயவு செய்து போங்கள் இங்கிருந்து!" என்றார் மாத்ருபூதம்.

ஆனால் காரியதரிசியும் சரி, தலைவரும் சரி, இதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை.

"உங்களுக்கெல்லாம் நேரம் இருக்காது தான். இது மாதிரிக் கலை நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்ள... சீஃப் ஜஸ்டிஸ் பூவராகம் 'இனாகுரேட்' பண்ணுகிறார்! யூனியன் கலாசார மந்திரி தலைமை வகிக்கிறார். இம்மாதிரி கௌரவம் உங்களுக்குச் செய்ய எங்களுக்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்..!"

'பிரதம நீதிபதியா! மத்திய மந்திரியா! அடேயப்பா!' என்று உள்ளே ஒரு தாக்கல் தாக்கிப் போட்டது மாத்ருபூதத்துக்கு.

"நான் வரவில்லை என்றால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டார் மாத்ருபூதம்.

"அவ்வளவு இலேசில் உங்களை விட்டு விடுவோமா?" என்று சொல்லி 'ஹி ஹி ஹி' என்று சிரித்தார் தலைவர் தாடி மீசை. காரியதரிசி தொடர்ந்து, "உங்களை மாலை போட்டு மரியாதைசெய்து மனசு குளிர, வாய் குளிர நாலு வார்த்தை சொல்லாவிட்டால் எங்கள் சபாவின் பணிகள் பூர்த்தியாகவே ஆகாது!" என்றார்.

"யார் தொடங்கி வைக்கிறார் என்றீர்கள்?"

மாத்ருபூதம் மெல்ல இறங்கி வருகிறார் என்பதை அவர் குரல் எடுத்துக் காட்டியது.

"சீஃப் ஜஸ்டிஸ் பூவராகம் தொடங்கி வைக்க, மத்திய மந்திரி தலைமை வகிக்கிறார். அவரே உங்கள் கழுத்தில் மாலையும் போடப் போகிறார்!" என்று சொல்லி விட்டு, காரியதரிசி தாடித் தலைவரைப் பார்த்தார்.

"ஒரு மந்திரி கையில் மாலை வாங்கிக் கொண்டு மரியாதை பெற்றுக் கொள்வது இலேசா என்ன!" என்று தலைவர் கைகளை ஆட்டி ஆட்டிப் பேச ஆரம்பித்தார்.

மாத்ருபூதத்தின் மனசுக்குள் தட்டிய சபலம் கனிந்து, பெரிய சபையின் மத்தியில், 'ஸ்ரீமான் ஜகதீசனின் மாமனார், பெரிய வக்கீல்' என்று மந்திரியும், பிரதம நீதிபதியும் புகழக் கர்வத்துடன் நிற்பது போன்ற காட்சி தென்பட்டது. 'இதுவே, அடுத்த 'சான்ஸில்' அவரை நீதிபதியாக அமர்த்தவும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்குமல்லவா?'

"எத்தனை மணிக்கு உங்கள் புரோகிராம்?"

"சரியாக ஆறு மணிக்கு. உங்கள் சௌகரியம் எப்படியோ அப்படியே முன்னாலோ பின்னாலோ பாராட்டு உபசாரத்தை வைத்துக் கொள்ளலாம்!" என்றார் தலைவர்.

"நாடகம் முடிந்தவுடன் வைத்துக் கொள்வது அல்லவோ நல்லது! வக்கீல் சார் தம் நாட

# அனுபவமே சிறந்த ஆசான்





















## ஆயுள் இன்சூரன்சுபோல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை.

கத்தைப் பார்த்து அபிப்பிராயமும் சொல்லலாம்.!" என்றார் காரியதரிசி.

"அப்படியே வைத்துக் கொள்ளுங்கள்!" என்று மாத்ருபூதம் சொல்லும்போது அவர் உடலெல்லாம் மகிழ்ச்சியினால் புல்லரித்தது. மாப்பிள்ளை மூலம் எத்தனை பெரிய கௌரவம்!

வந்தவர்கள் திரும்பிப் போனார்கள்.

சற்றைக்கெல்லாம் ஜகதீசன் லெட்ஜர்களும் கையுமாய்ச் சோர்ந்து களைத்துப் போய் ஆபீஸிலிருந்து வந்தபோது மாத்ருபூதம், "என்ன மாப்பிள்ளை?" என்று விசாரித்தார்.

ஜகதீசன் மாமனாரின் முகத்தைப் பார்க்கப் பயந்தது போல் தலை தாழ்த்தி நின்று கொண்டிருந்தான்.

"என்ன இத்தனை நேரம் ஆபீஸில்?"

"ஆடிட்டிங் ..பிராணன் போகிறது..."

"த்சொ...த்சொ.. இன்னும் எத்தனை நாட்களுக்கு?"

"இரண்டு நாள்."

"உங்கள் நாடகம் என்றைக்கு?"

தூக்கி வாரிப் போட்டது போல் ஜகதீசன் மாமனாரைப் பார்த்தான்.—"நாளைக்கு!"

"வசனம் கிசனம் மனப் பாடம் பண்ணி விட்டீரோ? அப்புறம் கிடந்து அவஸ்தைப் படப் போகிறீர்!" என்றவர் தொடர்ந்து, "என்னைக் கௌரவிக்கப் போகிறார்களாம் மாப்பிள்ளை, உங்கள் சபாவிலே நாளைக்கு... கோர்ட்டிலிருந்து வந்தவுடனே நேரே உங்கள் சபா தான் மாப்பிள்ளை !" என்று கூறினார்.

"பலே பேஷ்!" என்று ஆரவாரித்தான் ஜகதீசன், தங்கத்தைக் கூப்பிட்டு. "உங்க அப்பாவுக்குப் பெரிய மரியாதை நடக்கப் போகிறது நாளைக்கு!" என்று பெரிய குரலில் அறிவித்தான் மாமியார் காதில் படவேண்டுமென்றே.

மறுநாள் மாலை சுகானந்த சபா அமர்க்களப்பட்டது. தெரு முழுதும் கார்களும் ஸ்கூட்டர்களும் தோரணம் போல் அலங்கரிக்க ரசிகர்களின் கூட்டம் கசகசவென்று நெரிய, சபா கலகல வென்று இருந்தது: பிரதம நீதிபதி சபாவைப் பாராட்டி நான்கு வார்த்தைகள் சொல்லி விட்டு அமர, நாடகம் ஆரம்பமாயிற்று.

ஜகதீசன் வந்த இடங்களெல்லாம் அப்ளாஸ் வாங்கினான். அவன் மேடையில் தோன்றும்பொழுதெல்லாம் ரசிகர்களிடத்தில் சலசலப்பும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. இவையொன்றையுமே கண்டறியாத மாத்ருபூதம் சிலை மாதிரி அமர்ந்திருந்தார்.

நாடகம் முடிந்தவுடன், மாத்ருபூதத்தை மேடையில் நிற்க வைத்து, மாலையைப் போட்டு, "அமெச்சூர் நாடக உலகத்துக்கே ஒரு மாணிக்கத்தைத் தந்து, தம் பாதுகாப்பில் அந்த மாணிக்கத்தைப் பிரகாசிக்கச் செய்கிறவர்" என்று கலாசார மந்திரி உபசார வார்த்தைகள் மொழிந்தார்.

முடிவில் நடுத்தர வயதுடைய மனிதர், ஜகதீசனின் நடிப்புத் திறமையைப் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்த போது, ஜகதீசன் மந்திரியுடன் அறிமுகமாகி, வளைந்து நெளிந்து நின்று உரையாடிக் கொண்டிருந்தான்.

மாத்ருபூதம், நடுத்தர வயதுடைய மனிதரைச் சுட்டிக் காட்டி, அருகிலிருந்த காரியதரிசியிடம், "யார் அது?" என்று கேட்டார்.

"அவரைத் தெரியாதா உங்களுக்கு? அவர் தான் சுகானந்த சபா தலைவர் சுப்பராமன்!" என்று காரியதரிசி சொன்னபோது, அதிர்ச்சி அடைந்தவராக, "பின்னே தலைவர் என்று சொல்லிக் கொண்டு அன்றைக்கு உங்களுடன் வந்தது யார்?" என்று கேட்டார் மாத்ருபூதம். அவர் உடம்பு ஆடிக்கொண்டிருந்தது. தம் வீட்டுக்கு அன்று காரியதரிசியுடன் உண்மைத் தலைவர் வர இயலாமல் அவர் வெளியூர் போயிருந்தது எப்படித் தெரியும் மாத்ருபூதத்துக்கு!

"அதுவா? அவர் அதோ மந்திரியுடன் பேசிக்கொண்டிருக்கிறார்!" என்று ஜகதீசனைச் சுட்டிக் காட்டினார் காரியதரிசி!

மாத்ருபூதம் ஜகதீசனின் அந்த நடிப்புக் கண்டு அயர்ந்து விட்டார்.

## மகரிஷி கார்வே



வேதங்களில் சொல்லிய நூறாண்டு பூரண நல்வாழ்க்கையும் வாழ்ந்து தமது நூற்று நான்காவது வயதில் காலமான பாரதரத்ன மகரிஷி கார்வே பாரதப் புதல்வர்களில் உண்மையிலேயே ரத்தினம். அறுபதாண்டுகளுக்கு முன் மாதர் முன்னேற்றத்தைக் குறித்த தமது புரட்சிகரமான கருத்துக்களைத் தைரியமாக எடுத்துக் கூறிச் செயலாற்றத் தொடங்கினார் அவர். அவரது உயர் பண்பும், அப்பழுக்கற்ற நன்னெறியும், தளராத மன உறுதியும் நாடறிந்தவை. கார்வே தாம் மேற்கொண்ட பணியை விடாது ஐம்பதாண்டுகளுக்கு மேல் நடத்திச் சிறிய அளவில் ஆரம்பித்த ஸ்தாபனம், இப்போது மாதர் கல்வி பல்கலைக் கழகமாக மிக விரிவாக வளர்ந்து மாதர் நலத்துக்கு மையமாகத் திகழ்வதைத் தாமே காணும் பாக்கியம் பெற்றார். அவருடைய பூத உடல் மறைந்தாலும் அவர் மகரிஷியாகவே மாதர் சமூகத்தினரால் மதிக்கப்பட்டுச் சிரஞ்சீவியாக வாழ்கிறார்.



"டேய்! 304! போனில் யாருடா பேசினாங்க?"

"அதுங்களா? 'ஹலோ' என்றேன். யார் பேசுகிறது என்றது குரல் உடனே நான்தான் 304 என்றேன். உடனே அவுங்க 'ராங் நம்பர்' என்று சொல்லி போனை வச்சுட்டாங்க!"

கணவர்: நம்ம குழந்தை என் ஜாடையா இருக்குன்னு எல்லோரும் சொல்கிறார்கள். நீ மட்டும் சொல்லவில்லையே!

மனைவி:— நான் சொல்லலாம் என்றுதான் நினைத்தேன்.. நீங்க கோவிச்சுக்கப் போறேளே என்று சும்மா இருந்து விட்டேன்!





இன்ஷியூரன்ஸ் ஏஜெண்ட்:— கரணம் தப்பினால் மரணம். அதனாலே நீங்கள் அவசியம் இன்ஷியூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொள்ள வேண்டும்!

"இவர் தூக்கத்திலே ரொம்பப் பேசுவார்!"

"அப்படியா! இவர் பிறர் தூக்கத்தில் தான் ரொம்பப் பேசுவார்!"

"அதெப்படி?"

"அவர் ஒரு பிரசங்கி."





நாரிமணி: ஆஹா! என் அழகிய தாமரையே! உன் மலர்ச்சியைப் பார்த்தவுடன் என் கவியுள்ளம் மலர்கிறது! உனக்கு மட்டும் வாயிருந்தால் நீ என்ன சொல்வாயோ?

கணவன்:— முதலில், நான் தாமரை அல்ல அல்லி மலர் தான் என்று சொல்லும்.



# நடிப்பதற்கு வந்தவர்

கல்யாணி

சென்னையில் எந்த ரோடு எப்படி இருந்தாலும் இந்தக் கோடம்பாக்கம் ரோடு இருக்கிறதே. அதாவது கோடம்பாக்கம் பெரிய 'லெவல் கிராஸிங்'கிலிருந்து ஸ்டுடியோக்களைப் பார்க்கச் செல்லும் ஆர்க்காட்டு ரோட்டில் ஒரு மூன்று மைல் தூரம் மிகவும் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற பாதையாகும். வாழ்க்கைப் பாதையில் பலர் பல வழிகளில் செல்கின்றனர். ஆனால் இந்தப் பாதையில் நடப்பவர்களுக்கோ.....

இந்தப் புண்ணியப் பாதை ஒரு விதத்தில் போர்க்களம் தான். இதில் அநேகம் பேர்கள் படுகாயப்பட்டு இறந்தே போய் விட்டனர். மீதமிருப்பவர்களில் சிலர் இறந்துகொண்டிருப்பார்கள். மேலும் மீதமிருப்பவர்கள் அதே காரியத்தை எதிர்காலத்தில் செய்வார்கள். ஏதோ கொஞ்சம் பேர்கள் அரியலூர் ரயில் விபத்தில் ஏழாவது பெட்டி மயிரிழையில் தப்பியது போல் தப்பித்துக் கொள்கின்றனர்.

இந்த ஏழாவது பெட்டியை எண்ணிக் கொண்டு ராஜநடை போடுகிறவர்கள் நாளாவட்டத்தில் தேய்ந்து பிச்சைக்காரர்களாய் நடப்பார்கள். இந்தப் பாதையில் இப்போது நடந்து கொண்டிருப்பவர்தான் சினிமாவில் நடிப்பதற்காகச் சேகர் என்று தம் பெயரை மாற்றி வைத்துக் கொண்டிருக்கும் சந்திரசேகரன்.

தூங்கிக் கொண்டிருக்கும்போதே மனைவியை விட்டு விட்டு ஓடிப் போன நள மகாராஜாவைப் போல், படித்துக் கொண்டிருக்கும் போதே பள்ளிக்கூடத்தை விட்டு விட்டுச் சென்னைக்குச் சினிமாவில் சேருவதற்காக ஓடி வந்து விட்டார் இவர். இவருக்கும் பந்தம், பாசம், சொந்தம், உறவு எல்லாம் இவருடைய விதவைத் தாயார்தான். நாலு கடைக்கு முறுக்குச் சுட்டுப் போட்டுப் பத்துக் கடைக்குத் தையல் இலை தைத்துக் கட்டுக்கட்டாகக் கொடுத்து ஓய்ந்த நேரத்தில் நாயர் கடை ஹோட்டலில் மாவாட்டிக் கஷ்ட ஜீவனம் செய்தாள் சந்திரசேகரனின் தாயார். யாருக்காக? சாட்சாத் இந்த உத்தமபுத்திரனுக்காகத்தான். இந்த உத்தம புத்திரனே இன்று குஷாலாகச் சினிமா உலகத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டான்.

உச்சிக் கிளையை நன்றாக வெட்டி விட்டுப் பின் கீழே இருந்து கயிறு கட்டி இழுத்து ஒடிப்பார்களே அப்படித்தான் தன் மகன் ஓடிப் போய் விட்டான் என்பதை அறிந்தவுடன் ஒடிந்து போனாள் தாயார். ஏற்கனவே மகன் போக்கைக் கண்டு நொந்து கிடந்தவள் அவள். ஊரிலே தாய் துடிதுடித்துக்கொண்டிருக்கும் அதே நேரத்தில் நடிகர் சினிமா முதலாளிகளின் வீட்டுப் படிகளில் 'விட்டாய்' ஏறி இறங்கிக்கொண்டிருந்தார். நாடகத்தில் நடித்தால் சினிமா சம்பந்தப்பட்டவர்கள் வந்து பார்ப்பார்கள்; அப்படியே நாடகம் முடிந்ததும் மேடைக்கு வந்து, 'சினிமாவில் நடிக்க உனக்குச் சம்மதமா?' என்று பயந்து கொண்டு கேட்பார்கள் என்று எண்ணிய எண்ணமெல்லாம் கைப் பணத்தைக் கொடுத்து மூன்று 'அமெச்சூர்' நாடகங்களில் நடித்த பிற்பாடு மண்ணாய்ப் போய் விட்டது. இருந்தாலும் மனந் தளராது தாயாருக்கு ஒரு கடிதம் போட்டிருந்தார்:

"அன்புள்ள அம்மா,

நான் சொன்னால் என் இலட்சியங்களுக்குத் தடையாய் நின்று தடுப்பாய் என்றுதான் உன்னிடம் சொல்லாமல் இங்கு சினிமாவில் சேர்வதற்கு வரவேண்டியதாயிற்று. என்னைப்பற்றி நீ கவலைப்படாதே: உன் உடம்பை நன்றாகக் கவனித்துக் கொள். இங்கு நான் சினிமாவில் சேருவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறேன். கூடிய சீக்கிரம் கிடைத்து விடும். பின்னும் உன்னை வந்து அழைத்துக் கொள்கிறேன்.

உன் அன்புள்ள மகன், சேகர்."

பி. கு.: நீ சேர்த்து வைத்திருந்த இருநூறு ரூபாயை உன்னிடம் சொல்லாமல் எடுத்துக் கொண்டு வந்து விட்டேன். ஆனாலும் அதை மிகவும் சிக்கனமாகத்தான் செலவழித்துக் கொண்டிருக்கிறேன்.

இந்தக் கடிதத்தை அம்மாவுக்கு எழுதிப் போட்டவுடன் அம்மாவிடம் சம்மதம் பெற்றது போன்ற ஓர் உணர்ச்சி இளம் நடிகருக்கு உண்டாகி விட்டது.

சினிமாவில் சேர என்று சென்னையில் அலைபவர்களுக்கும் ஏதாவது வேலை பார்க்க என்று சென்னையில் அலைபவர்களுக்கும் சில வித்தியாசங்கள் உண்டு. வேலைக்கு அலைபவர்களுக்குக் கையை நறுக்கியவுடன் இரத்தம் வருவது போல் கேட்டவுடன் இல்லை என்ற பதில்தான் கிடைக்கும்; சினிமாக்காரர்கள் அப்படியல்ல; ரொம்ப நல்லவர்கள்! எடுத்த எடுப்பில் எதற்கும் இல்லை என்றோ, முடியாது என்றோ பதில் சொல்லிவிட மாட்டார்கள். இவர்களுக்கென்றே ஒரு காலண்டர் இருக்கும், யார் வந்து எது

வேண்டும் என்று கேட்டாலும் முதலில் இல்லை என்று சொல்லவே மாட்டார்கள். 'ஒரு சான்ஸ்' என்று சொன்னவுடனேயே, 'நீங்கள் என்னை நவம்பர் இருபத்தி எட்டாம் தேதி இன்ன ஸ்டுடியோவில் சந்தியுங்கள்' என்பார்கள். அங்கே போனால் 'அவசரமாக பம்பாய் போகிறேன். 'ஹோட்டல் லெ'லில் வந்து பாருங்கள்' என்று சொல்லுவார்கள். இப்படி ஒவ்வொரு பட முதலாளிகளையும் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். இதில் அநேகம் பேர் அவர்கள் சொன்ன நேரத்தில் சொன்ன இடத்தில் இருப்பதில்லை. அது வேறு விஷயம். நடக்க நடக்கச் செருப்பு தேய்வதைப் போல் அலைய அலைய ஆளே தேய்ந்தான் சந்திரசேகரன் என்ற சேகர். பாவம்!

சந்திரசேகரன் வறுமையோடு போராட வேண்டிய நிலை வந்து விட்டது. படத்தில் தலையைக் காட்டுவதற்காக யார் யாரிடமெல்லாமோ முதலில் பல்லைக் காட்டினார். சாப்பாட்டுக்கு லாட்டரியடித்த சேகரிடம் சினிமா சம்பந்தப்பட்ட சிலர் 'உனக்குக் கன்னத்தில் சதை உப்பித் தெரியவில்லையே?' என்று குறைப்பட்டுக் கொண்டார்கள். எங்கே உப்புவது? சென்னைக்கு வந்த புதிதில் கன்னம் இரண்டும் உப்பிச் சிரித்தால் குழி விழும். இப்போது கன்னம் இரண்டும் உள்ளே போய்ச் சிரிக்காமலேயே குழி விழுந்து கிடந்தது. அவரே தனக்குத் தானே பறித்துக் கொண்ட குழி அல்லவா இது?

சில்க் ஜிப்பா, பைஜாமா, பளபளக்கும் ஷூ, மைனர் செயின், இடது கையிலும் வலது கையிலும் இரண்டிரண்டு மோதிரங்கள். இவற்றோடு ஒரு மலேயா சைக்கிளில் உட்கார்ந்து காலைத் தரையில் ஊன்றிய வண்ணம் சிகரெட் வாங்கிக் கொண்டிருந்தார் ஒருவர். செயினில் தொங்கிக் கொண்டிருக்கும் தங்கப் பூண் பிடித்த புலிப்பல்லை நாலு பேர்கள் பார்க்க வேண்டும் என்பதற்காகவே ஜிப்பாவில் பொத்தானை மாட்டாது திறந்து விட்டிருந்தார். வாசலில் நின்று கொண்டிருந்த சேகரிடம் பக்கத்து வீட்டுக்காரர் வந்து இந்தச் சைக்கிள் மனிதரைச் சுட்டிக்காட்டி, 'இவரை எப்படியாவது நீ பிடித்து விட்டால் சினிமாவில் நுழைந்து விடலாம். அநேக பட முதலாளிகளுக்கும் இவருக்கும் தொடர்பு உண்டாம்' என்று கூறி வைத்தார். நடிகர் சேகரும் அவரை நன்றாகப் பார்த்து வைத்துக் கொண்டார்.

பத்து நாட்கள் கழித்துப் பொருட்காட்சி மைதானத்தில் இதே பெரிய மனிதரைச் சந்திக்கக்கூடிய பாக்கியம் சேகருக்குக் கிடைத்தது. நடிகர் நாணிக்கோணிக்கொண்டு ஒரு பெரிய கும்பிடு போட்டார். அதைப் பெருமையாக வாங்கிக் கொண்டு நகரும் போதே பெரிய மனிதர் காதில் 'உங்களைத்தான் பார்க்க வந்தேன்' என்று ஒரு வார்த்தையை மெதுவாகப் போட்டார் நடிகர்.

''நான் சினிமாவில் நடிப்பதற்காகக் கும்பகோணத்திலிருந்து இங்கு வந்திருக்கிறேன். தங்களைப் பார்த்தால் சந்தர்ப்பம் கிடைக்கும் என்று சொன்னார்கள்'' என்று கூறி முடித்த வேகத்தோடு தலையைச் சொறிந்து கொண்டார். பெரிய மனிதர் நடிகரை மேலும் கீழும் பார்த்தார்; உற்று நோக்கினார். பின்பு கொஞ்ச நேரம் விண்ணையும் மண்ணையும் பார்த்து நெற்றியைச் சுருக்கிக் கொண்டு கண்ணைச் சிமிட்டி ஏதோ ஆழ்ந்த யோசனையில் ஈடுபட்டார்.

''நடிப்பதென்றால் சுலபமான காரியமல்ல. இன்றைக்கு ஹீரோ என்று பங்களாவும் காருமாக இருக்கும் நடிகர்களெல்லாம் அன்றைக்குத் தலையைக் காட்டுவதற்கே தலைகீழாய் அலைந்தவர்கள்தான். உன்னைப் பார்த்தால் மிகவும் பரிதாபமாக இருக்கிறது. மிகுந்த கஷ்டத்தில் இருக்கிறாய் என்று நினைக்கிறேன். படங்களில் சந்தர்ப்பம் கிடைக்கிற வரையில் என்னிடம் வேலை பார். மாதம் அறுபது ரூபாய் சம்பளம் தருகிறேன். மற்றவர்களைப் போல் சந்தர்ப்பம் கிடைக்கிற வரையில் காத்திருங்கள் என்று சொல்லி விடுவேன். நீ பட்டுக் கொண்டிருக்கிற கஷ்டத்தைப் பார்த்துத்தான் இப்படிச் சொல்கிறேன்!''

இதைக் கேட்டு நடிகருக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அவரிடம் அவருடைய நண்பர்கள் சொல்லியிருக்கிறார்கள், படத்தில் நுழைவதற்கு இது போன்ற சந்தர்ப்பங்களையெல்லாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று. முதலில் சினிமா சம்பந்தப்பட்ட மனிதர்களிடம் ஏதாவது வேலை என்று சேர்ந்து கொள்ள வேண்டும். அப்புறம் 'டபார்' என்று சந்தர்ப்பம் கிடைக்கும் போது சினிமாவில் நுழைந்து கொள்ள வேண்டும். கேள்வி ஞானத்தில் கிடைத்த இத்தியாதி உத்திகள் அவர் ஞாபகத்துக்கு வந்தன.

''ரொம்ப நன்றி சார். இந்த உதவிக்கு நான் என்ன சொல்லணும்னே எனக்குத் தெரியலை சார்.''

''பரவாயில்லை'' என்று ஆசுவாசப்படுத்தி விட்டார் பெரிய மனிதர்.



"சரி, நீ என்னைப் பத்தாம் தேதி மெடிக்கல் காலேஜில் சந்திக்க வேணும். சாயங்காலம் நாலு மணிக்கு அங்கு வருவேன்" என்று சொல்லிவிட்டு நகர்ந்தார். நடிகரும் பொருட்காட்சி வரை அவரைக் கொண்டு போய் விட்டு விட்டு வந்தார். ஆமாம்! அந்தப் பெரிய மனிதருக்குத் தம்மைப் பிடிக்கவேண்டுமென்றால் இந்தக் கூழைக் கும்பிடு எல்லாம் அவசியம்தானே? அவரிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு திரும்பினார் நடிகர் சந்திரசேகரன், தமக்கு வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையில்.

* * *

எப்படியோ அங்கே இங்கே என்று நாட்களைக் கடத்தி ஒன்பதாம் தேதியைத் துரத்தி விட்டார் கலைஞர். பத்தாம் தேதி வந்தது. சூரியனும் உச்சியை விட்டுச் சாய்ந்தான். நடிகர் வைத்தியக் கல்லூரி வாசலில் வந்து காத்திருந்தார். பெரிய மனிதரைக் காண வில்லை. கால் கடுத்தது. காலைவிட மனம் கடுத்தது. பக்கத்தில் ஏதோ மரத்தடியில் அந்தப் பக்கம் கூட்டம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. கொஞ்சம் பொழுதை அப்படிக் கழிக்கலாமே என்று தோன்றியது. அதே சமயம் வேடிக்கை பார்க்கப் போன நேரத்தில் அவர் வந்து விடக் கூடாதே என்ற பயம். சரி இங்கும் அங்குமாக இரண்டு இடத்திலும் பார்வையைப் பதித்துக் கொள்ளலாம் என்று கூட்டத்தை நோக்கிச் சென்றார். கூட்டத்தில் யாரோ ஒருவன் ஏதோ கேலி, கிண்டல்களைப் பேசிக்கொண்டும் சினிமாப் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான். கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன் சென்றார் நடிகர்.

"தம்பி! வந்து விட்டாயா? உன்னைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். தோழர்களே, இன்றிலிருந்து இந்தப் பல்பொடி குமாரன் இந்த இளைஞரைத் தமது அஸிஸ்டெண்டாக நியமித்துக் கொண்டிருக்கிறார். சென்னை நகரின் பல இடங்களிலும் இவரை நமது பல்பொடி டின்களோடும் பாக்கெட்டுகளோடும் பார்க்கலாம். இப்போது இவர் ஒன்றிரண்டு பாட்டுக்கள் பாடுவார்."

நடிகரைப் பார்த்துக் கொண்டும் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டும் பேசினார் பிரபல பல்பொடி விற்பனையாளர் குமாரன். அவருக்கு இந்த வியாபாரத்தில் நல்ல வருமானம். அதோடு சினிமா உலகத்துக்கு ஒரு 'எக்ஸ்ட்ரா சப்ளையர்'. போதாதா இந்த இரண்டு தொழில்கள். அவர் ஏன் நடிகரை அறுபது ரூபாய் சம்பளத்துக்கு வைத்துக் கொள்ள மாட்டார்? அவருக்கு மாதம் வருமானம் ஐந்நூறு வருகிறது என்றால் நம்புவார்களா யாராவது?

நடிகர்தான் நம்புவாரா? சினிமா முதலாளிகளிடம் நடிப்பதற்கு 'சான்ஸ்' கேட்டுப் பல்லைக் காட்டிக் கொண்டிருந்த நம் சேகர் இப்போது பல்பொடி வியாபாரத்துக்காகப் பல்லைக் காட்டிக் கொண்டிருக்கிறார். எப்படியோ? இனிமேலாவது பிழைப்பு நடத்தால் நமக்குச் சரிதானே!

# ரயில் வண்டிப் படிகளில் பிரயாணம் செய்யாதீர்கள்!

வண்டிப்படிகள் பிரயாணம் செய்வதற்காக ஏற்பட்டவையல்ல. ஆனால் ஏனோ இவர்களுக்கு அது தெரிவதில்லை. ரயிலின் நெரியும் கூட்டமா... அல்லது ஒரு அலட்சிய மனப்பான்மையா... அல்லது தம் வீரத்தை வெளிக்காட்டும் வாய்ப்பா? எதுவாயினும் படிக்கட்டுகளில் பிரயாணம் செய்வதற்குக் காரணமே கிடையாது. வண்டிகளில் ஏறும், இறங்கும் பிரயாணிகளுக்குத்தான் இவர்களால் எவ்வளவு தொல்லை?

எல்லாவற்றிற்கும் மேலாக இவர்கள் உயிரே ஊசலாடுகிறது. எதிரே விரைந்துவரும் ஒரு ரயிலோ, பாதையோரத்திலுள்ள கம்பமோ எந்த நிமிடத்திலும் இவர்களுக்கு எமனாக மாறலாம்.

உங்கள் பாதுகாப்பிற்காகவே படிக்கட்டுகளில் பிரயாணம் செய்யாதீர்கள்.



**தக்ஷிண ரயில்வே**

அரைகுறையான நித்திரையிலிருந்து கிழவர் 'விசுக்'கென்று விழித்துக் கொண்டார். மிளகாய்ப் பொடியைத் தூவினது போல் கண்களில் எரிச்சல் எடுத்தது. இரண்டு நயனங்களிலும் இரண்டு ஆள் காட்டி விரல்களை வைத்து அழுத்தித் தேய்த்துக் கொண்டார். ஒரு பசிய இலையைக் கிள்ளியதும் அதன் காம்பில் பால் துளிர்ப்பது போல் கண்களில் இலேசாக ஈரப் பசை தோய்ந்தது. குளிருக்காகத் தலையைச் சுற்றிக் காதுகள் இரண்டையும் மறைத்தபடி கட்டியிருந்த உல்லன் துண்டை அவிழ்த்துக் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

மணி என்ன இருக்கும்?

ஒன்று...இரண்டு...இரண்டரை.... இல்லை, மூன்று இருக்கலாம். கவர்க்கோழிகளின் ஓசை அடங்கி விட்டிருந்தது. எதிர்



# கல்யாணம் வந்தது

டி.கே.டி. துரைராசன்

வீட்டுக் கிழவியிடமிருந்து இருமல் சப்தமும் வரவில்லை. மூன்றரை கூட இருக்கலாம்.

'இந்த இரண்டும் கெட்டான் நேரத்தில் நம் தூக்கம் எப்படிக் கலைந்தது? ஏதோ கனவு கண்டோம் போலிருக்கிறதே!'

நித்திரை போன சிறிது நேரத்துக்குள் கிழவர் ஓர் இன்பமான கனவில் ஆழ்ந்தார். அவருடைய பேத்தி ஞானவியின் கழுத்தில், மூக்கும் முழியுமான ஒரு மாப்பிள்ளை மூன்று முடிச்சுகளைப் போடுகிறான். 'கெட்டி மேளம் கெட்டி மேளம்' என்று கிழவர் கூவுகிறார். அதுவரையில் ஏதோ சிந்தனையில் இருந்த தவுல்காரர் கிழவரது சத்தத்தைக் கேட்டு 'டும் டும்' என்று தோல்கிழிய பலமாக அடிக்கிறார். நாதஸ்வரத்தின் இசை அந்த மண்டபத்தையே தூக்கி அந்தரத்தில் நிறுத்துவது போன்ற பிரமையை எழுப்புகிறது.

அந்தச் சமயம் பார்த்துத்தான் கிழவருக்குக் கனவும் அதைத் தொடர்ந்து நித்திரையும் கலைந்திருக்க வேண்டும்.

அன்று அவர் கண்ட கனவு அதுவரையில் அவருக்கு வந்ததே இல்லை. ஞானவிக்குக் கல்யாணம் நடப்பது இனிமேல் கனவுதான் என்று அவர் பல முறை எண்ணியும், அந்தக் கனவு கூட அன்று வரையில் அவருக்குத் தோன்றியதே இல்லை. ஆனால் அன்று அந்தத் திருக்காட்சியைக் கனவில் கண்டார் அவர். அதன் பொருள் என்ன?

ராணுவத்தில் இருப்பவர்களுக்கு 'சர்வீஸ்' காலத்தைப் பொறுத்துப் பதவி கூடும். அதைப் பொறுத்துக் 'கோடுகள்' கொடுப்பார்கள். கிழவர் ஒரு காலத்தில் ராணுவத்தில் இருந்தவர் என்றாலும் அவருக்கு இந்த மாதிரி 'கோடுகள்' எதுவும் கிடைத்ததில்லை. ஆனால் மணி

தர்கள் செய்யத்தவறிய காரியத்தை இயற்கை மிகச் சரியாகச் செய்தது. நாள் ஆக ஆக—காலம் செல்லச் செல்ல — வாழ்க்கையில் 'சர்வீஸ்' கூடக் கூட வயது கூடியது. அதற்கேற்றபடி உடலெல்லாம் எண்ணற்ற கோடுகளை இயற்கை கொடுத்திருந்தது. அந்தக் கோடுகளெல்லாம் அவரது அந்திமகாலத்தைக் குறித்ததோடு, அனுபவ அறிவுக்கும் சின்னங்களாக விளங்கின.

அந்த அனுபவத்தைக் கொண்டு கர்ண பரம்பரை பரம்பரையாக நம் நாட்டில் கனவுகளுக்குச் சொல்லப்படும் அர்த்தங்களை அடிப்படையாக வைத்து — கிழவர் அன்று தாம் கண்ட கனவுக்கு அர்த்தம் காண்பதில் ஈடுபட்டு விட்டார்.

ஒரே அர்த்தம்தான்!

யார் வீட்டிலாவது கல்யாணம் நடப்பது போல் கனவு கண்டால் அந்த வீட்டில் சாவு விழுமாம்.

விவரம் தெரிந்த நாள் முதல் கிழவர் ஒன்றுக்கு மட்டும் அஞ்சியது




கிடையாது. சாவுதான் அது. அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது மரணத்தின் பிடியிலிருந்து மனிதன் எந்தக் காலத்திலும் தப்ப முடியாது. இரண்டாவது அந்த மரணம் நேர்ந்ததற்குப் பின் மனிதன் எல்லாத் துன்பங்களிலிருந்தும் தப்பிச் சுதந்திரமாக எங்கோ போய் விடுகிறான். இந்த இரண்டாவது காரணத்துக்காக அவர் பல முறை சாவை விரும்பியுமிருக்கிறார். ஆனால் அதெல்லாம் அவர் பேத்தி ருதுவாவதற்கு முன்புதான்.

மொட்டுப் போல் இருந்த ஞானமி பூவாக மலர்ந்து வீட்டில் அழகு மணம் பரப்பத் தொடங்கிய நாள் முதல் அவருக்கு உயிரின் மேல் ஆசையும், சாவின் மேல் வெறுப்பும் வளரத் தொடங்கின. இன்னும் கொஞ்ச நாட்கள் வாழ வேண்டும். அதிக காலம்கூட வேண்டாம். ஒரு பன்னிரண்டு மாதங்கள்...! அந்தப் பேதைப் பெண்ணின் கழுத்தில் ஒரு மஞ்சள் கயிறு விழும் வரையில் நிச்சயம் உயிரோடு இருந்தாக வேண்டும்.

இந்த 'நப்பாசையில்' இன்று வரை அவர் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இருந்து விட்டார். பன்னிரண்டு மாதங்கள் அல்ல. முப்பது மாதங்கள். அவர் எண்ணம் நிறைவேறியதா? நிறைவேறும் அளவுக்கு வந்தது. ஆனால் விதி என்னும் விளையாட்டுக்காரன் வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியை உடைத்து விட்டான்.

கிழவர் சேர்த்து வைத்திருந்த பணத்துக்கு ஆசைப்பட்டுப் பல திடீர் உறவினர்கள் ஞானமியைப் பெண் கேட்டு வந்தார்கள். ஒருவரை யாவது கிழவருக்குப் பிடிக்க வேண்டுமே!

வரன் விஷயத்தில் அவர் தம்முடைய அபிப்பிராயத்தை முன்னால் வைத்து ஞானமியின் அபிப்பிராயத்தைப் பின்னுக்குத் தள்ளி விட்டார். "அதுக்கென்ன தெரியும்? சிறுசு... நாம்தான் நாலு பேரில் நல்லவனைப் பார்த்து ஒருவனைப் பொறுக்கியெடுக்க வேண்டும்" என்று தமது பொறுப்பைப் பெரிசு படுத்திக் கொண்டார். கடைசியாக அவருடைய விருப்பத்துக்கு ஏற்றாற் போல் ஒரு நல்ல வரன் வரத்தான் செய்தான். கிழவருக்கு அவனை ரொம்பவும் பிடித்து விட்டது. தனது ஏகபோக ஆஸ்தியில் — அதிகம் ஒன்றுமில்லை; ஓர் எட்டாயிரம் ரூபாய் இருக்கும். — பாதியை நகை நட்டாகவும், மீதியில் கொஞ்சம் சீதனமாகவும், மிச்சம் இருப்பதைக் கல்யாண காரியங்களுக்காகவும் செலவிடத் தீர்மானித்தார். ஆனால் அதே சமயத்தில் கடவுளின் தீர்மானம் வேறு விதமாக இருந்ததை அவர் அறியவில்லை.

நிச்சயதார்த்தம் நடப்பதற்கு ஓரிரு நாட்களுக்கு முன்பு மாப்பிள்ளை வீட்டாரிடமிருந்து முகத்தில் அறைந்தாற்போல் ஒரு கடிதம் வந்தது. — கல்யாணத்தைக் கொஞ்ச நாட்கள் தள்ளிப்போட நினைத்திருப்பதாக. கல்யாணப் பேச்சுக்களில் இந்த மாதிரியான சால் ஜாப்புக்களுக்கு என்ன அர்த்தம் என்று தெரியாதவரல்ல கிழவர். கடிதத்தைப் பார்த்த கையோடு ஒரு வாடகைக் கார் அமர்த்திக் கொண்டாவது மாப்பிள்ளையின் ஊருக்குப் போய் வரலாமா என்று நினைத்தார். ஆனால் தாமே நேரடியாக மாப்பிள்ளை வீட்டாரிடம் போய் மோதுவது உசிதமில்லை என்று நினைத்துத் தமக்கு நம்பகமான ஆட்களிடம் சொல்லி விவரம் அறிந்து வர அனுப்பினார்.

வினை வெட்டப் பூதம் புறப்பட்டது.

கிழவர் அனுப்பிய அந்த நம்பகமான ஆட்கள் திரும்பி வந்து, "ஞானமியைப் பற்றி யாரோ கதை கட்டி விட்டிருக்கிறார்கள் போலத் தெரிகிறது. அதனால்தான் மாப்பிள்ளை வீட்டார் இப்பொழுது பின்தங்கி விட்டார்கள்" என்று பட்டும் படாமலும் விவரத்தைச் சொன்னார்கள்.

இடிந்துபோன கிழவர் அன்று ஆற்றாது அழுது புலம்பிய கண்ணீரின் அளவு உலகுக்குத் தெரியாது. 'தன் பேத்தியின் வாழ்வு' என்று கூடச் சொல்லாமல் 'ஒரு பெண்ணின் வாழ்வைக் கெடுத்த பாவிகள் யாராக இருந்தாலும் அவர்கள் குடும்பம் சீரழியத்தான் போகிறது' என்று உள்ளுக்குள் சபித்துக் கொண்டார்.

பட்டாளத்தில் இருந்து பழக்கப்பட்டவர் ஆதலால் அந்தப் பேரிடியை அவரால் கொஞ்ச நாட்களுக்குத் தாங்கிக் கொள்ள முடிந்தது. இன்னும் சிறிது நாட்கள் கழிந்து "வாழ்க்கை என்றால் நல்லது கெட்டது வரத்தான் செய்யும். நம் பேத்திக்கு என்று கடவுள் ஒருவனைப் படைக்காமலா போயிருப்பான்?" என்று தமக்குத் தாமே தைரியம் சொல்லிக் கொள்ளவும் முடிந்தது.




"ஏண்டா சீனு? இந்துவோடு என்னடா தகராறு அங்கே?"

"பார்டர் தகராறுதான் அம்மா! அவளுடைய புடவை பார்டர் எனக்குப் பிடிக்கல்லேன்னேன்.....அதுக்கு என்மேல் எகிறுக விழுறா!!"

ஆனால் அந்தத் தைரியமும் மானசிக ஆறுதலும் கிழவர் மனத்தில் நெடுநாட்களுக்கு நிலைத்திருக்கவில்லை. ஊரில் ஒரு கல்யாண ஊர்வலமோ, நாதஸ்வரக் கச்சேரியோ, ஒலிபெருக்கிப் பாட்டோ இருந்து விட்டால் போதும், கிழவர் மனம் ஒரு முறை அழுது புலம்பி விட்டு நிற்கும். அந்தப் புலம்பலுக்கு இடையிலும் நாதஸ்வரக் கச்சேரியும், ஒலிபெருக்கிப் பாட்டும் ஒரு நாள் தம் வீட்டுக்கு வராமலா போகும் என்ற ஆசையும் இழையோடும். ஆனால் அந்த ஆசை இன்று வரை நிராசையாகவே போய்விட்டது.

கட்டிலில் உட்கார்ந்திருந்த கிழவருக்குத் தூக்கம் இறக்கம் அடியோடு போய்விட்டது. கூடத்தில் ஞானலி எழுந்து உட்கார்ந்திருந்தாள். வெளியில் தண்ணீர் தெளிக்கும் சத்தம் அரை குறையாகக் கேட்டது. 'ஞானலி, ஞானலி' என்று கிழவர் இருமுறை அழைத்தார்; பதில் இல்லை. உட்கார்ந்தபடியே உறங்குகிறாளா? பொழுது விடியப் போகிறது என்ற உணர்வு வந்ததும் பெண்கள் எப்படியோ எழுந்து உட்கார்ந்து கொள்கிறார்கள்.

போர்வையை உடம்பு முழுக்க நன்றாகப் போர்த்திக் கொண்டு கிழவர் வெளியில் வந்தார். உலகத்தை மெல்லிய மஸ்லின் துணியால் மூடியிருந்தது போல் பனி மூட்டம் இருந்தது. அன்று கண்ட கனவுக்கும்-அந்தப் பனிமூட்டத்தைப் பார்ப்பதற்கும் அவருக்கு என்னவோ செய்தது. இத்தனை நாட்களும் அவர் அந்தப் பனி மூட்டத்தைப் பார்த்து வந்தவர்தான். அப்போதெல்லாம் எந்த நினைவும் அவருக்கு வந்ததில்லை. ஆனால் அன்று சரியாக அடையாளம் தெரியாத நாலைந்து உருவங்கள் அந்தப் பனிப் படலத்துக்குள் நின்று கொண்டு அவரை அழைப்பது போல் தோன்றியது? இந்த விபரீதக் காட்சிக்கும்-பயங்கரமான தோற்றத்துக்கும் என்ன அர்த்தம்?

ஒரே அர்த்தம்தான்... சாவு!

விளக்குமாறும், பாத்திரத்தில் தண்ணீருமாக ஞானலி வெளியில் வந்தாள். 'தளப்... தளப்' என்று ஓசை எழுகிற மாதிரி வாசலில் நீரைத் தெளித்தாள். பிறகு விளக்குமாற்றை இறுகப் பிடித்துக் கூட்டினாள். புழுதி பறந்தது. திண்ணையில் உட்கார்ந்திருந்த கிழவரை அவள் அது வரையில் கவனிக்கவே இல்லை. அவருடைய இருமல் சத்தத்தைக் கேட்டு, "என்ன தாத்தா, தூங்கலியா?" என்று கேட்டாள். தாற்காலிகத் தூக்கத்தை விட்டு நிரந்தரத் தூக்கத்தைப்பற்றிக் கவலை கொண்டிருந்த கிழவர் அதற்குப் பதில் சொல்லவில்லை. பார்வையும் கவனமும் ஆகாசத்தில் லயித்து நின்றன. உருவமில்லாமல் அங்கு உலவிக் கொண்டிருக்கும் ஆவிகளோடு அவருடைய ஆவியும் என்றைக்கு ஒன்றாகக் கலக்கப் போகிறதோ?

இருளில் மூழ்கியிருந்த உலகம் ஒளியைக் கண்டதும், காணமற் போன பொருளைக் கண்டெடுத்த குழந்தையைப் போல் கொஞ்சம் கொஞ்சமாக ஆரவாரிக்கத் தொடங்கியது. ஆனால் அதில் கிழவர் பங்கேற்கவில்லை. 'பொழுது எப்போது நன்றாக விடியும், தெருக் கோடியில் வழக்கமாக வந்து உட்காருகிற குருவி ஜோஸ்யக்காரன் எப்போது வந்து சேருவான்?' என்பதிலேயே அவருடைய சிந்தனை இருந்தது.

ஃ ஃ ஃ

**வ**ழுவழுவென்று மொக்கையாகத் தேய்ந்து போன ஒரு ஐந்து நயா பைசாவைக் கிழவர் குருவி ஜோஸ்யக்காரனிடம் நீட்டினார்; அவரும் ஏறத்தாழ ஒரு கிழவரே. அந்தக் காசை இரண்டு கண்களிலும் ஒத்திக் கொண்டு கிளியைத் திறந்து விட்டார். வெளியில் வந்த அந்தப் பறவை ஒரு முறை தனது சிறகை உகப்பிக் கொண்டு ஓர் அட்டையை அலகால் கவ்வி எடுத்துத் தன் எஜமானரிடம் கொடுத்து விட்டு அவர் தரவேண்டிய ஒரு நெல் மணிக்காகக் காத்திருந்தது. அதைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் ஜோஸ்யக்காரர் அட்டையை விரித்தார்.

மண்டையோட்டு மாலையும், சூலாயுதமுமாகப் பத்திரகாளி படம் வந்தது.

ஜோஸ்யக்காரர் அந்தப் படத்தைக் கிழவருக்குக் காட்டி, "நல்ல சகுனமாகப் படலில்லே" என்று சொல்லி விட்டு, எதிலும்

சேராத ஒரு ராகத்தில், 'அப்பனே கேட்பாய்!' என்று அந்த அட்டையில் எழுதியிருந்ததைப் பாட ஆரம்பித்தார்.

கிழவருக்கு ஒரு கணம் நெஞ்சு அடைத்து விட்டது. படத்தைப் பார்த்தாரோ இல்லையோ அப்படியே கீழே தரையில் உட்கார்ந்து விட்டார். சாவு மிகமிகச் சமீபத்தில் வந்து விட்டது என்று அவருக்குப் பட்டது. இல்லா விட்டால் அந்தக் கனவை உறுதிப் படுத்துகிற மாதிரி இந்தப் படம் வருமா?

நெல் மணிக்காகக் காத்துக் கொண்டிருந்த கிளி வெறுத்துப் போய்ப் பெட்டிக்குள் புகுந்து கொண்டு படபட வென்று தன் சிறகை அடித்தது. பிறகு தனது வலது கால் விரலால் அலகைச் சொறிந்து விட்டுக் கொண்டு, ''நீங்களுமாயிற்று ... உங்கள் வாழ்க்கையுமாயிற்று'' என்று சொல்வது போல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டது. விடிந்தும், விடியாத காலை நேரத்தில் அந்தப் படத்தைப் பார்க்க அதற்கும் என்னவோ மாதிரிதானிருந்தது போலும்!

சலக் கலையோடு கிழவர் வீட்டை நோக்கி நடக்கலானார். 'ஏன்டா குருவி ஜோஸ்யனிடம் வந்தோம்' என்று ஆகி விட்டது அவருக்கு. அந்திம காலம் நெருங்கி விட்டதா? நிறை வயதுப் பெண்ணைத் தனியாக விட்டு விட்டு நெடுந் தூக்கம் போடப் போகிறோமா? தத்துவ ஞானங்கள், வேத விசாரங்கள் எல்லாம் அவர் நினைவுக்கு வந்தன. வந்த காரியம் முடிந்ததும் உயிர் தானாகப் பிரிந்துவிடும் என்பார்களே — காரியம் முடியவில்லை. அதற்குள் வாழ்க்கை முடிந்து விடுமா?

தகதக வென்ற சூரிய வெளிச்சம் பட்டும் அவர் உடல் நடுங்கத் தொடங்கியது. ஏதோ காற்றில் நடப்பது போல் சுயநினைவு இல்லாதவராக வீட்டுக்கு வந்து கட்டிலில் சாய்ந்து கொண்டார்.

கன்னங் கரேலென்ற பூனையொன்று கிழவரின் கட்டிலுக்கு அருகில் வந்து நின்று கொண்டு 'மியாவ்... மியாவ்' என்று கத்தியது. கிழவர் அதைச் 'சூ....சூ' என்று தீனக் குரலில் விரட்டினார். அது போகிற வழியாகத் தெரியவில்லை. உடனே ஜானகியை அழைத்தார். 'இதோ — இதை விரட்டு அம்மா' என்று கூறினார்.

எதை விரட்டுவது என்று ஜானகிக்கு விளங்கவில்லை.

''இதோ — இந்தப் பூனை உயிரை வாங்குகிறது பார்!''

''தாத்தா! இது நம்ப பூனை'' என்று சொல்லி விட்டு ஜானகி அந்தப் பூனையைப் பார்த்து 'மியாவ்' என்றாள்.

''விரட்டு என்றால் விரட்டேன். எனக்கு அதைப் பார்க்கவே பயமாக இருக்கிறது'' என்று சொன்னபோது கிழவர் அழுதுவிட்டார். ''எதற்குத் தாத்தா அழுகிறீர்கள்?'' என்று ஜானகி சுபாவமாகக் கேட்டாள்.

அடுப்பங்கரையில் பலகாரம் தீய்ந்து போகும் வாசனை வந்தது.

கிழவர் ஜானகியைக் கட்டிலில் உட்கார வைத்துக் கொண்டு ''நான் சொல்வதையெல்லாம் பயப்படாமல் கேட்க வேண்டும்'' என்று ஆரம்பித்து, தாம் கண்ட கனவைப் பற்றியும், குருவி ஜோசியக்காரன் காட்டிய படத்தைப் பற்றியும் தம்முடைய மனக் கிலேசத்தைப் பற்றியும் அடுத்தடுத்து விளக்கினார். சேர்த்து வைத்திருக்கும் பணத்தை யார் யாரிடம் நம்பகமாகக் கொடுத்து வைத்திருந்தாரோ அவர்களுடைய பெயர்களையெல்லாம் சொன்னார். ஒரு சமயத்தில் அவர் குரல் தீனமாகவும் மறு சமயத்தில் தீட்சண்யமாகவும் இருந்தது.

அதையெல்லாம் கேட்ட ஜானகி கிழவரின் ஒடுங்கிப் போன மார்பில் தனது முகத்தைப் புதைத்துக் கொண்டு 'ஓ'வென்று அழத் தொடங்கினாள். கிழவரின் கண்களிலும் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது.

இவ்விதமாக ஆரவாரமும், புத்துணர்ச்சியும் நிரம்பியிருந்த அந்தக் காலை நேரத்தில் கிழவர் தன் பேத்திக்காகவும், பேத்தி தன் தாத்தாவுக்காகவும் அழத் தொடங்கினார்கள்.

ஃ ஃ ஃ

பொழுதெல்லாம் போய் நன்றாக இருட்டிவிட்டது. ஜானகி காலையில் ஆசையாகச் செய்த பலகாரங்கள் சில்லிட்டுப் போய் விட்டன. கிழவரோ, ஜானகியோ அதைக் கையாலும் தொடவில்லை.

துடைக்காமல் கொள்ளாமல் ஜானகி விளக்கை ஏற்றி வைத்தாள். 'மினுக்—மினுக்' என்ற அந்த விளக்கின் வெளிச்சத்தில் ஜானகி எழுந்தாளோ உட்கார்ந்தாளோ அவளுடைய நிழல் சுவரில் பூதாகாரமாக விழுந்து, அங்கே சூழ்ந்திருந்த பயங்கரத்தை மேலும் அதிகப் படுத்தியது. கிழவர் கண்களை மூடியபடி

## எறும்பு ஊற ....








கட்டிலில் படுத்துக் கிடந்தார். கட்டிலோர மாகச் சற்று நேரம் உட்கார்ந்து கொண் டிருந்து விட்டு ஜானகி அப்படியே கையை ஆதாரமாக வைத்து வெறுமனே படுத்துக் கொண்டாள்.

உலகம் மறுபடியும் இருட் குகையில் உருண்டு விழுந்தது.

பகல் உறக்கத்தினாலும் மன உளைச்சலினா லும், ஜானகியும் அதை விடக் கிழவரும் சோர்ந்து நித்திரை போய் விட்டார்கள். வீட்டு உத்தரத்தைப் பார்த்தபடி கிழவரின் பொக்கை வாய் 'ஆ'வென்று திறந்து கிடந் தது. வாயின் இரு புறங்களிலிருந்தும் எச்சில் வழிந்து கன்னக் குழி வரைக்கும் சென்று அடுத்துள்ள தாவாங்கட்டை மேடு ஓரமாகக் கீழ் நோக்கிக் குரல்வளைப் பக்கம் திரும்பி யிருந்தது. இடது கை இடது மார்பு மீதும், வலது கை கீழே தொங்கி ஜானகியின் தலை மீதும் படிந்திருந்தன. "நான் இருக்கும் வரை அஞ்சாதே" என்று கிழவர் ஜானகிக்குத் தைரியம் கூறுவதுபோல் இருந்தது அது.

சுவர்க் கடிகாரம் 'டண் ... டண்' என்று கணக்கில்லாமல் அடித்து ஓய்ந்தது. ஆனாலும் மணி என்னவோ ஒன்றுதான்.

கிழவர் கனவு கண்டு கொண்டிருந்தார்.

அந்த அறையில் ஒரு சிறு குத்து விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. அங்கங்கே ஊதுவத்திகள் புகைந்து கொண்டிருக்கின் றன. கிழவரைச் சுவர் மீது சாய வைத்து, அவருடைய இரண்டு எலும்புக் கால்களையும் நெடுக நீட்டி விட்டிருக்கிறார்கள். தலை, பக்க வாட்டில் சாய்ந்து விடாதபடி கையகலத் துணியை மோவாய்க்குக் கீழே கொடுத்து இரண்டு பக்கங்களையும் சுவரில் ஆணியால் அடித்திருக்கிறார்கள். நெற்றியில் திருநீற்றை அப்பி அதன் மேல் காலணா அளவுக்குக் குங் குமப் பொட்டு வைத்திருக்கிறார்கள். கழுத் தில் பெரிதாக ஒரு மாலை.

ஆமாம். கிழவர் இறந்து விடுகிறார்.

பிணக்களம் களைகட்டியிருக்கிறது. இரண்டு மூன்று பெண்கள் அவரைச் சுற்றி உட் கார்ந்து உச்ச ஸ்தாயியில் அழுதுகொண் டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய குரல் களை யெல்லாம் விட ஜானகியின் ஓலம் தீட் சண்யமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

"தாத்தா! என்னை விட்டு விட்டுப் போய் விட்டீர்களே!" என்று பரிதாபமாக அலறிய வண்ணம் அவள் வாயிலும், வயிற்றிலும் 'லபோ—லபோ' என்று அடித்துக் கொள் கிறாள். பிறகு சற்று நேரத்தில் அப்படியே மயங்கி விழுந்து விடுகிறாள்.

கனவு கலைந்து கிழவர் துள்ளி எழுந்தார்: ஒரு நிமிஷம் அவருக்கு ஒன்றுமே உணர்ச்சி யில்லை. பிறகு "ஜானகி, என் கண்ணு!" என்று கூவினார். ஜானகி பதறிப் போய் எழுந்து. "என்ன தாத்தா? .... என்ன தாத்தா?" என்று கிழவரின் கைகால்களைத் தொட்டுப் பார்த்தாள்.

"கனவு கண்டேனம்மா ... கனவு கண் டேன்" என்று ஆவேசம் வந்தவர் போல் கத்தினார் கிழவர். "நான் சாவது போல் கனவு கண்டேன்" என்று ஜானகியை ஆரத் தழுவிக் கொண்டார்.

தூக்க மயக்கத்தி லிருந்த ஜானகிக்கு ஒன்றுமே விளங்க வில்லை.

"கடவுள் நம்மைக் கைவிட மாட்டாருனு தெரியுதம்மா. உனக்கு வெகு சீக்கிரம் கல் யாணம் நடக்கும் பாரேன்" என்று ஏதேதோ சொல்லிக் கொண்டு போனார் கிழவர்.

ஜானகிக்கு இன்னமும் விளங்கவில்லை: எப்படி விளங்கும்? யார் வீட்டிலாவது சாவு நேர்வது போல் கனவு கண்டால் அந்த வீட் டில் கல்யாணம் காட்சி கூடும் என்ற ஐதீக அர்த்தம் கிழவருக்குத் தெரிந்திருப்பதுபோல் அவளுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

* * *

மறு நாள். கிளி எடுத்துக் கொடுத்த அட் டையைக் குறவி ஜோஸ்யக்காரர் விரித்தார்.

மலைமகள் பார்வதியைப் பிரம்ம தேவன் மகேசுவரனுக்குத் தாரை வார்த்துக் கொடுக் கும் படம் வந்தது.

ஜோஸ்யக்காரர் பாடிய பாட்டையும் கவ னியாமல் கிழவரின் ஐம்புலன்களும் படத் தின் மீதே கவனமாக இருந்தன. பார்வதி தேவியின் முகச் சாயல் ஏறக்குறைய ஜானகி யைப் போல் இருப்பதாகக் கிழவருக்குத் தோன்றியது. அவளுக்குத் தகுந்தாற்போல் மகேசுவரனைப் போன்ற ஓர் அழகு மாப் பிள்ளை கிடைக்காமலா போவான்?

## ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

**"எனக்கு இப்போது 55 வயதாகிறது.**

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன. ஆனால் 1943-ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன். 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை வலுவுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

**"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.**

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகிறார்கள். சிகிச்சை பெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன். மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்குப் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்."

---

**"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.**

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார்மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆகலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்திமதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."

**போர்ஹான்ஸ்**

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




GEOFFREY MANNERS & CO., LIMITED

# படித்துப் பாருங்கள்



## பீங்கான்

தேநீர், காப்பி அருந்தும் நேரம் வந்தால் பீங்கான் கோப்பைகள் நினைவு வருகின்றன. நவராத்திரிக் கொலுவைப் பீங்கானால் ஆன எத்தனை எத்தனையோ அழகுப் பொம்மைகள் அலங்கரிக்கின்றன. மின்சாரக் கம்பங்கள் மீது கவிழ்ந்திருக்கும் 'இன்சுலேட்டர்' என்னும் பீங்கான் கிண்ணங்கள், நம்மை மின்சாரம் தாக்காமல் இருக்க உதவுகின்றன. இப்பீங்கான் பொருள்கள் எப்படித் தயாரிக்கப்படுகின்றன என்பதை இந்த நூல் சம்பாஷணை மூலம் விளக்க முயல்கிறது. பெங்களூரில் இருக்கும் பீங்கான் தொழிற்சாலைக்கே இட்டுச் சென்று காட்டுவதாக இந்நூலாசிரியர் கற்பனை புரிகிறார். நம் கற்பனைக்கு இன்னும் உரமேற்றிக் கண்ணால் காண்பது போலவே சமைத்திருந்தால், இந்நூல் மேலும் பயனுள்ளதாக அமைந்திருக்கும்.

ஆசிரியர்: வைத்தண்ணா. பிரசுரம்: என். ஸி. பி. எச். பிரைவேட் லிமிடெட், 6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை-2; விலை: ரூ. 1.50.

## விநோத விலங்குகள்

உலகத்தில் உள்ள உயிரினங்களுக்கு ஒரு கணக்கில்லை. இவற்றுக்குப் பெயர் சூட்டி வகைப்படுத்துவது என்பதே சிரமமான காரியம். நம் நாட்டில் உள்ள சில விலங்குகள் வேறு நாட்டில் இல்லாமல் இருக்கலாம். அங்குள்ள விலங்குகள் நம் நாட்டில் இல்லாமல் இருக்கலாம். ஆனால் மனிதன் நாளுக்கு நாள் அறிவியலில் முன்னேறி வருவதற்குக் காரணம், எதைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவனுக்குக் கட்டுக்கடங்காமல் இருப்பதுதான். இச்சிறு நூலில் ஆறு வகை விநோதப் பிராணிகளைப் பற்றி ஆசிரியர் பாலருக்கும் விளங்கும் வண்ணம் எழுதியுள்ளார். ஒட்டகம், கங்காரு என்னும் விலங்குகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பது மட்டுமின்றி, காட்சிச் சாலைகளில் கண்டும் இருக்கிறோம். ஒட்டகத்தின் இனத்திலேயே லாமா, அல்பாகா, குவானகோ, விகூனியா என்பவை பற்றி அறிந்திருக்கிறோமா? கங்காருவிலும் எத்தனையோ வகைகள்! வொம்பாத் என்னும் சோம்பன், குட்டி போட்டுப் பால் கொடுக்கும் பிளாடிபஸ், —இதனைப் பறவையா மிருகமா என்று அறுதியிட்டுக் கூற முடியாது - இப்படி எத்தனை எத்தனையோ வகை உயிரினங்கள் உள்ளன. இந்த நூல் உயிரினங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தை வளர்க்கப் பெரிதும் பயன்படக் கூடும்.

ஆசிரியர்கள்: கல்வி கோபாலகிருஷ்ணன், வி. ஆர். ஆர். மணி; பிரசுரம்: உமாதேவன் கம்பெனி, தேனாம்பேட்டை, சென்னை - 18; விலை: ரூ. 1.50.

## தென்மொழிகளில் பழமொழிகள்

பேசும் மொழி பலவற்றுக்கும் பெருமை சேர்ப்பவை பழமொழிகள் ஆகும். மிகக் குறைவான சொற்களில், அழுத்தமான, ஆழமான பொருளைத் தரும் சக்தி இந்தப் பழமொழிகளுக்கே அதிகம் உண்டு. உதாரணமாக, 'மெய் சொல்லிக் கெட்டாரும் இல்லை, பொய் சொல்லி வாழ்ந்தாரும் இல்லை' என்னும் பழமொழியை எடுத்துக் கொள்ளுங்கள். எத்தனை அனுபவங்களுக்குப் பின் இந்த ஆராய்ச்சியும் முடிவும் ஏற்பட்டிருக்க வேண்டும்? இம்முடிவு ஒரு குறிப்பிட்ட மனித சமூகத்துக்கோ குறிப்பிட்ட மொழி பேசுவோருக்கோ மட்டுமா பொருந்தும்? எல்லாச் சமூகத்தவருக்கும் எந்நாட்டவருக்கும் பொருந்தும் அல்லவா? இந்தப் பொருள் தரும் பழமொழி பெரும்பான்மையான மொழிகளிலும் வழங்கிவருகிறது. இத்தகைய பழமொழிகளில் சிலவற்றை அகர வரிசைப்படி சேகரித்து, தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் அவற்றுக்கு ஈடாக வழங்கிவரும் பழமொழிகளையும் சேர்த்து வெளியிட்டுள்ளார்கள், தென்மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் சாம்ராஜ் பிரசுரத்தினர். இப்படி நான்கு மொழிகளையும் ஒப்பிட்டுத் தயாரிக்கப்பட்டிருக்கும் இந்நூல், பழமொழி அகராதியாகப் பயன்படக் கூடும்.

பிரசுரம்: சாம்ராஜ் பிரசுரம், 14, பூந்தமல்லி ஹைரோடு, பெரியமேடு, சென்னை-3; விலை: ரூ. 1.95.

## கனவும் அதன் பலனும்

இந்த வாழ்க்கையைப் பற்றி 'யோசிக்கும் வேளையில் பசி தீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்' என்றார் தாயுமானசுவாமி. மனிதன் இல்லாத பல ஆசைகளை மனத்தில் வளர்த்தால் அது உறங்கும் பொழுது கனவாய்ப் பரிணமிக்கிறது என்கிறார்கள் கனவு ஆராய்ச்சி வல்லுனர்கள். நினைத்தே பார்க்காத சில எண்ணங்கள்கூடக் கனவாகத் தோன்றுவதைக் காண்கிறோம். ஆனால் அவற்றின் அடிமுடி தெரியவில்லை. நம் நாட்டில் வியாச பகவான் வடமொழியில் இப்படித் தோன்றும் கனவுகளுக்குப் பலனைகூடச் சொல்லியிருக்கிறாராம். அவற்றை அகர வரிசைப்படி திரு எம். கே. சபாபதி அவர்கள் தொகுத்துத் தந்துள்ளார்கள். தேநீர், காப்பி முதலிய பானங்கள் அருந்துவதாகக் கனவு கண்டாலும் அதற்கான பலன்களையும் வியாசர் சொல்லியிருக்கிறாரோ இல்லையோ, நாம் இந்நூலில் காணலாம். இந்நூலில் கூறப்படாத கனவுகளைக் கண்டால்...? அவற்றின் பலன்களுக்குக் கனவு கண்டு கொண்டிருக்க வேண்டியதுதான்.

கிடைக்குமிடம்: எம். கே. சபாபதி, 8, முத்துகிருஷ்ண முதலித் தெரு, மயிலாப்பூர், சென்னை-4; விலை: ரூ. 1.50.

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

அன்றாடம் அணியும் ஆடைகளுக்கு

# அத்தனை வெண்மையும் பொலிவும்

# அளிப்பது ஸன்லைட்




அன்றாடத் துணிகளுக்கா அத்தனை
புதுமைமிகு தூய்மை? அத்தனை வெண்மையும்
பொலிவும்? 'ஆம், ஆம்' என்கிறது ஸன்லைட்
சலவை. இல்லத்திலே சலவை செய்ய
எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது...

**ஸன்லைட் — நுரைவளமுள்ள தூய்மையான சோப்.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

S. 33-X52 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon